திருப்புத்தூர்

# அருள்மிகு
# பூமாயி அம்மன்
# கோயில்






## திருக்குட நீராட்டுச்
## சிறப்பு மலர்

**21-6-81**



63-1

# அருள்மிகு பூமாயி அம்மன் கோயில்

# திருப்பணிக் குழு

புரவலர் :

அருள் மாமணி - கலைவள்ளல்

திரு. நா. ஆறுமுகம் பிள்ளை, A. M. N.

தலைவர் & பொருளாளர் :

திரு. நா. ஆறு. நாகராஜன்

உபதலைவர் :

திரு. கா. கணேச பிள்ளை

செயலாளர் :

திரு. தே. சீதாராமன்

இணைச் செயலாளர் :

திரு. ஏ. சோமசுந்தரம் சேர்வை

உறுப்பினர்கள் :

திரு. வயி. நாராயண பிள்ளை

,, பழ. முத்துக்கருப்பன் அம்பலம்

,, மா. சுப்பையா அம்பலம்

,, ச. சேது, B. Com.,

,, டி. கே. எஸ். முத்தழகு சேர்வை

,, கா. காத்தமுத்து

,, நா. பாலுச்சாமி சேர்வை

,, ச. கருப்பையா பட்டர்

,, எஸ். ராஜகோபாலய்யர்





பழம் பெருமை வாய்ந்த திருநகராம் திருப்புத்தூரில் இராசகோபுரத்தோடமைந்த திருக்கோயில் ஒன்று காண வேண்டுமென்று பெருமதிப்பிற்குரிய என் தந்தையார் கலைவள்ளல் உயர்திரு N. T. S. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் நீண்ட நாட்களாக எண்ணிக்கொண்டிருந் தார்கள்.

அவர்கள்தம் தூய எண்ணம் இன்று செயற்பட்டு மலர்ந்து நிற்கிறது. இராச கோபுரத்தோடு எழில் நிறைந்து காட்சியளிக்கும் அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோயிலைக் காண்பார் நெஞ்சம் களிபேருவகை கொள்கிறது.

அருள் பொழியும் திருநோக்கும் அழகொழுகும் திருக்கோலமும் கொண்டு எழுந் தருளியுள்ள அருள் மிகு பூமாயி அம்மனின் திருவருளால் திருப்புத்தூர் புதுப் பொலிவு பெறும் என்ற நம்பிக்கை அடியவர் உள்ளமெலாம் நிறைந்து வழிகிறது.

திருக்கோயிலின் தோற்றமும் அம்மனின் ஏற்றமும் உள்ளத்தை நிறைக்கும் இந்த வேளையில் இப்பெரிய திருப்பணியில் ஒரு தொண்டனாக ஈடுபடும் பேறு கிட்டியதை எண்ணி எண்ணி என் மனம் இறும்பூதெய்கிறது.

திருப்பணிக் குழுத்தலைவனென என்னை ஆக்கினர். என் ஒருவனாலா இப்பெரிய திருப்பணி நிறைவு பெற்றது? திருப்பணியென்னும் பெரும்பணியில் பங்கு கொண்ட அனை வரையும் என்னுள்ளம் நன்றியுடன் நினைக்கிறது.

திருக்கோயில் திருப்பணித் தொண்டில் பெருமகிழ்ச்சி காணும் மதிப்பிற்குரிய என் தந்தையார் உயர்திரு N. T. S. ஆறுமுகம் பிள்ளை அவர்கட்குத் திருப்பணிக் குழுத் தலைவர் என்ற முறையில் உள்ளம் நிறைந்த நன்றியைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

63-1

திருக்கோயில் சிறப்பாக உருவாகத் தன் ஆற்றலெல்லாங் காட்டிப் பணி செய்து நிறைவாக்கிய ஸ்தபதி K. மாணிக்கம் ஆச்சாரி அவர்கட்கும், ஆகம நெறிப்படி அம்பாளை எழுந்தருளச் செய்து, யாகமும் பூசையும் முறைப்படி இயற்றிக் கும்பாபிஷேகத்தை நிறைவு செய்த சிவாகம மணி, திருவாடானை எம். ஐயாமணி சிவம் அவர்கட்கும்,

அரிய ஆலோசனைகளும், உழைப்பும் தந்தருளிய உயர்திரு M. N. S. T. சிதம்பரம் செட்டியார், M. M. முத்துராமன் செட்டியார் இருவர்க்கும்,

திருக்கோயில் திருப்பணிக்கென எல்லா உதவிகளையும் இயன்றவரை செய்து எங்கட்கு உறுதுணையாக இருந்த அறநிலையத்துறைக்கும்,

அறநிலையத்துறை ஆணையாளர், துணை ஆணையாளர், உதவி ஆணையாளர், பொறியாளர்கள், மற்றும் அத்துறையைச் சார்ந்தவர்க்கும்,

இப் பெரும் பணியில் தம்மை முழுதுமாக ஈடுபடுத்திக் கொண்டு இடைவிடாது, சோர்வு படாது பணியாற்றிய திருப்பணிக் குழுவினர்க்கும்,

திருக்குட முழுக்கு விழாவை யொட்டி அழகான மலரொன்று வெளியிட்ட மலர்க் குழுவினர்க்கும்,

தொடர்ந்து பல சமய, இலக்கிய, கலை நிகழ்ச்சிகளை அமைத்து விழாவை மிகச் சிறப்பான தொன்ருக ஆக்கிய விழாக் குழுவினர்க்கும்,

பொருள் கொடுத்துதவிய பெருந்தகைகட்கும், வாழ்த்துக்கள் வழங்கிய சான்ருேர்க்கும் எல்லோர்க்கும் நான் என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்

**நா. ஆறு. நாகராசன்**

தலைவர்

திருப்பணிக்குழு

# திருக்குட நீராட்டு விழா

## சிறப்பு மலர்க் குழு

தலைவர் :

திரு. நா. ஆறு. தங்கவேலு, B. Com.,

செயலாளர் :

திரு. மு. அய்யாக்கண்ணு, M.A., B.T.,

உறுப்பினர்கள் :

திரு. ச. சவகர்லால், M.A., B.T.,

திரு. இரா. இராசகோபாலன், M.A., M.A.,

திரு. மரு. அரசுரெத்தினம்

திரு. நா. கணபதி, M. A.,

திரு. கரு. ஜனகராஜன், B. A.,

திரு. சே. செல்லப்பன்

திரு. சே. இளஞ்செழியன், B.A.,

# நன்றி நவில்தல்

திருப்புத்தூர்ப் பகுதி மக்களுக்குக் கொடைப்பொருள்களாக, மழலையர் பழகும் மாண்டிஸோரிப்பள்ளி முதல், இளைஞர் பயிலும் கல்லூரி வரை, பல கல்விக் கோயில்களை உருவாக்கிய "*கலை வள்ளல்*" அவர்கள் மக்கள் வாழ்வுக்குச் செந்நெறி காட்டும் '*திரு நெறிச் செல்வ*'ராய், பூமாயி அம்மன் கோயிலைச் சீர்படுத்தி ராஜகோபுரமும் விமானமும் அமைந்த திருக்கோயிலாய் எழுப்பும் திருப்பணியில் தம்மை ஈடுபடுத்திக்கொண்டார்.

'*அருள்மாமணி*' அவர்களின் முயற்சியில் உருவான திருப்பணிக் குழுவுக்குத் தலைமை ஏற்ற என் அண்ணன் *திரு. நா. ஆறு. நாகராஜன்* அவர்களோடு நகரப் பெரு மக்களும் பக்தர்களும், சாதி மத வேறுபாடின்றி, தோளோடு தோள் இணைந்து உழைத்துத் தங்களது இறையன்பின் சின்னமாக அழகான பெருங்கோயிலை எழுப்பியுள்ளார்கள். அவர்களின் உழைப்புக்கு நன்றிச் சின்னமாக ஒரு சிறப்பு மலர் படைத்தளிக்க வேண்டும் என்ற ஆவலில் மலர்க்குழு தோன்றியது.

அக்குழுவில் உறுப்பினர்களாக அமைந்து மலர் வெளியீட்டுக்குப் பெருந்துணையாக இருந்த அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

விழா மலருக்கு வாழ்த்துச் செய்திகள் அனுப்பிச் சிறப்பித்த பெரியோர்களுக்கும், அருமையான கருத்துப்பொதிந்த கட்டுரைகள் கவிதைகள் வழங்கிய அறிஞர் பெருமக்களுக்கும் எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி விளம்பரங்கள் கொடுத்து உதவிய வணிகப் பெரு மக்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

விளம்பரங்கள் பெற்றுத்தரும் பணியில் எங்களுக்குத் துணையாக இருந்த அன்பர்கள் திருவாளர்கள், *து. அருணசலம் பிள்ளை, டி. எம். ராஜகுரு, சுப. கதிரேசன் பிள்ளை, நா. சுப்பிரமணியன், சுப. இராமச்சந்திரன், ந. கணபதி, பி. எஸ். சி., ம. தியாகராஜன், செ. ஜெகந்நாதன், பா. பூமிநாதன், ராஜ். ராஜன், எஸ். இராஜேந்திரன், அ. பாஸ்கர பாண்டியன்* ஆகியோருக்கு என் மனமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

அருள்மிகு பூமாயி அம்மன் திருவுருவப் படத்தைச் சிறப்பாக வரைந்து தந்த ஓவியச் செல்வர் திரு. *எம். சி. ஜெகநாதன்* (பொன்னமராவதி) அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக.

மிகக் குறுகிய காலத்தில் சிறப்பு மலரை அழகு மலராக வெளிக்கொணர உதவிய *திரு. அய்க்கண்* அவர்களுக்கு என் நன்றி.

இரவு, பகல் தொடர்ந்து பணியாற்றி மலரை எழில்பொங்க அச்சிட்டுத் தந்த கணேஷ் பிரிண்டிங் ஒர்க்ஸின் திரு. *எஸ். கண்ணன்*, திரு. *நா. பாண்டியன்*, மற்ற ஊழியர்கள் அனைவருக்கும் என் நன்றி உரித்தாகுக.

அன்புள்ள

**நா. ஆறு. தங்கவேலு**

தலைவர், மலர்க்குழு

## திருக்குட நீராட்டு விழா

## சிறப்பாக நிகழ்வுற....

ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள்

ஸ்ரீ சத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்

ஸ்ரீலஸ்ரீ சிவஷண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

கௌமார மடாலய முருகதாச சுவாமிகள்

ஈசான்ய மடம் கந்தசாமி சுவாமிகள்

இராமநாதபுர ராணி இந்திராதேவி அவர்கள்

மாண்புமிகு ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள்

செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார் அவர்கள்

# வாழ்த்துகிறார்கள்

சிறப்பு மலர்

# சிந்தனை மணம்பரப்ப . . .

ஸ்ரீசத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்
திருமுருக கிருபானந்தவாரியார்
அருள்மாமணி — கல்வவள்ளல் நா. ஆறுமுகம் பிள்ளை
உயர்திரு. நா. மகாலிங்கம்
உயர்திரு எம். ஜயாமணிசிவம்
உயர்திரு. பி. மகேஸ்வர்லால்
உயர்திரு. பா. நமசிவாயம்
உயர்திரு, ச. சவகர்லால்
உயர்திரு. இரா. இராசகோபாலன்
உயர்திரு. சிரலைவாய்த்துறவி
உயர்திரு. சி. சுப்பையா பிள்ளை
உயர்திரு. நா. கணபதி
திருமதி. சசிகலா ரங்கராஜன்
திரு. ம, தியாகராஜன்
திரு. லெ. சந்தனம்
திருமதி. தேவகி வெங்கடேஷ்
திரு. ஜகன்மோகன் சரஸ்வதி
திரு. ரவிசம்பத்
திரு. ஆரார்
திரு. அய்க்கண்

# எழுதுகிறார்கள்

# பராசக்தி அருள் பாலிப்பாள்!

ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் ஸ்ரீமடம் சமஸ்தானம்

காஞ்சிபுரம்

முகாம் : சதாரா 15-5-81.

ஒவ்வொரு காரியமும் செய்வதற்கு ஒவ்வொரு சக்தி நமக்குத் தேவைப்படுகிறது. எல்லாவற்றிற்கும் மேலான சக்தி பராசக்தி. பராசக்தி பல வடிவங்களில் பல கிராம நகரங்களில் அருள் பாலிக்கிறாள். ராமனுதபுரம் மாவட்டம் திருப்புத்தூரில் ஸ்ரீ பூமாயி அம்மன் அருள்பாலித்து வருவதைக் கேட்டு சந்தோஷிக்கிறோம். இக்கோயில் திருப்பணி நடைபெற்று கும்பாபிஷேகமும் நடைபெற இருப்பதைக்கேட்டு மிகுந்து சந்தோஷிக்கிறோம். எல்லா அன்பர்களும் இந்த நற்பணியில் ஈடுபட்டு அம்பாளின் அருளுக்கு பாத்திரராகும்படியாய் ஆசீர்வதிக்கின்றோம்.



# உத்தமன் உறவை உண்டாக்கிக் கொள்க!

ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரும்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள்
அதிஷ்டானம்
புதுக்கோட்டை - 622 001

## அருளாசிச் செய்தி

உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளையவர்களைப் போன்றவர்களின் பெரு முயற்சியும், அன்னாரின் அன்பு நிறைந்த கொடையின் பெருமையுமே அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோயில் திருப்பணி நன்கு அழகுற முடிவுற்ற 21-6-81 அன்று மஹா கும்பாபிஷேகம் நடைபெறுவதற்கெல்லாம் காரணம் முன் செய்துள்ள ஸத்கர் மங்கள் தான் என்று சொன்னால் மிகையாகாது.

திருப்புத்தூரில் நடைபெற்றிருக்கும் தர்மமானது அகில உலகையும் இரட்சிக்கு மென்பதில் ஸந்தேகமில்லை.

திருப்புத்தூரில் உள்ள ஆஸ்திக பெருமக்கள் அனைவரும் மேலும் ஒரு மனத்துடன் திருப்புத்தூர் மக்கள் அனைவராலும் வள்ளல் என போற்றப்படும் உயர்திரு உத்தமன் நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களுடைய உறவை மேலும் மேலும் இடைவிடாமல் உண்டாக்கிக் கொண்டு இப்படிப்பட்ட உத்தமமான நற்பயன்களை யெல்லாம் விடாது செய்துகொண்டு எல்லோரும் இம்மையில் அறம், பொருள், இன்பம், வீடுகளாகிய சதுர்வித புருஷார்த்தங் களுடன் நீடூழி காலம் இருந்துகொண்டு ஸ்ரீ மாதாபுவனேஸ்வரி தேவியின் திருவருளால் பஞ்சமின்றி இருந்து வரவேண்டுமென அனுக்கிரஹிக்கிறோம்.

சுபம்

# பொன்மலராய் விழாமலர் பூக்கவே!

உ

சிவ சிவ

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், காசிமடம்

திருப்பனந்தாள்-612504
(தஞ்சை ஜில்லா)

திருப்பத்தூர் அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோயில் திருப்பணி செய்விக்கப் பெற்று அண்மையில் கும்பாபிஷேகம் நிகழவிருப்பதறிந்து மிக்க மகிழ்ச்சி.

இப்புனிதப் பெரும்பணியில் வள்ளல் திரு நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களின் பணியும் கணிசமாக இருந்தது என்ற செய்தி இனிப்பாக உள்ளது. அவர்கள் கல்விக்கும் கடவுட் பணிக்கும் செய்துவரும் அளப்பரும் சேவைகளைப் பற்றிக் கேள்வியுற்று நாம் பெருமைப்படுவது உண்டு.

நாட்டின் இன்றைய அவசியத் தேவைகளில் ஒன்று ஆலயப் பராமரிப்பு. எண்ணற்ற கோயில்கள் கவனிப்பாரற்றுப் பூஜையற்றுக்கிடக்கின்றன. அவற்றிலெல்லாம் ஆத்திக அன்பர்களின் கவனம் திரும்ப வேண்டுமென்பதையே இந்த நல்ல நாளின் சிந்தனையாக வைக்கின்றோம்.

வள்ளலின் திறம் வளரவும் கும்பாபிஷேகம் பொலிவுறவும், விழா மலர் பொன் மலரெனப் பூக்கவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்திக்கின்றோம்.

சுபம்.

சிவ சிவ



கொற்றவை அருளால் குவலயம் சிறக்கவே!

உ

சிவ சிவ

தவத்திரு.
குன்றக்குடி அடிகளார்

குன்றக்குடி-623206
இராமநாதபுரம் மாவட்டம்
தொலைபேசி (தனது)
காரைக்குடி 215
குன்றக்குடி 27

## வாழ்த்துரை

திருப்புத்தூர் நல்ல திருத்தலம், பல நூற்றாண்டுகளாகப் புகழ் பெற்று விளங்கிவரும் புண்ணியத்திருத்தலம். திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் பாடிப்பரவிய அற்புதத் திருத்தலம். நற்றமிழ்ச் சுந்தரரும் இத்திருத்தலத்திற்கு வந்து இறைவனைப்பாடிப் பரவியதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். ஆதலால் மூவரும் பாடிய திருத்தலம். தலத்தில் எழுந்தருளிய பெருமான் திருத்தளியான். நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி நற்கனகக் கிழி தருமிக்கு அருளிய தலைவன். எனவே மூர்த்தியால் சிறப்புற்ற திருத்தலம். பைரவர் யோக நிலையில் எழுந்தருளியுள்ள திருத்தலம். இச்சந்நிதி இன்றும் நினைப்பவர் கருத்தறிந்து முடிக்கும் அருள்நிறைந்த சந்நிதியாக விளங்குகிறது. 'திருத்தளி' என்று புகழ்பெற்ற தீர்த்தம் சிறப்புடையது. எம்பெருமான் உவந்து அணியும் கொன்றையையே திருத்தல மரமாகப் பெற்றது.

இத்திருத்தலத்தில் பெருமான் கோயிலின் ஆவரணமாக விளங்கும் திருக்கோயில் பூமாயி அம்மன் திருக்கோயில். ஆம்: பூமாயி கொற்றவையாகக் கொலு வீற்றிருந்தருளும் திருக்கோயில்! நாள் தோறும் தம்மை நாடி வருவார்க்கு வாழ்வளிப்பவள்! தனமும் கல்வியும் ஒருநாளும் தளர்வு அறியாத மனமும் தந்து நாளும் வாழ்வளிக்கின்றாள். வஞ்சமில்லாமல் கூடி வாழ்ந்திட அருள் பாலிக்கின்றாள்; உடல்நலமும் அழகும் தந்தருளும் தெய்வமாக விளங்குகின்றாள். தம்மை நாடி வருவோர்க்கு அவரவர் விரும்பும் நல்லனவெல்லாம் அருளிச்செய்யும் அன்னை பூமாயி திருக்கோயில் புதிய பொலிவுடன் கடவுண் மங்கலம் செய்யவிருப்பதறிந்து மிக்க மகிழ்ச்சி. பூமாயி திருக்கோயில் கடவுண் மங்கலம் செய்யப்பெறும் விழா இனிதே நிறைவெய்தத் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

இத்திருப்பணியில் ஈடுபட்ட நா. ஆறு. அவர்கள் குடும்பத்திற்கும் துணை நின்றவர்களுக்கும் நமது வாழ்த்துக்கள்.

இன்ப அன்பு

அடிகளார்

# திருப்பணி நிறைவெய்தத் திருவருள் துணைநிற்க !

## ஸ்ரீ ல ஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக

பரமாச்சாரிய ஸ்வாமிகள்

மதுரை ஆதீனம்,

மதுரை.

### ஆசிமொழி

எல்லாம்வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக. திருப்புத்தூர் வள்ளல் திரு நா. ஆறுமுகம் பிள்ளை தமிழகத்தின் கல்வி வளம் பெருக்கிய பெருந்தகையாளராவர். திருப்புத்தூர் நகரில் உயர்நிலைப் பள்ளியும் கல்லூரியும் எழுப்பியவர். அவரால் அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோயில் திருப்பணிகள் முடிக்கப்பட்டு இராசகோபுரமும் எழுகின்றது என்பதை அறிய அகம் மகிழ்வுறு கின்றோம்.

அறமும் கல்வியும் செழித்துக்கிடக்கும் அத்தலத்தில் உள்ள நாகப்பா மருதப்பா உயர்நிலைப் பள்ளியில் நாம் ஐந்தாண்டுக் காலம் பயின்றிருக் கிறோம். அப்பெருமை நமது ஆறுமுகம் பிள்ளை அவர்களைத்தான் சேரும். சீலமும் தயாளகுணம் நிரம்பிய உள்ளமும் பெற்ற அவரது தருமத் தொண்டுகளை நாம் மிகவும் நன்றாக அறிவோம்.

சைவநூல் பக்தியை வளர்க்க அறக்கல்வி அளித்து ஆறுமுகம் பிள்ளை அவர்களால் திருப்பணிகள் யாவும் செப்பமுடன் நிறைவெய்த எல்லாம் வல்ல ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசப் பெருமானது திருவருள் துணை நிற்குமாக. நிகழ்ச்சி முறைகளும் அவ்வாறே மிகப் பொருத்தமாக அமையும் என நம்புகிறோம். திருக்குட நன்னீராட்டு விழாவானது ஆனித் திங்கள் 7 ஆம் நாள் (21-6-81) அன்று நிகழ இருப்பதும் மகிழ்ச்சிக்குரியது. நாளும் கோளும் நன்முறையில் கூடிய அந்தநுணத்தில் மலர் வெளியிட்டு அருள் மிகு பூமாயி அம்மனின் மகிமையை எடுத்து வைப்பது நன்மைகள் பயக்கு மென்று கூறி இனிதே அவ்விழா முடிய நமது குருமுதல்வர் ஞானசம் பந்தப் பெருமானைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

*ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்*

# திப்பிய அடியவர்க்கு ஒப்பின்றி யருள்வனே !

சிவமயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க

திருக்கயிலாயப் பரம்பரைத் திருக்கோவலூராதீனம், திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீமத் ஞானியார் மடாலய ஏழாங் குருநாதர்

ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள்

## அணிந்துரை

காடா கொன்றோ நாடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!

நிலமே! காடேயெனினும் நாடேயெனினும், பள்ளமேயெனினும், மேடேயெனினும், எவ்விடம் மக்கள் நல்வழி வாழ்கின்றனரோ, ஆங்கு நீயும் 'நல்லை' எனப்புகழப்பெறுகிறாய் எனப்பொருள் தரும் இவ் ஔவையார் வாக்கு, சங்கத்தமிழ் புறநானூற்றில் உளது. அந் நாண்முன் வழக்கே, நிலம் மக்கட் பண்பினதாக்கி வழங்கும் வழக்கு. மக்களின் நன்மை, ஆண்டுள வளமுதலியவாற் பெரும்பான்மை சிறப்பதாம். விளைபொருள், வாணிகம், தொழில் வளம் முதலியவே மக்களின் நாகரிக முதலிய மேம்பட வழியாயிருத்தலின், ஒவ்வொரு ஊரினரும் தத்தம் ஊரை முற்கூறிய மூன்றாலும் வளம்பெறச் செய்ய முந்துவதியல்பு.

யாவற்றிற்கும் அடிப்படை உணவேயாதலின், நீரைத் தேக்கி நிலத்தை வளப் படுத்த முந்துங்கால் மாரித்தெய்வத்தினை ஓர் குறியில் நிறுத்தி வழிபட்டனர். நம் இந்தியப் பெருநிலமெங்கணும் ஆறு, குளம், ஏரி, கால்கரைகளிலெல்லாம் இத்தகைய வழிபாட்டினைக் காணலாகும்.

அடிப்படை நலங்களனைத்திற்குங் காரணமாய இவ்வன்னை ஊர்க்காவல் தெய்வமெனவே போற்றப் பெறுதல் மரபு. அதுவும் ஓர் பெண் தெய்வமெனவே போற்றப் பெறுகிறது உண்மையில் தெய்வம் பால் பிரித்துணரும் உணர்ச்சிக்கு அப்பாற் பட்டதாயினும், இதிகாசமாம் இராமாயணத்தில் இலங்காபுரித் தெய்வமும், சிலப்பதிகாரத்திற் சம்பாபதி-காகந்திஆம் தெய்வங்களும், மணிமேகலையில் மணிமேகலா தெய்வம், கந்திற்பாவை (அல்லது) நாவுடைப் பாவையும் பிறவும் பேசப்படுவது கொண்டு ஓர் ஊரின் காவல் தெய்வம் பெண் தெய்வமாயிருந்தமை தெரியப்படுகிறது.

இன்னும் நம் தமிழ்த் திருநாட்டிலே, சிறந்துள்ள பழைய தேவாலயமேயெனினும், விழாத் தொடங்குமுன், ஊர்த் தெய்வத்தினை முதற்கண் விழாவெடுத்துச் சிறப்பித்தலே மரபாகிறது.

பழமையும் பெருமையும் மிக்கது திருப்புத்தூர். புதுமையும் மேன்மையும் பிறங்குவது திருப்புத்தூர்; நாயன்மார் பலர் திருவடி தோயப்பெற்றது திருப்புத்தூர். 'நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி நற்கனகக் கிழி தருமிக் கருளியவாறே, இந்நாளைய அடிகளாரால் அருளப்பெறுவது திருப்புத்தூர். அது மட்டுமோ? காண இயலாத புலவரும் பிறரும் கண்டு மகிழ வருக என அழைத்து அமுதளித்துத் தன்னையும் தனி வீரபத்திரனையும் காட்டும் திருத்தளியான் எழுந்தருளி நாளும் உணவுப் பொருள், வாணிகம், தொழில் வளம் மூன்றாலும் தம்மிடம் உறையும் மக்களை மகிழ் விக்கும் திருமிகு நல்ல ஊர் திருப்புத்தூர்.

திருவிளையாடற் புராணத்தினும் பயின்றுள்ள இத்திருப்புத்தூரிலே, ஊருணிக் கரையில் எழுந்தருளி அடியவர்க்கருள் பாலிக்கும் அன்னை 'பூமாயி' எனப்பெயரெய்தி யருள்கிருள்.

'மாரி' என்னும் சொல்தான் அடைமொழி பெற்றும், ரகரயகரப் போலியால் ஈற்றெழுத்துத்திரிந்தும் அமைந்த பெயராகலாம். அல்லது, வன்மீகம் (புற்று — மண்) வால்மீகியின் தொடர்பினுல் பூமா + ஆயி = பூமாயி என வழங்கப்பெறுகிறதோ, மாயனின் தங்கை முறையுடைமை காரணமாக (மாயி) எனப்பெற்று பூப்பெயர் பொருந்தியதாற் பூமாயி என்ருயிற்றே, உண்மையறிமுனைவதின்றி ஆன்ருேர் வழங்கி வந்த திருப்பெயரைப் போற்றி அவளைக்குறிக்கொள்வோம். 'எக்குறியிட்டினும், எப் பெயர் விளிப்பினும், திப்பிய அடியவர்க்கு ஒப்பின்றி யருள்வளே.'

தன் திருவடி நிழலெய்துவிக்கக் கருதும் இறை ஓர் உயிரினுக்குச் சத்திநி பாதம் வருவிக்கும். அதாவது அவ்வுயிரினிடத்தே தன் திருவருட் சத்தியைப் பதியச் செய்யும். அப்போதுதான் அவ்வுயிர்க்கு, இருவினையொப்பு, மலபரிபாகம் வந்தெய்தும்.

எனவே இறைவியின் திருவருளிற்றோய்ந்து நலம் பெற்ருர் எவரும் இறையடி நிழலுக்கு அண்மையராவர். இந்த முறையிலே அன்னை பூமாயி திருப்பணியைத் தனி முயற்சியுடன் தொடங்கிய பின், துணை வந்து சேரத் திருப்பணி சிறக்க நிறைவெய்திக் கும்பாபிஷேகமும் நிறைவேறுவது அவளருளே. இத்திருப்பணிகளில் எவ்விதத்திலேனும் பங்கு பற்றுவோர் ஊரவர் அன்பராயினர் யாவரும் எம்மடாலய முதற் குருநாதர் திருவருளாலும், அவர்க்குத் திருவடிதீக்ஷை ஆறுமுறை செய்வித்துப் பிரணவோப தேசமும் செய்வித்த அண்ணல் அறுமுகவேள் திருவருளும் முன்னின்று, நலம் பலவும் நல்குவிக்க என வாழ்த்துகிருேம்.



# மாமாட்சி கொண்ட பூமாயி அருள்கவே !

உ
குருவேதுணை

## தி. செ. முருகதாச சுவாமிகள்

கௌமார மடாலயம்
திருவாமாத்தூர் (அ. நி.) விழுப்புரம்

திருப்புத்தூர் என்னும் திருத்தலம்சம் பந்தர்
திருப்பொலிநா வுக்கரசர் சென்று - விருப்பமுடன்
போற்றலும், வான் மீகமுனி பொற்பாதம் ஊன்றலுமாம்
ஏற்ற புகழுடைய தே.

காமாரி என்றவிர்முக் கண்கொளரன் சத்திகளில்
பூமாயி என்றபெயர் பூண்டங்கு - மாமாட்சி
கொள்ளவுற்ற அம்மைக்குக் கும்பாபி சேகவிழா
விள்ளரிய சீரிலுறு மெய்.

சித்திரைத் திங்கள் திகழும்நவ ராத்திரியில்
பத்தியுடன் அன்பர் பணிந்தேத்திச் - சத்தியெனும்
பூமாயி அம்மனுக்குப் பூச்சொரிவி ழாக்காண்பார்
சீமானு வாழ்வார் சிறந்து.

கோபுரத்தைக் கட்டிக் குலவுகலைக் கல்லூரி
மாபுகழாய்ச் செய்திட்ட வள்ளலார் - காபுரக்கும்
இந்திரனூர் மெச்சும் இசைஆறு மாமுகனூர்
இந்தநிலத் தில்வாழ்க வே.

பூமாயி அம்மன் பூங்கழல் போற்றி!

ஈசான்ய மடம்
திருவண்ணாமலை, R. S.
(வ. ஆ. மாவட்டம்)

உ
குருவே துணை

ஸ்ரீ பூமாயி அம்மன் பூங்கழல் போற்றி!

ஸ்ரீ தேவி பராசக்தியின் இன்னருளால் அருள்மழை பொழிந்துவரும் ஸ்ரீ அம்பாளுக்கு திருக்குட நன்னீராட்டு விழாவும் செய்ய விரும்பிய வள்ளல் திருநெறிச் செல்வர், திருப்புத்தூர் வாசிகளாகிய நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் இம் மலர் நலனுற விளங்க வேண்டுமென்று ஸ்ரீ அண்ணாமலையாரின் அருள் நினைந்து பிரார்த்திக்கிறோம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

கந்தசாமி ஸ்வாமிகள்.

## அம்பிகை வழிபாடு அனைத்து நலன்களும் தரும்

Rani. **INDIRA DEVI**, B. A., Phone No. 303.
Chairman, Palace,
A/M, Ramanathaswamy Temple, Ramanathapuram.
RAMESWARAM

உ
சிவமயம்

இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூர் அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோயில் கும்பாபிஷேக விழாவின்போழ்து இராமநாதபுரம் ராணி ஸ்ரீமதி டி. இந்திராதேவி பி. ஏ. அவர்கள் மனமுவந்து வழங்கிய

## வாழ்த்துரை

தேவார முதலிகள் மூவரில் திருஞான சம்பந்தராலும் திருநாவுக்கரசராலும் தேவாரப்பாடல்கள் பெற்ற திருத்தலமாம் தேனும் வண்டும் திளைக்கும் திருப்புத்தூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோயிலுக்கு ராஜகோபுரம் அமைத்துக் கும்பாபிஷேகம் நடத்தி சிறப்பு மலர் வெளியிட விரும்பும் விழாக் குழுவினர்க்கும், மலர்க் குழுவினர்க்கும் எனது உளம் நிறைந்த மகிழ்ச்சியையும் பாராட்டுதல்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தத் திருப்பணியைத் தொடங்கிய திருப்புத்தூர்க் கலைக்கல்லூரி கண்ட வள்ளல் திருநெறிச் செல்வர் அருள்மாமணி உயர்திரு நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களின் முயற்சி எல்லோராலும் பாராட்டுதற்குரியது.

''அருளது சக்தியாகும் அரன் தனக்கு'' என்ற நமது சாத்திரக் கருத்துப்படி அருட்சக்தியே எல்லா உயிர்கட்கும் அம்மையெனக் கொண்டு வழிபாடியற்றுவது நமது சமயத்தின் கொள்கை. மணிவாசகமும் ''அம்மையே! அப்பா'' என இறைவனை அழைக்கின்றது எனவே இறைவன் அம்மையப்பனாகிறான். அன்னையாகிய பராசக்தி அருளுருக் கொண்டு எல்லா உயிர்கட்கும் தனது கருணையை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறாள். ''அகிலாண்டகோடியீன்ற அன்னையே பின்னையும் கன்னியென மறை பேசும் ஆனந்த ரூப மயிலே'' என்று புகழ்கின்றார் தாயுமானார்.

இன்றைய நாளில் புதிதாக ஆலயங்களைக் கட்டி அமைப்பதை விட, பழம் பெருங் கோயில்களைப் புதுக்கி மக்கள் வழிபாட்டுக்கு உரியதாக ஆக்குவதே அறிவுடைமையாகும். இத் திருப்பணி தாய்க்குச் சேய் செய்யும் பணியென்றல் மிகையாகாது. அம்பிகை வழிபாடு அனைத்து நலன்களும் தரும்.

'' தனம் தரும் கல்வி தரும் ஒருநாளும் தளர்வறியா
மனம் தரும் தெய்வவடிவம் தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனம் தரும் நல்லன எல்லாந்தரும் அன்பர் என்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக் கண்களே ''

கும்பாபிஷேக விழா இனிது நிறைவேறவும், சிறப்புமலர் சீரிய சமயக் கட்டுரைகளைத் தாங்கி மக்களுக்குச் சமய ஞானத்தை வாரிவழங்கும் சிறப்புடையதாய் விளங்கவும் எங்கள் குல தெய்வமாகிய அருள்மிகு ராஜராஜேஸ்வரி அம்பாளின் திருவடிகளை மனமொழி மெய்களால் இறைஞ்சி வாழ்த்துகிறேன்.

வளர்க நம் சமயம்! வாழ்க வையகம்!

இங்ஙனம்,

ராணி டி. இந்திராதேவி பி. ஏ.,

அரண்மனை,

இராமநாதபுரம் சமஸ்தானம்.



# விழா சிறக்க வாழ்த்துக்கள்!



ஆர். வி. சாமிநாதன்

MINISTER OF STATE
MINISTRY OF AGRICULTURE
KRISHI BHAVAN
NEW DELHI - 110001

மே 11, 1981

அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோவிலுக்கு ராஜ கோபுரம் அமைத்து கும்பாபிஷேகம் அடுத்த மாதம் 21ம் தேதி நடத்த ஏற்பாடுகள் நடந்துவரும் செய்தியறிந்து மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன். ஸ்ரீபூமாயி அம்மன் வீற்றிருக்கும் திருப்புத்தூரின் அருமை பெருமைகளை அப்பர் சுவாமிகளும் திருஞானசம்பந்தரும் மிக அழகாகக் கவிதை நடையில் எடுத்துரைத்துள்ளனர். ஆதி முனிவர் வால்மீகி அவர்களும் இம்மாநகரில் வாழ்ந்ததாகச்சரித்திரம் கூறுகிறது. அப்படிப்பட்ட நகரில் அமர்ந்திருக்கும் ஸ்ரீபூமாயி அம்மன் பக்தகோடிகளை எல்லாம் ரட்சித்து வருவது நாமெல்லாம் அறிவோம்.

அந்த அருள் தேவதைக்குக் கும்பாபிஷேகம் நடைபெறுவதை ஒட்டி சிறப்பு மலர் ஒன்றை வெளியிடவிருக்கும் செய்தியறிந்து மகிழ்ச்சி அடைகிறேன். விழா ஏற்பாடுகள் சிறப்புடன் நடைபெற எல்லாம் வல்ல ஸ்ரீபூமாயி அம்பாளை வேண்டுகிறேன்.

ஆர். வி. சாமிநாதன்

## திருநெறிச்செல்வர் பெருமுயற்சி வாழ்கவே !!

Dr. RAJAH
SIR MUTHIAH CHETTIAR
OF CHETTINAD

Chettinad House
Rajah Annamalaipuram
MADRAS-28.

அன்புடையீர்,

அருள்மிகு பூமாயி அம்மன் திருக்கோயிலுக்கு ராஜ கோபுரம் அமைத்து மகா கும்பாபிஷேகம் நடத்த விரும்பிய அருள்மாமணி உயர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களின் முயற்சியைத் தொடர்ந்து, திருப்பணிக்குழு 21—6—81ல் மகா கும்பாபிஷேகம் நடத்த தீர்மானித்திருப்பதும் அதுபோது அவ்விழாவினையொட்டி சிறப்பு மலர் வெளியிட மலர்க்குழு தீர்மானித்திருப்பதும் சாலப்பொருத்தமாகும். அனேக திருப்பணிகளில் பொறுப்பேற்று வெற்றிகண்ட திருநெறிச்செல்வர் நண்பர் ஆறுமுகம் பிள்ளை அவர்களின் பெருமுயற்சியால் இதுபோன்ற பல பல நற்பணிகள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றனவென்பது நாடறிந்த விஷயம். இந்நன்னாளில் அவர்களையும் அவர்கள்தம் குடும்பத்தாரையும் பெரிதும் பாராட்டுகின்றேன். மலர் வெளியிடும் தங்கள் முயற்சி வெற்றிபெறவும், பூமாயி அம்மன் திருக்கோயில் கும்பாபிஷேகம் மிகவும் சீரிய முறையில் நடைபெறவும் பிரார்த்திக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள,

மு. அ. முத்தையா செட்டியார்



# விக்னேஸ்வரர், வீரபத்ரர் சமேத சப்த மாதா ஸ்துதி

1. விநாயகர்

பாசாங்குசம் சூதகபித்த ஜம்பூபலம் திலாபூபவரஞ்ச ஹஸ்தம் |
வந்தே ஸததம் தருஹருஹபம் பிரசன்ன வக்த்ரம் தருணம் கணேசம் ||

*மூலம் :* ஓம் நமோ விக்நாய விக்நராஜகணாய கணருபாய கணபதயே நம : ஸ்வாஹா

2. பிராம்ஹி

பிராம்ஹீம் சதுர்முகீஞ்சைவ பீதவர்ணம் புஜாஷ்டகாம் |
அஷ்டநேத்ர சமாயுக்தாம் ஹம்ஸவாகன ஸம்ஸ்திதாம் ||
கிரீட மகுடோ பேதாம் வஜ்ரகுந்தளமேவச
பீதாம்பர தராஞ்சைவ பீதச்சத்ர ஸுசோபிதாம்
அபயம் வரதஞ்சைவ அக்ஷமாலாந்து குண்டிகாம்
வஜ்ரமாபரணஞ்சைவ ஸர்வாலங்கார சோபீதாம் ||

*மூலம் :* ஓம் நமோ பகவதி ருக்யஜுஸ்ஸாமாதர்வணாக்ஷ
கமண்டுல கூர்ச்சதாரிணி, ஓம்காரமூர்த்திநி
யௌகார ரூபி கவர்க்க ஹ்ருத்தர்ச பஞ்சஷடங்கி
ஹகாரதாரி பரமாக்ஷதாரிணி ஹம்ஸவாஹிநீ
பஞ்ச ஷடாங்கீ ஓம் ஹ்ரீம் ச்ரீம் வராஹ்மியைநம ||

3, மாஹேச்வரி

பஞ்ச வக்த்ரசமாயுக்தாம்தச பாஹுஸமந்விதாம்.
நேத்ரபஞ்சதசஞ்சைவ பஞ்சவர்ணசமப்ரபாம் |
கபாலம் அங்குசஞ்சைவ தண்டஞ்சாபயமுத்ரிகாம்
ஜடாமகுட சம்யுக்தாம் நாகாபரண பூஷிதாம்

ச்வேதாம்பரதராம் தேவிம் ச்வேதச்சத் ரஸுசோபிதாம்
விருஷ வாஹநஸமாயுக்தாம் ஸர்ப்பகுண்டல தாரிணீம் ||
திரிசூல மயம் கட்கம் டமரும் பாச வ்யகே
வாமே அக்ரி கபாலஞ்ச வரதம் கேடமங்குசம்
ஸர்வாபரண ஸம்யுக்தாம் மாகேச்வரீம்யஜேத் ||
மூலம் : ஓம் நமோ பகவதி மாஹேச்வரித்ரியம்பகத்ரிசூல
கபாலதாரிணி வ்ருஷவாஹிநி ஹௌகாரரூபி
டங்கதாரிணி பஞ்சாங்க ஷடங்கி சவர்க்கஹ்ருதயி
ஓம் ஹ்ரீம் ச்ரீம் ர: மாகேச்வர்யை நம:

4. கௌமாரி

கௌமாரீ ரக்தவர்ணாஞ்ச ஷட்வக்த்ராம் பாநு நேத்ரகாம்
த்விஷட்புஜ ஸமாயுக்தாம் மயூரவாஹ நாந்ததா,
ரக்தாம்பரதராஞ்சைவ ரக்தசத்ரஸுசோபிதாம்
சக்திம் சக்ரதராஞ்சைவ கட்க பாசாநலம்ததா |
குக்குடம் குலிசம் கேடம் வரதம்தநு ரங்குசம்
ஸ்வர்ணமாபரணஞ்சைவ ஸர்வாலங்கார சோபிநீம்.
மூலம் : ஓம் நமோ பகவதி கௌமாரி க்ஷகண்டாதாரி
மயூராரூடி ட வர்க்கஹ்தயி லௌகார ரூபி க. காரகலாதாரி,
பஞ்சாங்க ஷடங்கி குங்குமவர்ணி ஹ்ரீம் ச்ரீம் லம் கௌமார்யை நம:

5. வைஷ்ணவி

கிருஷ்ணவர்ணம் த்விநேத்ராஞ்ச ஏகவக்த்ராம் சதுர்புஜாம்
கிருஷ்ணபீதாம்பரதராஞ்சைவ கருடாஸன ஸம்ஸ்திதாம்
கிருஷ்ணச்சத்ரஸுசோபாட்யாம் முக்தஹார விபூஷிணீம்
ஹேமகுண்டல கர்ணேந சங்கசக்ர கதாபயாம்
ஸர்வாலங்கார சம்யுக்தாம் ஸர்வாபரண பூஷிதாம்
மூலம் : ஓம் நமோ பகவதி வைஷ்ணவி சங்க சக்ர கரேதரி
நீலாங்கவர்ண கருடவாஹிநி ஒம்கார ரூபிணி
பஞ்சாங்க ஷடங்கி தவர்க்கஹ்தயி ஹ்ரீம் ச்ரீம் வம்
வைஷ்ணவ்யை நம : |

6. வாராஹி

வக்த்ரம் வராஹ ரூபந்து ஏகவக்த்ராம் சதுர்புஜாம்
அச்வவாஹன சம்யுக்தாம் நீலச்சத்திர ஸுசோபிதாம்
நீலாம்பரத ராஞ்சைவ நீலரத்னேந பூஷிதாம்
சலாக தண்ட மேவந்து கட்க கேடக மேவச.

பூமி பாதாள பேதிந்யாம் ஸர்வாலங்கார சோபிதாம்
மூலம் : ஓம் நமோ பகவதி வாராஹி ஹலமுசலதம்ஷ்டரணி
ஸௌகார ரூபிணி ருகார கலாத்மநி அவர்க்கஹ்ருதயி
பஞ்சாங்க ஷடங்கி காமவர்ண வராஹமுகி ஸிம்ஹ
வாஹினி ஓம் ஹ்ரீம் ச்ரீம் சம் வாராஹ்யை நம :

7. மாஹேந்திரி

இந்திராணீம் ஹேமவர்ணாஞ்ச ஏகவக்த்ராம் சதுர்புஜாம்
ஐராவத கஜாருடாம் ச்யாம சத்ர ஸ்ய சோபிதாம்
சுவர்ணாபரணோர் யுக்தாம் சகஸ்ர நயநாந் விதாம்
வஜ்ர சக்தி கதாகட்கம் ஸரத்ந மகுடோஜ்வலாம்
ரத்ந தாடங்க ஸம்யுக்தாம் த்யாத்வா மாஹேந்திரிரூபகம்
மூலம் : ஓம் நமோ பகவதி இந்திராணி வஜ்ராங்குசதாரிணி
ஸப்த வர்ணாத்மகி ஷௌங்கார ரூபிணி ஓம் ஹ்ரீம்
ச்ரீம் ஷௌம் இந்திராண்யை நம :

8. சாமுண்டீ

தமிஷ்டரவத நஞ்சைவத்ரி நேத்ராஞ்ச புஜாஷ்டகீம்!
வ்யாக்ர வாஹந ஸமாருடாம் மேகவர்ண சரீரிணீம்
நீலச்சத்ரஸ்ய சோபாட்யாம் சர்வாபரண பூஷிதாம்
கர்ணேந ஸ்வர்ணதாடங்கீம் ஸ்வர்ண பந்தன ஸிம்ஸ்திதரம்
ஜடாகூட கிரீடஞ்ச முண்டமாலா ஸ்யதாரிணீம்
அபயம் த்ரிசூலகடகம் கட்கஞ்ச தக்ஷிணேகரே
பாசம் கபால கண்டாஞ்ச கேடகம் வாம பார்ச்வகே
ஸர்வாலங்கார ஸம்யுக்தம் சாமுண்டீ த்யாநரூபகம் ‖
மூலம்: ஓம் நமோ பகவதி சாமுண்டீ த்ரிநேத்ர அஷ்ட
புஜாங்கி சூல கபாலதாரிணி ப்ரேத வாஹினி
ஸௌகாரரூபி ஓம்கார பாவிநீ ஸவர்க்க ஹ்ருதய
பஞ்சாங்க ஷடங்கிநீ ஓம் ஹ்ரீம் ச்ரீம் ஸ்ரீம்
த்ரிநேத்ர கௌசி காங்கிநபம் கம் ஹம் ணம் மும்
ஹ்ரீம் க்ரீம் ச்ரீம் சாமுண்டியை நம:

9. வீரபத்திரம்

நீலநிலாம் பரவர்ணம் விகஸிதவதநம் நீலகண்டத்ரிநேத்ரம்
காலம் காலாக்நி ருத்ரம் கரதலகமலம் கட்கேடம் கபாலாம்
பீமம் பீமாட்டகாசம் த்ரிபுவநவிஜயம் வீரபத்ரம் நமாமி ‖

மூலம் : ஓம் ஈசாநாய விச்வருபாய விமலாத்மனே ஹ்ராம் வீரபத்ர மூர்த்தயே நம:



# தேவி ஸ்துதி

ஸர்வமங்கல-மாங்கல்யே சிவே ஸர்வார்த்தஸாதிகே |
சரண்யே த்ர்யம்பகே தேவி நாராயணி நமோ ƒ ஸ்துதே ||

எல்லா மங்களங்களிலும் மங்களப் பொருளாய் விளங்குபவளே |
எல்லா நன்மைகளையும் அளிப்பவளே ! எல்லா ஆசைகளையும்
பூர்த்தி செய்பவளே ! சரணமடைவதற்குரியவளே !
மூன்று கண்களையுடையவளே ! நாராயணி தேவியே ! உனக்கு நமஸ்காரம்

அளவற்ற விரியம் படைத்த விஷ்ணுவின் சக்தி தேவி !
உலகிற்கு வித்தாகிய மகாமாயையாகிய தேவி ! வைஷ்ணவி !
எல்லா ஜீவர்களுடைய இருதயத்திலும் புத்திவடிவில் உறைபவளும்
சுவர்க்கத்தையும் மோக்ஷத்தையும் அளிப்பவளுமாகிய நாராயணி தேவியே !
உனக்கு நமஸ்காரம்.

ஹம்ஸம் பூட்டிய விமானத்திலுறைபவளே ! பிரம்மாணி வடிவெடுத்தவளே !
கூர்ச்சத்தால் தீர்த்தத்தை புரோக்ஷிப்பவளே ! நாராயணி தேவியே !
உனக்கு நமஸ்காரம்.

மகேஸ்வரி உருவத்தில் முச்சூலத்தையும், சந்திரனையும்
பாம்பையும் தரிப்பவளே ! விருஷபத்தை வாகனமாய்க் கொண்டவளே !
நாராயணி தேவியே ! உனக்கு நமஸ்காரம்

மயிலும் சேவலும் சூழப் பெரிய வேலாயுத்தைத் தரித்துக்
கௌமாரி வடிவு கொண்டவளே ! பாவமற்றவளே !
நாராயணி தேவியே ! உனக்கு நமஸ்காரம்.

சங்கு, சக்கரம், கதை, வில் ஆகிய சிறந்த ஆயுதங்களை ஏந்தி
வைஷ்ணவி வடிவு கொண்ட தேவி நாராயணி !
உனக்கு நமஸ்காரம்.

பயங்கரமான பெரிய சக்கரந்தாங்கித் தெற்றிப் பல்லில்
பூமியைத் தூக்கிக்கொண்டு வராஹ ரூபந்தரித்த
மங்கள வடிவினளே ! தேவி நாராயணி !
உனக்கு நமஸ்காரம்.

செய்த மஹான்கள் பலர் உண்டு. நமது தேசத்தில் ஏராளமான தேவாலயங்களும். அன்ன சத்திரங்களும், தர்மசாலைகளும், இலவச வித்யா சாலைகளும், வைத்தியசாலைகளும், பூந்தோட்டங்களும், பொதுக் கிணறுகளும், குளங்களும் ஒரு காலத்தில் நல்லமுறையில் பரிபாலிக்கப்பட்டு வந்தன என்பதே நம் முன்னோர்களுக்கு தர்மத்தில் உள்ள பற்றுக்கு ஓர் எடுத்துக்காட்டு. அவ்வித தர்மசிந்தனை தழைத்தோங்கிய காலத்தில் நாடு சுபிக்ஷமாக இருந்ததாகத்தான் தெரிய வருகிறது. இந்த தர்மத்தில் எப்படியாவது தம்முடைய பங்குமிருக்க வேண்டுமெனக்கருதி பலர் முன்னதாகவே பொருளை அனுப்பி வைத்ததாகவும், யாரும் அறியாமல் தர்மத்தைச் செய்யவேண்டுமென எண்ணி ஊர்பேர் குறிப்பிடாமல் பொருளை வாரி வழங்கியதாகவும் வரலாறுகள் கூறும்.

'தர்மம்தான் தலைகாக்கும்' என்ற நம்பிக்கை மக்களுக்கு வேரூன்றி இருந்தது தான் இதற்கெல்லாம் காரணம். அவ்வித மனப்பான்மை மக்களுக்கு மங்கினுல் அதுபொதுவாக நாட்டிற்கும் மக்களுக்கும் எல்லாவிதத்திலும் நல்லதல்ல. தர்மம் என்ற சொல் பலவித பொருள்களைக் கொண்டது. பொதுவாக வேதங்களும் அவற்றைத் தழுவிய நூல்களும் 'எதைச் செய்' என விதிக்கின்றனவோ அவை தர்மம். ''எதைச் செய்யாதே'' என்கின்றனவோ அவை அதர்மம் எனக் கூறலாம். ஸத்தியம், அஹிம்சை, தானம் முதலிய பல தர்மங்கள் அனைவருக்கும் பொதுவானவை. இவை ஸாமான்ய தர்மம் எனப்படும். தனிப்பட்ட நபர்களுக்கென விதிக்கப்பட்ட சில விசேஷ தர்மங்களும் உண்டு. எல்லாவற்றையும் தவருமல் முறைப்படி அனுஷ்டிக்க வேண்டும்.

தர்மத்தைச் செய்வதில் காலதாமதம் கூடாது. கொடிய வியாதியால் பீடிக்கப்பட்டு யமனுடன் வாதாடிக்கொண்டிருப்பவன், குடும்ப கார்யங்களை அவசரம் அவசரமாக செய்து முடிப்பது போல தர்ம காரியங்களையும் உடனடியாகச் செய்ய முற்பட வேண்டும்.

க்ருஹித இவகேசேஹு மருத்யுநாதர்ம
மாசரேத்

மேலும் சொந்த நன்மைகளைக் கருதிச் செய்யப்படும் தர்மங்கள் சில, உலகில் அனைவருடைய நன்மைகளையும் குறித்துச் செய்யப்படும் தர்மங்கள் சில,

வாபிகூபதடா காதி தேவதாயதநாநிச!!
அந்நப்ரதான மாராம: பூர்த்தமித்ய
டிதியேதே!!

பொதுஜன நன்மைக்காக கிணறு, குளம் முதலியவற்றை வெட்டுதல் தேவாலய நிர்மாணம், உணவு அளித்தல், பூந்தோட்டங்கள் போடுதல் முதலியவை ''பூர்த்தம்'' எனக் கூறப்படுகிறது இந்த பூர்த்த தர்மத்தின் பயன் மிக அதிகம். மனிதர்களைத் தவிர மற்ற பிராணிகளும் இதன் பயனை அனுபவிக்கின்றனர். தற்காலத்தில் உள்ளவர்களுக்குங்கூட இவை பயன்படுகின்றன.

''வேனல் விம்மு வெறியார் பொழிற்
சோலைத்
தேனும் வண்டும் திளைக்கும் திருப்புத்தூர்''
— எனத் திருஞான சம்பந்தராலும்

''பொன் காட்டக் கடி கொன்றை மருங்கே
நின்ற
புனக்காந்தள் கைக்காட்டக் கண்டு
வண்டு
தென்காட்டும் செழும் புறவில்
திருப்புத்தூர்'' — என.

அப்பர் சுவாமிகளாலும் பாடப்பெற்ற திருத்தலமும் ஆதிகவி வால்மீகி முனிவரின் திருவடி தோய்ந்த புகழ்த் தலமும் ஆன திருப்புத்தூரில், சப்த தேவதைகளாக அமைந்து, ஸ்ரீ பூமாயி அம்மன் திருப்பெயரில் அருள் மழை பொழிந்து வரும் அம்மன் திருக்கோயிலில் நவராத்ரி விழாக் காலத்திலும் சித்திரைத் திங்கள் பூச்சொரிதல் விழாவிலும், திருப்புத்தூர் வட்டார மக்கள் ஆயிரக் கணக்கில் திரண்டு வழிபாடு செய்து வருகிருர்கள்.

அப்பழந் திருக்கோயிலுக்கு ராஜ கோபுரம் அமைத்துத் தந்து, மகா கும்பாபிஷேகம் நடத்த விரும்பிய திருப்புத்தூர்க் கலைக் கல்லூரி கண்ட வள்ளல், திருநெறிச் செல்வர், அருள் மாமணி, உயர்திரு நா: ஆறுமுகம் பிள்ளை அவர்களின் முயற்சியைத் தொடர்ந்து திருப்பணிக்குழு அமைத்து, பொது மக்கள் நன்கொடையாலும் தமிழக அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை உதவியாலும் திருப்பணி நிறைவெய்தி, இவ்வாண்டு ஆனித்திங்கள் 7 ஆம் நாள் (21-6-81) அன்று மகா கும்பாபிஷேகம் நிகழவிருக்கிறதறிந்து தமிழகமே ஸந்தோஷமடையுமென்பதில் ஸந்தேகமில்லை.

# பக்தி

## திருமுருக கிருபானந்தவாரியார்

யுகங்கள் நான்கு; கிருதயுகம், திரேதா யுகம். துவாபரயுகம், கலியுகம் என்பன.

கிரதயுகத்தில் ஞானத்தினுல் முத்தி.

திரேதாயுகத்தில் தானத்தினுல் முத்தி.

துவாபரயுகத்தில் யாகத்தினுல் முத்தி.

கலியுகத்தில் பக்தியினுல் முத்தி.

பக்தி என்பது வடமொழி. அன்பு என்பது தென்மொழி. கடவுள், பக்தி என்ற வலையில் தான் அகப்படுவார். —திருவாசகம்

''பக்தி வலையில் பாடுவோன் காண்க.''

அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே
அன்பெனுங் குடில்புகும் அரசே!

அன்பெனும் வலைக்குள் படுபரம்
பொருளே

அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனுங் கடத்துள் அடங்கிடுங்
கடலே

அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்தபே
ரொளியே

அன்புருவாம் பர சிவமே

அன்பு இல்லாத ஒருவன் மனிதன் ஆகமாட்டான். திருவள்ளுவர் அன்பில்லாத ஒருவனைப் பிணம் என்றுகூட சொல்ல விரும்பவில்லை. பிணம் பலருக்குப் பணந்தரச்செய்து உதவுகின்றது. ஆதலால் அன்பில்லாத ஒருவனை என்புதோல் போர்த்த உடம்பு என்கிறுர்.

அன்பின் வழியதுயிர்நிலை அன்பில்லார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

இனி பக்திக்குச் செல்வம் குலம் இடம் ஆகிய இத்தகைய தடையில்லை.

தண்ணீர்ப் பந்தல் வைக்க வேண்டுமானுல் செல்வம்வேண்டும். செல்வம் இன்றித் தொடங்கினுல் இரண்டுநாள்கூட அத்தருமத்தை நடத்த முடியாது.

பக்தி, பரம தரித்திரர்களும் புரியலாம். மிக்க வறியவராகிய குசேல முனிவர், பக்தி செய்து திருவருள் பெற்றுர்.

தண்ணீர்ப் பந்தல் அமைக்க காலம்வேண்டும்

ஐப்பசி மாதம் அடைமழை பொழியும் போது ஆற்றோரம் தண்ணீர்ப் பந்தல் வைத்து 'ஐயா! நல்ல மோர் பருகுங்கள்' என்றுல், எவன் பருகுவான்? 'அட மூடனே! உனக்கு அறிவில்லையா, இந்த மழையிலா மோர் குடிப்பது?' என்பான்.

ஆதலால் தண்ணீர்ப்பந்தல்,கோடை காலத்தில் வைக்கவேண்டும். எனவே தண்ணீர்ப்பந்தல் வைக்க காலம் பார்க்கவேண்டும்,

பக்தி செய்வதற்குக் காலம் தடை புரியாது. மழைக்காலம், வெய்யிற்காலம், பனிக்காலம். இரவு, பகல். காலை, மாலை எந்நேரத்திலும் பக்தி செய்யலாம்.

இருக்கினும் நிற்கும்போதும்
இரவு கண் துயிலும் போதும்

பொருக்கென நடக்கும்போதும்
பொருந்தியூண் துய்க்கும்போதும்

முருக்கிதழ் கனிவா யாரை
முயக்கிநெஞ் சழியும்போதும்

திருக்களா வுடைய நம்பா
சிந்தையுன் பால தாமே.

மேலும் தண்ணீர்ப்பந்தல் இடம் பார்த்து வைக்கவேண்டும். ஒரு குன்றின்மீது வைத்து விட்டு. சாலையில் ஒருவன் நின்று, வெய்யிலில் நடந்து களைத்துப்போன ஒருவனைப் பார்த்து 'ஐயா நீர்மோர் பானகம் வேண்டுமா?' என்றான்.

பிரயாணி 'ஆம்! நாவறட்சி பொறுக்க முடியவில்லை. நீர்மோர் பானகம் எங்கே? கொஞ்சம் கொடுத்து என் உயிரைக் காத்து உதவும்' என்றான்.

'ஐயா! அதோ அந்த மலை மீது வைத்துள்ளேன்; வாரும்' என்றான்.

'அடபாவி! பத்து பேர் நடக்கின்ற சாலையில் வைக்கக் கூடாதா? ஐயோ! அந்த மலை மீது ஏறுவதற்குள் என் உயிர் பிரிந்து விடுமே? நீர் மோரே வேண்டாம்' என்பான்.

ஆனபடியால், இடம் நோக்கி அமைக்க வேண்டும் தண்ணீர்ப் பந்தல்.

இங்கே பக்திக்கு அந்தத் தடையும் இல்லை. எந்த இடத்திலும் பக்தி செய்யலாம். பள்ளம் மேடு, நாடு, வீடு எங்கிருந்தும் பக்தி செய்யலாம்.

பக்தியில்லாமல், வெறும் துறவு பூண்டு காட்டிலிருப்பினும், காற்றைப்பருகினும், கந்தையுடுத்து ஓட்டை யெடுப்பினும் உய்வு பெறமாட்டார்கள்.

பக்தியுடையவர்கள் தமது தரும பத்தினியுடன் வீட்டிலிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டை அடைவார்கள்.

பட்டினத்துச் சுவாமிகள் கூறுகின்றார்.

காடே திரிந்தென்ன? காற்றே
புசித்தென்ன! கந்தைசுற்றி

ஓடே எடுத்தென்ன? உள்ளன்பிலா தவர்
ஓங்கு விண்ணோர்

நாடே யிடைமரு தீசர்க்கு
மெய்யன்பர் நாரியர்பால்

வீடேயிருப்பினும் மெய்ஞ்ஞான
வீட்டின்பம் மேவுவரே.

இனி பக்திக்குக் குலம் முதலிய தடையுமில்லை. உயர் குலத்தினர் தான் பக்தி செய்ய வேண்டும். இழிகுலந்தார் பக்தி செய்தல் கூடாது என்ற நியதியில்லை.

''இறைவனிடம் பக்தியில்லாதவர், பெருங் குலத்திற் பிறந்து, பெருஞ்செல்வராகி, எனக்கு மண்ணுலகவாழ்வும், விண்ணுலகரசுந் தந்து உதவி புரியினும். அவரை நான் ஒரு பொருளாக மதிக்க மாட்டேன்; சிவபெருமானுடைய திருவடியில் அன்பு வைத்தவர், அங்கம் அழுகிய தொழுநோயராயினும் பசுவையறுத்துண்ணும் புலையர் குலத்தில் பிறந்தாரேனும். அவர்கள் எமது வழிபடு கடவுளர் ஆவார்'' என்கிறார் திருநாவுக்கரசு சுவாமிகள்.

சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லராகில்
அங்கமெலாம் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும்புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர் கண்டீர் நாம்வணங்குங் கடவுளரே,

அன்பைப் பெற்றுவிட்டால் அதுவே எல்லாவற்றையும் பெற்றுவிட்டதாகும்,

அன்பை யுடையார், என்பையும் பிறருக்கு வழங்குவார்கள்:

அன்பு என்ற பக்தி, சக்தியையும்,முத்தியையுந் தரும். பரமனும், பக்தருக்கு வசய்த்தவராகத் திகழ்கின்றார்.

"பத்தி சித்ங் காட்டி அத்தர் சித்தமிட்ட
பக்தருக்கு வாய்த்த பெருமாளே"

— திருப்புகழ்

பக்தியிறல் விளைந்த விளைவுகளைப் பற்றி ஆதி சங்கரர் வியந்து கூறுகின்றார்.

(1) மார்க்கத்தில் தேய்ந்த பழஞ் செருப்பு சிவபெருமானுடைய புருவ நடுவில் சென்றது.

2) கொப்புளித்து உமிழ்ந்த நீர் அப்பரமனுக்குச் சிறந்த அபிஷேக நீராகியது.

3) சிறிது கடித்து எச்சில் செய்த புலால் துண்டு உயர்ந்த உணவாக ஆயிற்று.

4) வேடன் பக்தசிரோன்மணியாக ஆனான் ஆகவே பக்தி எதைத்தான் செய்யாது? எல்லா உயர்வையுந் தரும்.

மார்க்க வர்த்திநீ பாதுகா பசுபதே
ரங்கஸ்ய கூர்ச்சாயதே

கண்டுஷாம்பு நிஷேசனம் புரரிபோர்
திவ்யாபிஷேகாயதே

கிஞ்சித் பக்ஷித மாம்ச சேஷ கபளம்
நவ்யாப ஹாராயதே

பக்தி: கிம் நகரோத்யஹோ வநசரோ
பக்தாவதம்சாயதே:

— சிவானந்தலஹரி.

பக்தியுடன் பகவானுடைய திருநாமங்களை ஒருமுறை கூறினும் வினைகள் வெந்து நீறுகும். சகல நலன்களும் உண்டாகும்.

நாரதர் ஒரு சமயம் வைகுண்டம் சென்றார். விஷ்ணுமூர்த்தியை வணங்கினர். "சுவாமி! உலகிலே உள்ள மனிதர்கட்கு, உன் திருவடியையடைய எளிய வழி யாது?' என்று வினவினர்.

திருமால் "நாரதா! நம்மையடைவதற்குரிய நெறிகளில் மிக எளிமையானது பக்தி நெறியாகும்" என்றார்.

நாரதர் 'ஐயனே! அந்தப் பக்திநெறி நின்ற பக்தர்களில் தலைசிறந்த பக்தன் யாவன்?'என்று வினவினர். நாரதருடைய மனதில் தன்னைக் கூறுவார் என்ற நினைவு இருந்தது. தான் பெரிய பக்தன் என்ற செருக்கும் சிறிது இருந்தது. எல்லாம் உணர்ந்த பகவானுக்கு இது தெரியுந்தானே?

'நாரதா! பூவுலகில் குப்பம் என்ற சிற்றூரிலே, பொன்னன் என்ற ஒரு குடியானவன் இருக்கின்றான், அவன்தான் எனது பெரிய பக்தன்' என்றார்.

இதனைக்கேட்ட நாரதருக்கு பெருவியப்பு உண்டாயிற்று. நாராயணரைத் தொழுதார். 'சுவாமி! அடியேன்.உமது திருநாமத்தை இடையருது பாராயணம் புரிபவன். என்னைக் கூருமல் எங்கோ இனந்தெரியாத ஒருவனைப் பெரிய பக்தன் என்கிறீரே, இது பொருந்துமா?' என்று கேட்டார்.

"நாரதா! நீ சென்று, அவனுடைய பக்தியை நேரில் அறிந்துகொள்" என்றார் நாராயணர்.

நாரதர் குப்பம் போனார். விடியற் காலையிலிருந்தே பொன்னனைக் கவனித்தார் அவன் ஏர்க்காலை எடுத்துத் தோள்மீது வைக்கும்போது "அரிநாராயணா" என்றான். பின்னர் உழுவதும் நாற்று நடுவதும், களை பறிப்பதுமாகப் பல அலுவல்களில் ஈடுபட்டான். மாலையில் வீடு வந்து ஏர்க்காலை வைக்கும்போது "அரி நாராயணா" என்றான். உண்டு உறங்கினான்.

நாரதருக்கு அடக்கமுடியாத சீற்றம். ஓடினார். வைகுண்ட வாசனைக் கண்டார். "பெருமாளே! நான் லட்சாதி லட்சம்முறை நாராயண மந்திரம் கூறுவேன். அந்தப் பொன்னன் ஏரை எடுக்கும் போதுஒரு முறை,அதனைக் கீழே எறியும்போது ஒரு முறை ஆக இருமுறைதான் நாராயணா என்று கூறினான். தேவரீர் அவனைப் பெரிய பக்தன் என்றீரே? இது என்ன முறை?" என்று வினவினார். அவர் குரலில் ஒரு பதட்டம் இருந்தது.

"நாரதா! சற்று அவசரப்படாதே அந்தப் பொன்னனுக்கு அதிக வேலையா?"

"ஆம் சுவாமி!"

"அத்தனை அலுவல்களுக்குஇடையே என்னை இருமுறை மறவாமல் கூறினானா?"

முவ்வுலகையும் ரக்ஷிக்கும் நல்லெண்ணத்துடன் உக்கிரமான
நரசிம்ம வடிவுடன் அசுரர்களைக் கொல்ல முற்பட்டவளே!
தேவி நாராயணீ! உனக்கு நமஸ்காரம்.

கிரீடந் தரித்துப் பெரிய வஜ்ராயுதந் தாங்கி ஆயிரங்கண்களுடன்
ஜ்வலிக்கும் இந்திர சக்தியே! விருத்திராசுரன் பிராணனைப் போக்கியவளே!
தேவி நாராயணீ! உனக்கு நமஸ்காரம்.

கோர ரூபமும் பயங்கரமான சப்தமும் உடையவளே! மிகுந்த பலம்
பொருந்திய சிவ தூதி வடிவில் அசுரர்களை அழித்தவளே!
தேவி நாராயணீ! உனக்கு நமஸ்காரம்.

தெற்றிப் பல்கொண்ட வாயும் தலைமாலை ஆபரணமும் உடைய
சாமுண்டா தேவியே! முண்டாசுரனை வதைத்தவளே!
நாராயணீ தேவி! உனக்கு நமஸ்காரம்,

லக்ஷ்மியாகவும், லஜ்ஜையாகவும், மகா வித்தையாகவும்.
சிரத்தையாகவும், புஷ்டியளிக்கும் ஸ்வதாதேவியாகவும்,
நிலைபெற்றவளாகவும், மஹாராத்திரியாகவும், மஹா மாயையாகவும்
உள்ளவளே! தேவி நாராயணீ! உனக்கு நமஸ்காரம்

சிறந்த மேதா தேவியாகவும், ஸரஸ்வதியாகவும், ஐசுவரியமாகவும்,
விஷ்ணு சக்தியாகவும், தாமஸ வடிவினளாகவும், இயற்கை
வடிவினளாகவும் விளங்கும் ஈசுவரியே! நீ அருள்புரிவாய்!
தேவி நாராயணீ! உனக்கு நமஸ்காரம்.

தாயே மதுகைடபர்களை வதம்செய்தவளே! மஹிஷாஸுரனுடைய
பிராணனைப் போக்கியவளே! விளையாட்டாக தூம்ரலோசனனை
வதைத்தவளே! சண்டமுண்டர்களையழித்தவளே! ரக்தபீஜாசுரனை
நிர்மூலமாக்கியவளே! சும்பனையும், நிசும்பனையும் ஒழித்தவளே!
நித்தியமானவளே! துர்க்காம்பிகையே! உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

உலக நாயகியாகிய நீ உலகைப் பாலிக்கின்றாய், உலக வடிவினளாகிய
நீ உலகைத் தாங்குகின்றாய். உலக நாயகர்களால்
நீ பூஜிக்கப்படுபவளாகின்றாய்.

உன்னை உள்ளன்புடன் வணங்குவோர் எவரோ அவரே
உலகிற்குப் புகலிடமாய் விளங்குவோர்.

கடத்தற்கரிய கஷ்டத்தில்நினேக்கப்பட்டால் நீ எல்லா ஜீவர்களுடைய பயத்தையும் போக்குகிருய். சரண் புகுந்தவர்களின் துன்பத்தைத் துடைத்து அருள் பாலிக்கிருய். இன்பத்தில் நினேக்கப்பட்டால் நலன்மிக்க மதியை அளிக்கிருய். ஏழ்மையையும், துன்பத்தையுப் பயத்தையும் போக்குபவனே ! நாராயணி ! எல்லோருக்கும் உபகாரம் செய்ய எப்போதும் உருகும் நெஞ்சுடையவர் உன்னைத் தவிர யார் உளர் ?

சராசரமனைத்தையுமாள்பவளே! எப்போதும் உயர்வற உயர் நலமளிக்கும் நீ எவர்களிடம் பிரீதியடைகின்ருயோ அவர்களே ஜன சமூகத்தில் சம்மானம் பெறுகின்ருர்கள், அவர்களுக்கே செல்வமும், அவர்களுக்கே புகழும் உரித்தாகின்றன. அவர்களுடைய தர்மவர்க்கம் குறைவு படவில்லை. மனைவிமாரும், மக்களும், பணியாட்களும் நிறைந்து அவர்கள் செல்வவான்களாய் விளங்குகின்றனர்.

தேவி! உனதருளால் நல்வாழ்க்கை எய்தியவர் மிகுந்த ஆதரவுடன் நாள்தோறும் இடைவிடாது தரும காரியங்களை யெல்லாம் செய்கிருர்கள், பிறகு சுவர்க்கத்தையடைகிருர்கள். ஆகையால் மூவுலகிலும் பயனையளிப்பவள் நீயே அன்ருே !

ஸித்த லக்ஷ்மியாகவும் மோக்ஷ லக்ஷ்மியாகவும், ஜயலக்ஷ்மியாகவும், ஸரஸ்வதியாகவும், ஸ்ரீலக்ஷ்மியாகவும், வரலக்ஷ்மியாகவும் உள்ள நீ எப்போதும் எங்களிடம் பிரசன்னமாயிருக்க வேண்டும்.

ஸ்ரீ ஸூக்தம் — தேவி மாஹாத்மியம்



# தர்மோ ரக்ஷதி ரக்ஷித:
# யதோ தர்மோ ஸ்ததோ ஜய:

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்
புதுக்கோட்டை

தர்ம ஏவஹதோ ஹந்தி தர்மோ
ரக்ஷகி ரக்ஷித:

தஸ்மாத்தர்மம் நத்யஜாமி மாநோ
தர்மோ ஹதோவதீத் :

என்ற சுலோகத்தின் ஒரு பகுதிதான் இக்கட்டுரையின் தலைப்பு. இது ஐந்தாவது வேதமாகிய மஹாபாரதத்தில் தர்ம புத்திரர் தர்ம தேவதையை நோக்கி உரைத்ததாக அமைந்துள்ளது, சிறிது மாறுதலுடன் இதே சுலோகம் மனுஸ்ம்ருதியிலும் உள்ளது. இதன் கருத்து:

''தர்மத்தை நாம் அழித்ததால், அதாவது அதை முறைப்படி நாம் அனுஷ்டிக்கவில்லையேல் அதுவே நம்மை அழித்து விடும். அதை நாம் முறைப்படி அனுஷ்டித்தால் அது நம்மை இரட்சிக்கும். ஆதலரல் தர்மத்தை நான் ஒரு பொழுதும் கை விடேன். நம்மால் புறக்கணிக்கப்பட்ட காரணத்தால் அது ஒரு பொழுதும் நம்மை அழிக்க வேண்டாம்.''

இதில் தர்மம் யாரை இரட்சிக்கின்றது எனக்குறிப்பிடாததால் அகில உலகையும் இரட்சிப்பது தர்மமே எனத் தெரிய வருகிறது. தர்மம் இரட்சிக்கின்றது என்பதால் தர்ம சம்பந்த மில்லாத வேறு எந்த சாதனங்களும் மக்களை இரட்சிக்கத் தகுதியற்றவை என்றும் சித்திக்கின்றது. உலகில் எவராவது தர்ம நெறிதவருமல வாழ்ந்து வந்தால் அது உலக மனைத்தையும் பாதுகாக்கும். ஆதலால்தான் கருணுமூர்த்திகளான சில மஹான்கள் தனி நபர்களால் மனதிஞல் கூட எண்ண முடியாத அரிய பெரிய தர்மங்கள் பலவற்றைச் செய்து உலக மக்களை உய்விக்கப்பாடுபட்டு வருகின்றனர். ஏராள செல்வமோ, மதிப்பு வாய்ந்த உற்ருர் உறவினர்களோ, உயர்ந்த படிப்போ. தொழில்களோ. வியாபாரமோ, உத்தியோகமோ, கடவுளோ கூட தர்மத்தைப் புறக்கணித்தவனை இரட்சிக்கச் சக்தியற்றவை. பலர் இந்த வாதத்தை ஏற்காமலிருந்தாலும். உற்று கவனித்தால் இது தான் உண்மை என்பது விளங்கும்.

இவ்வுலகில் செல்வந்தர்கள் அனைவரும் சுகமாக வாழ்கின்றனர் என யாராலும் அறுதியிட்டுக் கூற முடியாது. பிறர் அவர்களை சுக ஜீவிகளாகக் கருதினுலும் அவர்கள் அனைவரும் தாம் இன்பமாக வாழ்வதாகக் கருதுவதில்லை. தனிகர்களுள் பலருக்கு பலவித தொல்லைகள். ஒரு சில தனிகர்கள் இன்பமாகவும் வாழ்வதைக் காண்கிருேம். இவ்வித பாகுபாட்டிலிருந்து துன்பங்களை அனுபவிக்கும் தனிகர்களின் செல்வம் தர்ம நெறி தவருமல் சம்பாதிக்கபட்டதால் என்ருே, அல்லது தற்காலம் அவர்கள் தர்மத்தைப் புறக்கணித்துப் பலவித அதர்மங்களில் ஈடுபட்டு மதி மயங்கித்திரிகின்றனர் என்ருே தான் நாம் தீர்மானிக்க வேண்டும்.

இவ்விதமே படிப்பு, தொழில், உத்தியோகம் முதலியவற்ருல் ஒரு சிலருக்கு இன்பமும் மன நிம்மதியும் கிட்டவில்லை யென்ருல்

அவர்களிடம் தர்மம் இல்லை, இப்பிறவியிலோ, முன் ஜன் மங்களிலோ தர்ம நெறி தவறியவர்களாக இருக்க வேண்டும் என்று தான் கொள்ள வேண்டும்.

மேற்கூறிய சாதனங்கள் அதிகமில்லையாறுலும் சிலர் புத்ர, மித்ர, களத்ராதிகளுடன் இன்பமாக வாழ்வதைக் காண்கிறேம். அதற்கு அவர்களோ, அவர்கள் தம் முன்னேர்களோ செய்த தர்மங்களைத் தவிர வேறு எதைக் காரணமாகக் கூறமுடியும்?

கடவுள் கூட தர்மத்தைப் புறக்கணித்தவனைக் காப்பாற்ற முன் வருவதில்லை என்பது தான் சாஸ்திர சித்தாந்தம்.

*சிருதி ஸ்முருதீ மனவாஜ்ஜே யஸ்தா முல்லங்கிய வர்த்தே! ஆஞ்ஞாத் சேதீ மவத்ருவஸ்*

வேதங்களும் ஸம்ருதிகளும் என்னுடைய ஆக்ஞை. எவன் அவற்றில் உள்ள கட்டளைகளை மீறுகின்ருனே, அவன் என் உத்தரவை மீறியவன். என் விரோதி என பகவான் கூறியுள்ளார். அப்படி இருக்க வேதங்களின்கட்டளையாகிறதர்மத்தை புறக்கணித்தவனைக்காப்பாற்ற முற்படுவாரா? பெற்ரேர்கள் தம் மக்கள் அனைவரையும் காப்பாற்றுவது போல், கடவுளும் அவருடைய பிரஜைகளாகிற உலக மக்கள் அனைவரையும் எப்படியும் காப்பாற்றியே தீருவார், என்ற வாதம் பொருத்த மற்றது. பெற்ரேர் சொல்லைப் புறக்கணித்துத் தீய செயல்களையே செய்து வரும் பிள்ளைகளை. பெற்ரேர்கள் எவ்வளவு நாள்தான் காப்பாற்றக் கூடும்? பிள்ளைகளிடமுள்ள பாசத்தால் தீய வழியில் செல்லும் பிள்ளைகளையும் போஷித்து வந்தால் அதனல் விளையும் துன்பங்களை அவர்கள் அனுபவிக்கவேண்டி வரும். ஆதலால் அவர்களை விட்டை விட்டுத் துரத்துவதுதான் உசிதம். உலக மக்கள் அனைவரும் கடவுளுடைய பிரஜைகளானலும் எல்லோருக்கும் அவர் இன்பத்தையே அளிப்பதில்லை. தர்மம் செய்தவர்களுக்கு அதன் பயனுகிய துன்பத்தையும்தான் அளித்து வருகிருர். ஒருவனுக்கு இன்பங்களையும் பலவித நன்மைகளையும் அளிக்க அவன் செய்த தர்மத்தையே கடவுள்அளவு கோலாக வைத்துக் கொண்டிருக்கிருர். ஆதலால் சிலர் துன்பகாலங்களில் 'பாழும் தெய்வம் என்னைப் பழி வாங்குகிறதே' எனக் கடவுளைத் தூற்றுவது அறியாமையே.

தர்மத்தை முறைப்படி அனுஷ்டித்துவரும் சில நபர்கள் சில சமயம் பலவித துன்பங்களுக்குள்ளானுல் அதை முன்செய்த தீய செயல்களின் பயனுகக் கொள்ளவேண்டும். இவ்விதமே அதர்மத்தை வேண்டுமென்றே செய்துவருகின்ற சிலர் சுகமாக வாழ்வார்களேயானுல் அதை முன் செய்த தர்மத்தின் பயனுகக் கருதவேண்டுல்.

துரியோதனன் பல கொடிய காரியங்களைச் செய்து வந்தாலும் சுகமாகவே வாழ்ந்தான். பலருடைய உதவிகளையும் பெற்ருன். பாண்டவர்களைவிட அதிகபலமுள்ள சேனைகளும் தன் பக்கத்தில் சேர்த்துக் கொண்டான். கர்ணன், பீஷ்மர், துரோணர், ஜயத்ரதன், அச்வத்தாமன் முதலிய எளிதில் வெல்ல முடியாத வீராதி வீரர்களும், பற்பல காரணங்களால் அவனையே பின்பற்றி நின்றனர். இருந்தாலும் இறுதியில் அவன் வெற்றி பெருமல் உற்ருர் உறவினர்களுடன் அழிந்து போனுன். இதற்கு நேர் மாருக. தருமருக்கு மனிதபலம் அதிகமில்லை. பலவித இன்னல்களுக்கும் உள்ளானுர். இருந்தாலும் இறுதியில் வெற்றி பெற்று, இழந்த அரசை மீண்டும் பெற்ருர். என்ன காரணம்? முன்னவன் தர்மத்தைப் புறக்கணித்தான். பின்னவர் தர்மத்தைப் பின்பற்றினுர்.

எங்கு தர்மம் இருக்கின்றதோ அங்குதான் வெற்றி : என்பது மஹா பாரதத்தில் பலவிடங்களில் காணப்படும் பொய்யாமொழி.

தர்மாதர்த்தஸ்சகாமஸ்சஸஇமர்த்தம் நஸேவ்யதே

'' தர்மத்திலிருந்துதான் பொருள், இன்பம் முதலிய அனைத்தும் விளைகின்றது. அது ஏன் அனுஷ்டிக்கப்படவில்லை?'' என வியப்புடன் வினவுகின்ருர் பீஷ்மர்;

நம் நாட்டில் தர்மத்திற்கென்று உடல், பொருள் ஆவி எல்லாவற்றையும் அர்ப்பணம்

''ஆம். இருமுறை மட்டும் கூறினன்''.

''நாரதா! இன்று உனக்கு என்ன வேலே?''

''பொன்னன் எத்தனே முறை, தங்கள் திரு நாமம் கூறுகின்ருன் என்பதைக் கவனித்துக் கொண்டிருந்தேன்.''

நாரதா! இன்று நீ எத்தனே முறை நாமத்தினே நவின்ருய்?

''ஒரு முறைகூடக் கூறவில்லே'',

''ஓ! ஒருமுறையும்உரைக்கவில்லேயா? ஏன்?''

''அவனேயே உற்றுக் கவனித்துக் கொண்டிருந்து விட்டேன்''

''நீ ஒரு வேலேயை மேற்கொண்டு அடியுடன் என்னே மறந்து விட்டனேயே? அவன் அத்தனே வேலேகளுக்கு இடையே என்னே மறவாது கூறினனே, அவன் பெரிய பக்தன் தானே'' என்று விஷ்ணுமூர்த்தி விளக்கிக் கூறினர்.

நாரதர் தலேகுனிந்து நின்ருர். இதனல் குடும்ப விவகாரங்களில் ஈடுபட்டவர்கள், இறைவனே உள்ளன்புடன் நினேத்து, அவரது திருப் பேரைக் காதலாகிக் கசிந்து கூறி அருள் நூல் களேப் பாராயணம் புரியவேண்டும்.

அந்த அன்பையும் ஆண்டவனிடம் வரமாகயாசித்துப் பெறவேண்டும்.

''இறவாத இன்ப அன்பு''
வேண்டினர் காரைக்காலம்மையார்,
வீரவாகுதேவர் முருகரிடம் வரம்
கேட்கின்ருர்.

கோல நீடிய நிதிபதி
வாழ்க்கையும் குறியேன்

மேலே இந்திரன் அரசினேக்
கனவிலும் வெஃகேன்

மாலயன்பெறு பதத்தையும்
பொருளென மதியேன்

சால நின்பதத் தன்பையே
வேண்டுவன் தமியேன்.

அந்த நல்வர முத்தியின்
அரியதொன் றதனேச்

சிந்தை செய்திடு தவத்தரும்
பெறுகிலர் சிறியேன்

உய்ந்திடும் வகை அருள்செய
வேண்டும் என்றுரைப்பு

எந்தை கந்தவேள் உனக்கது
புரிந்தனம் என்ருன்.

ஆதலால் பெறுதற்கரிய பேறு பக்தி
யேயாகும்.

''பத்திநெறி யறிவித்துப் பழவினேகள்
பாறும் வண்ணம்

சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி',

மணிவாசகரைச் சிவபெருமான் ஆட்கொண்டருளினர். எனவே பக்திநெறி வளர்க. பக்தர்கள் வாழ்க.



# புண்ணிய பூமியின் பூமாயித் தாயே!

---

அருள்மாமணி - திருநெறிச் செல்வர் - கலைவள்ளல்

**நா. ஆறுமுகம் பிள்ளை**

திருப்புத்தூர் ஸ்ரீ பூமாயி அம்மன் கோயிலில் இன்று நடைபெறும் கும்பாபிஷேக விழாவிற்கு மலர் வெளியிடுவது மிகவும் அவசியமாகும்.

ஸ்ரீ பூமாயி அம்மன் என்று விளங்கும் சிவா, பவானி, ருத்ராணி, வராஹி, நாசிம்ஹி, பீமா, பைரவநாதனி ஆகிய சப்த மாதாக்கள் என்று அழைக்கப்படும்.

ஆதியில் இவ்வனத்தில் தவம் செய்த வான்மீகி முனிவர் கடும் தவம் செய்து வாழ்ந்த புண்ணிய பூமி. அவரின் ஞான கடாட்சத்தாலும் தபோ பலத்தாலும் ஸ்தாபிதம் செய்யப்பெற்றது சப்த மாதாக்களும் பைரவ சுவாமியும்.

கேசரி, பூசரி, பைரவி, ஷண்முகி, ஷாம்பவி என்ற ஐந்து ஜின்முத்திரைகளிலே நடுமுத்திரையாகியது பைரவி. இதை நடுநாடி என்று சொல்வது உண்டு. இவ்வூரில் நடமாடும் தெய்வமாகவும், பேசும் தெய்வமாகவும் விளங்குகிறது. அவர் பிறகு வாழக்கூடிய மக்களாகிய நமக்கு இப்படிப்பட்ட தெய்விகச் சொத்தை வைத்துச் சென்றிருக்கிறார்.

இந்தப்புண்ணிய பூமி மாபெரும் சரித்திரம் உடையது. இங்குதான் வால்மீகி ராமாயணம் எழுதப்பட்டது. சீதாப்பிராட்டியார் கர்ப்பவதியாக இருக்கும்போது காட்டுக்கு அனுப்பப்பட்டார் என்று ராமாயணத்தில் கூறப்படுகிறது. அவர் வால்மீகி ஆசிரமத்திற்குச் சென்று அங்கு வாழ்ந்தார் என்றும் சொல்லப்படுவதே இதற்குச் சான்று.

லவகுசன் பிறந்தது இதே பூமியில். சீதாப் பிராட்டியார் தண்ணீர் எடுத்துச் செல்ல வந்து அவருடைய காலடி பட்டதற்காக அந்த ஏரிக்கு சீதேவி என்ற பெயரும் உண்டு. அது நாளடைவில் சீதெளி என்று பெயர் விளங்கி வந்தது.

திருக்குளம்பூர் என்பது இங்கிருந்து 10 மைல் தொலைவில் இருக்கிறது. ராமருடைய பட்டத்துக் குதிரையை லவ குசர்கள் பிடித்துக் கட்டிய இடம்தான் திருக்குளம்பூர். குதிரையின் கால் குளம்பு பட்ட இடத்திற்கு குளம்பூர் என்று பெயர், அங்குதான் அசுவமேத யாகம் நடந்த இடம்,

செங்கதளியை யாகத்தில் இட்டதாக கதை. செங்கதளி என்பது செவ்வாழை. இன்றைக்கும் அவ்வூர்க் கோவிலில் செவ்வாழை இருக்கிறது. இதற்கு கதளி வனம் என்று பெயர். அங்கு ஸ்தாபிதம்செய்யப்பட்டிருக்கும் ஆண்டவனுக்கு கதளீஸ்வரர் என்றும் பெயர். சிவலிங்கத்தின் சிரசில் இரண்டு குதிரைக் குளம்பு (கால்) பதிந்திருக்கிறது. அதற்குத்தான் அசுவம் என்று பெயர்.

அங்கு வால்மீகியுடைய சிலே இருக்கிறது. ஆதி சங்கரர் அங்கு விஜயம் செய்திருக்கிருர். அதன் ஞாபகார்த்தமாக அவருடையசிலே ஒன்று இருக்கிறது. இன்றும் கோவிலுக்குள் இருக்கும் வாழையைத்தான் அபிஷேகத்திற்குப் பயன் படுத்த வேண்டும்.

அசுவமேத யாகத்தை வால்மீகி, வாம தேவர், வசிஷ்டர் ஆகிய மூவரும் நடத்தி பிறகு இராமரிடத்தில் சீதாப்பிராட்டியாரையும் குழந்தைகளேயும் ஒப்படைத்து அவர்களேக் கூட்டிக்கொண்டு அயோத்திக்குச் சென்ருர்கள்.

ரகுகுல வம்சத்திற்கு இராமரின் பின் வாரிசை வளர்த்துக் கொடுத்த இடம் இந்தப் புண்ணிய பூமி.

அகஸ்தியர் வால்மீகி நாதருடைய ஆசிர மத்திற்குப் பலமுறை வந்திருக்கிருர். வால்மீகி நாதர் தவம் செய்த இடம் கோவில் பிரகாரத் திலுள்ள கொன்னே மரத்தடியில். அக்காலத் திலுள்ள மரம்தான் இன்றைக்கும் இருக்கிறது. அந்த மரத்திற்குப் பக்கத்தில் சிவலிங்கக் கோவில் இருக்கிறது. அதற்குப் பெயர் அகஸ்திய லிங்கம். அவர் வரும்போது பூஜை நேரங்களில் எல்லாம் இங்கு பூஜை செய்திருக் கிருர்.

நீண்டகாலமாக திருக்கோளக்குடியில் அவ ரும் புலஸ்திய முனிவரும் வாழ்ந்திருக்கிருர்கள். அதற்குச் சான்று திருக்கோளக்குடி மலேயில் புலஸ்தியர் கோவில் இருக்கிறது. மலே உச்சி யில் அகஸ்தியர் கோவில் இருக்கிறது. புலஸ்தி யருக்கு அகஸ்தியர் குருநாதர். இதன் பிறகு தான் அவர் மதுரை சோமநாதர் திருமணத் திற்குச் சென்று அங்கிருந்து திருக்குற்ருலம் சென்றிருக்கிருர்.

திருப்புத்தூர் சிவன் கோவிலுக்குத் திருத் தளிநாதர் என்று பெயர். அதை வழிபடுபவர் களுக்கு அறிவு, திடம், ஞானம், தெளிவு எல்லாம் ஏற்படும். தனக்கு அறிவு தெளிந்த நிலேயில் தன்னுடைய ஞான சக்தியாலே தவ வலிமை யாலே அந்த லிங்கத்தை ஸ்தாபிதம் செய்திருக் கிருர்.

வடமொழியில் வன்மீகம் என்ருல் தமிழில் புற்று என்று பொருள். இதுதான் அவரின் பெய ராக விளங்கி இருக்கிறது. அவருடைய வனம் காத (10 மைல்) சுற்றளவு இருந்திருக்கிறது. தேவலோகத்தில் 'பட்ட மங்கையாகப் போகக் கடவாய்' என்ற சாபத்துடன் அந்த வனத்தில் சுற்றித் திரிந்த ஒரு தெய்வ கன்னிகையைத் தீர்த்தக் குளம் ஒன்று உண்டாக்கி அங்கு அட் டமசித்தி நிலேயில் தவம் செய்து அந்தப் பெண் ணின் சாபத்தை நீக்கித் தேவலோகம் அனுப்பி வைத்தார்.

அட்டமசித்தி நிலேயில் அவர் தவம் செய்த இடத்தில் ஒரு ஆலமரம் வைத்திருக்கிருர்கள். அது இன்று பல விழுதுகள் உள்ள பெரும் விருக்ஷமாக விரிந்து வளர்ந்திருக்கிறது. அந்த இடம் இன்று பட்டமங்கலம் என்ற பெயரால் விளங்கி வருகிறது. அது இவ்வூரிலிருந்து ஆறு மைல் தொலேவில் உள்ளது. இதை மாணிக்க வாசகர் இயற்றிய திருவாசகத்தில் கீர்த்தி திரு அகவலில்

'பட்டமங்கையில் பாங்காய் இருந்து
அங்கு
அட்டமாசித்தி அடைந் தஅதுவும்
வேடுவனுகி வேண்டு உறுக்கொண்டு
காடது தன்னில் கறந்த கள்ளமும்'

என்று பாடியிருக்கிருர். இது திருப்புத்தூர் கீர்த்தி திரு அகவல்.

இவையெல்லாம் அறிவாலும் ஆத்மார்த் தத்தாலும் ஒப்புக் கொள்ளக் கூடிய ஆதாரங் களேயே அடியேன் இங்கு கொடுத்திருக்கிறேன். இதற்கு ஐந்து மைலுக்குப் பக்கத்தில் வைஷ்ண வர்களுக்கு பூலோக கைலாசம் என்று சொல்லக் கூடிய திருக்கோஷ்டியூர் தலம் இருக்கிறது.

இரணிய சம்ஹாரத்திற்காக மகரிஷிகள் கோஷ்டி கூடி ஆண்டவனேப் பிறப்புக்காக அழைப்பதற்கு மகா வேள்வி செய்த இடம் இது. 'கடம்ப மாமுனிவரின்' இடம். இது பிரகலாதரு டைய பிறப்புக்கு மாதவம் செய்த இடம். அத ஞல் இங்கு பிரதிஷ்டை செய்த ஆண்டவர்

'மாதவத் திருமான்' என்று அழைக்கப்படுகின்ருர். இது வால்மீகி காலத்திற்கு ஒரு யுகம் முந்தியது. கிரேதா யுகத்தின் காலம்.

வன முனியாகிய 'கடம்ப மாமுனி' அந்த ஸ்தலத்திலேயே நிர்வகர்ப்பமாகி இருக்கிருர். அந்த இடம்தான் இன்றைக்கு கடம்பேஸ்வர ஸ்தலமாக இருக்கிறது. அங்கு ஜனகாதி நால்வருடைய சிலை இருக்கின்றது. ஜனகாதி நால்வர் நந்தியினுடைய சீடர்கள். எண்மரில் நான்கு பேர் நந்தியாகி விட்டார்கள் என்று திருமூலர் திருமந்திரத்தில் சொல்கிருர். நால்வர்தான் ஆதியில் நந்தீஸ்வரர்களாக, பூலோக கைலாசவாதியாக கங்கை நதிக்கரையில் காசிநாதராக விற்றிருக்கிருர்கள்.

ஆதலால் பெருமக்களே! இந்தப் புண்ணிய பூமியாகிய திருப்பத்தூர் பழம் பெரும் பூமி! ராமாயணக் காவியத்தை தோற்றுவித்த பெரும் காவிய பூமி. வால்மீகி தவம் செய்த மாபெரும் பீடபூமி. இந்தப் பூமியில் பிறந்த அடியேனும் நீங்களும் நிறைய க் கொடுத்து வைத்தவர்கள். காசிக்கு சமமான பூமி. கங்கா நதிக்குச் சமமான தீர்த்தம் சீதேவி என்று சொல்லிக் கொள்வதில் பெருமையடைய, வாழ்வாங்கு வாழ வாழ்த்துகிறேன்.

இராமருடைய காலம் ராமேஸ்வரத்தில் இராமலிங்க ஸ்தாபிதம் 29 சதுர் யுகமாகிவிட்டது என்று சொல்கிருர்கள் 29 சதுர் யுகம் என்பது சுமார் ஆறு கோடி ஆண்டுகளைக் குறிப்பிடுகிறது. இராமருடைய காலத்தவர் வன்மீகிநாதர் என்று நாம் உணரும்போது திருப்புத்தூர் புண்ணிய பூமி ஆறுகோடி ஆண்டுகளாக மனித சஞ்சாரம் உள்ளதாக நாம் ஒப்புக்கொள்ளக் கூடிய விஷயமாகத்தான் இருக்கிறது.

வணக்கம்



திருப்பணிக்குழுவின் புரவலர் அருள்மாமணி - கலைவள்ளல்

ர்திரு. நா. ஆறுமுகம் பிள்ளை A. M. N., சீதையம்மாள் அவர்கள்



திருவளரும் தஞ்சையிலே ராஜராஜன் கைவண்ணம்

சீர்மல்கும் திருப்புத்தூரில் உங்களது மனவண்ணம் !

# அன்னை பூமாயி! அருள்வாய் நீயே!



நல்லனவே நினைக்கின்ற உள்ளம் கொண்டோர்
நலமாக உயர்ந்திடவே அருள்வாய் நீயே!

சொல்லரிய உதவிகளைச் செய்வார்க் கென்றும்
துணையாக நீயிருந்து காப்பாய் தாயே!



அருள்மாமணியின் திருப்பணிக்கு முன்னதாக
அமைந்திருந்த பூமாயி அம்மன் கோயில்.



விண்முட்டும் கோபுரமும் விமானமும்
கண்கொள்ளாக் கவின்கொள்ளும் காட்சி.



அகந்தூய்மை அருளுகின்ற அன்னை கோயில்
புறந்தூய்மை செய்கின்ற திருக்குளம்.



ஊருணிபோல் உதவுகின்ற அருட்செல்வரால்
உருவான பெருங்கரையும் திருக்குளமும்.



பல்கலை வளர்க்கும் வள்ளலின் தலைக்கொடையாய்ப்
பட்டம்பெற மாணவர்கள் பயில்கின்ற கல்லூரி.



மழலையரின் மாண்டிசோரிக் கல்வி முதல்
மெட்ரிகுலேஷன்வரை பயில்விக்கும் உயர்பள்ளி.



வள்ளல்போல் பொழிகின்ற மழைநீர், ஊற்றை
மக்களுக்கு வழங்குகின்ற குடிநீர்த் தொட்டி.



அருள்மாமணி தந்த கொடையில் தோன்றி
அரசினரின் மருத்துவ மனையாய்ப் பரந்த காட்சி.



'நம்ம ஊர் ராஜா' நாகராஜரின்
நல்லுழைப்பில் உருவான ஒன்றிய அலுவலகம்.



கலைவள்ளல் மணிவிழா நினைவுக்காகக்
கல்லூரி எழுப்பித்தந்த தோரண வாயில்.



திருநெறிச்செல்வரின் மணிவிழாவைக் காணத்
திரண்டு வந்த மக்கள்தமை வரவேற்ற திருவாயில்.



வள்ளல் மணிவிழா மணிக்கூண்டு மணி காட்ட
வருகின்ற போகின்ற உந்துக்களின் சங்கமம்.



திருஞான சம்பந்தரும் நாவுக்கரசரும்
தேவாரம் சூட்டிய திருத்தளிக் கோயில்.



சீதாதேவியின் திருவடி தோய்ந்த
சீதளிக்குளமும் திருத்தளியின் மாட்சியும்.



நாடு விடுதலை காண உயிர்தந்த மருது வீரர்
நீடு துயிலுக்கு இடம் தந்த 'நினைவு சின்னம்'.



சுற்றுவட்டார மக்களின் நோய் தீர்க்கும்
சுவீடிஷ் பணிமன்ற மருத்துவ மனை.



குதிரையில் ஏறிக் கோலோச்சும்
கோட்டைக் கருப்பரின் கோயில் மாட்சி.



அரச மரம் வீற்றிருக்கும் பிள்ளையாரும்
அரவத்தின் தேவதையும் அருளும் மேடை.

உ

சிவமயம்

# அன்னை எழுவரின் அருள்மிகு தத்துவங்கள்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் சிவாகம மணி
சித்தாந்த ரத்னகரம் – சிவாகம சிரோமணி — சேது சமஸ்தான
ஆகம வித்வான்

**M. ஜயராமணி சிவம்**

'ஒலியாகி உயிராகி உருவாகித்
திருவாகிக்
கலையாகி நிலையாகிக் கண்ணாகி
விண்ணாகி
மலையாகி விளங்குகின்ற
வருமன்னை வைணவியே
அலையாத அமைதி தரும் அன்பேநீ
அருள்வாயே!'

ஓங்காரத்தின் உட்பொருளாய் என்றும் நீங்காதபேரொளியாய் விளங்கும் பராசக்தியாம் அன்னையை 'ராஜராஜேஸ்வரி', 'லலிதா', 'திரிபுரசுந்தரி', 'சிவகாமி', 'காமாட்சி', 'மீனாட்சி' எனப்பலப்பல நாமங்களால் மக்கள் இனத்தவராகிய நாம் அழைக்கிறோம். 'இப்படியன் இன்னிறத்தன் இவனிறைவன் என்று எழுதி காட்டொணாதே!' என்பர் நாவுக்கரையர். உலகத்தின் ஒழுக்க நூலாகிய வேதாகமங்கள்' எதோவாசோநிவர்யந்தே அப்பிராப்யமனஸாஸக' என்று எங்கு வாக்கு மனது முதலியவை எட்டக்கூடாத நிலையில் உண்டோ அந்த இடமே அன்னையின் இடம் எனப்பேசும். இத்தகைய மனம் வாக்கு கருவி காரணங்களுக்கு எட்டாத ஒலியின் உயிராகிய பலனும் ஒளியாகி நிற்கும் இடமே, நாத விந்துக்களின் இடம் எனக் கூறினர். மேலோர் நாதம் நீண்டு செல்லும் இயல்புடையது. விந்து ஒளிவட்டம், ஓரிடத்தில் தோன்றிய ஒளி வட்டமாக விரிந்து, பரந்து ஒளி விடுதல் காண்கிறோம். இத்தகைய நாத வடிவான தத்துவம் சிவ தத்துவம் எனவும், ஒளி வடிவான விந்து சக்தி தத்துவம் எனவும் ஆன்றோர் கண்டனர். இந்த ஒலி, ஒளி இயக்கம் என்றும் பிரிக்க முடியாதது ஆகும். இந்த இயக்கத்தின் விரிவே உலகமாக, உடலாக, உண்ணும் உணவாக விரிந்தன என்பது நூல்களில் காணப்படுகிறது. எந்தப் பொருளையும் உண்மை காண்பதற்கு காண்டல், கருதல், உரை, அபாவம், என்ற நால்வகை ஏதுக்களால் அறியப்படும். கண்களால் காணுதல் காட்சி எனவும், கட்புலனாகா விடினும் கருத்தின் துணைகொண்டு இந்தப் பொருள் இங்கு உள்ளது என்பதை பிறிதோர் இயக்கத்தினால் உணர்தல், கருதல் எனவும், கண்ணால் கண்டும், கருத்தினால் உணர்ந்தும் அறிய முடியாத பொருளை ஆன்றோர் எழுதிய நூல் வழி உணர்தல் உரை என்றும் சொல்லப்படும். எந்தப் பொருளையும் இல்லை என்று கூறும் உணர்வு முன்பு இருந்தமை பற்றி எழுந்ததே அன்றி 'இல்லது தோன்றாது' என்ற முதுமொழிப்படி முன்பு இருந்ததை உறுதிப்படுத்

தும் அதலில் அபாவம்,என நான்கு தகுதிகளால் ஒரு பொருளின் உண்மை உணர்தல் கூடும் என்பது நமது பெரியோர் கண்ட முடிவாகும்.

ஈண்டு சிவம் என்ற ஒலியும் சக்தி என்ற ஒளியும் சேர்ந்த இயக்கமே உலக பரிணமம் என் பதை அருணகிரிநாதர் 'நாத விந்துகளாதி நமோநம' என்று தனது திருப்புகழில் கூறி யுள்ளமை காணலாம்.

சக்தி என்ற சொல் ஆற்றல் எனில் வேரு காது!எத்தொழிலும் சக்தி இருந்தால் செயல்படு தலும் அஃது இல்லாதிடத்து ஒய்ந்திருத்தலும் கண்கூடாகும். இந்த நிலையில் நாம் காணு கின்ற உலகம், உலகத்துப் பொருள்கள் அனைத் தும் ஒரு சக்தியின் ஆற்றலின்றித்தோன்றுதலும் முறையே செயல்படுத்துதலும், மறைதலும் கூடாது ஆதலின் கண்ணுக்குப் புலனாகாது நுண்ணறிவினல் மட்டும் உணரப்படும் ஒர்சக்தி யின் இயக்கமே என்பது பெறப்படுகிறது. அந்த சக்தி என்பதை நமது ஆன்றோர்இச்சை,கிரியை, ஞானம் என மூவகையாகப் பிரித்துக் கண்டனர் இதனை வேட்கை, செயல், அறிவு எனவும் கூறி னர். இத்தகைய ஆற்றல் உடைய சக்தி (இறைவி) ஆன்மாக்கள் ஆகிய நாம் உண்மை உணர்ந்து குறைவிலா நிறைவு பெறுதற் பொருட்டு நம்மீது உள்ள அளவில்லா கருணை யால் உலகத்தையும் அதில் காணும் பல்வேறு பயன்களையும் தன்னிச்சையால் படைத்து ஆன்மாக்களாகிய நாம் அதனில் தோய்ந்து இன்ப துன்பங்களில் மூழ்கிச் செயற்படுமாறு செய்வித்தும், நல்லறிவு தோன்றிய இடத்து இப்பொருள்களின் நிலையாமை உணர்ந்து என் றும் வற்றாத, முற்றாத இன்ப வாழ்வின் இயல் பினை (ஞானம்) அறிவுக்கு அறிவாகி நின்று உணர்த்தியும், செயல்படும் நிலையை ஐந்து தொழில்களாக நமது நூல்களில் பேசப்படு கிறது. இந்த ஐந்தொழில்களையும் நம்போல் கருவி காரணங்களின் தொடக்கின்றித்தன் வயத் தால் சன்னிதி மாத்திரையானே நிகழ்த்தி அருள் பாலித்த வடிவங்களே திரு உருவங்களின் தோற்றம் ஆகும்.

நம்முடைய மனத்தில் எழும் அசுர சக்தி களான காம, குரோத, லோப, மோக, மத மாச் சரிய என்ற அறுவகை தீய சக்திகளின் எழுச்சி களை உருவகப்படுத்திப் பெயர் தந்து மது, கைடபன, சும்பன், நிசும்பன், இரத்த பீஜன், மகிஷன் முதலிய அசுரர்களாக்கி அவைகளை பரதேவதையாகிய அன்னை பராசக்தியின் திருவருள் கொண்டு நீக்குவதே(ஞானசக்தியால் அவர்களை ஒழித்தல் என்பதாகவும் உணர்ந்த எழுந்த கதைகளே மார்க்கண்டேய புராணத்தில் காணப்பெறும் 'தேவி மகாத்மியம் ' என்ற நூலா கும்.பல்வேறு ஆற்றல்களின் விளக்கங்களை தேவி பாகவதத்திலும் சாக்த நூல்களாகிய லலிதோ பாக்யானம் டாமர்யாதி தந்திரம், குளார்ணவம் ருத்ரயாமலம், காமகலாவிலாசம் , முதலிய நூல்களில் காணலாம்.

சைவாகமங்களில் திருக்கோயிலை மனித சரீரத்திற்கு உவமை கூறி அந்த சரீரத்தின் ஆன்மாவாக (பசு) நந்தி தேவரையும் ஆன்மா வின் நாயகராக உள்ளிருக்கும் (பதி) சிவபெரு மானையும் கூறி தீய சக்திகளை (பாசம்)பலியிடுதல் மூலம் பலி பீடத்தையும் கூறியுள்ளமை காண லாம். குரோத சக்திகளை அடக்கும் அன்னை சக்தி தத்துவம் எழுவரை பூசித்தும அவர்கள் முன பலியிடும் நிகழ்ச்சி வழிபாடுகள் பேசப்படு கிறது. திருக்கோயிலில் பரிவார தேவதைகள் வைக்கப்பெறும் முறையில் கோயிலின் வலது பக்கத்தில் (தோள்) புஜம் வலிமைக்கு அறிகுறி ஆதலின் அந்த ஸ்தானத்தில் வலிமை தரும் சக்திகளாக சப்தமாதாக்களையும் ஸ்தாபனம் செய்யவேண்டும என அஜிதம், சுப்பிரபேதம், விராகமம், சந்தான சம்மிதை முதலிய ஆகம நூல்களில் காணலாம். 'ஸ்ரீ மாத்ரே நமஹ' என்பது லலிதா சகஸ்ரநாமத்தின் தொடக்க மந்திரமாகும்.

பொதுவாக நமது பாரத தேசத்தில் கொற்றவை வழிபாடு சங்ககாலம் முதல் இருந்து வந்துள்ளது. மகிஷாசுரமர்த்தினியை கொற்றவை என்றும் காடுகிழள் என்றும் சங்க நூலாகியசிலப்பதிகாரம் பேசுகிறது. வடநாட் டிலும் கொற்றவை வழிபாடு (துர்க்கா பூஜை) சிறப்பாக இன்றும் நடைபெறுவது காணலாம். இந்த வழிபாட்டு நெறியில் அன்னை எழுவரை யும் ஒரே வரிசையில் வைத்து வழிபடும் முறை எல்லா முக்கிய சிவாலயங்களிலும காணலாம். இறைவன் நிகழ்த்தியதாகக் கூறபபடும் அட்ட

வீரட்ட செயல்களுக்கு ஒப்ப அன்னையும் தனது பராக்கிரமத்தில் அழிவிலா வரம்பெற்ற அசுரர்களான மதுகைடபன், மகிஷன், சும்பநிசும்பன் இரத்தபீஜன், தூம்ரலோசனன், மன்மதனின் சாம்பலில் இருந்து உருவான பண்டாசுரன் முதலிய அசுரசக்திகளைப் போராடி வெற்றி பெற்ற நிகழ்ச்சிகள் தேவி மகாத்மியம் என்ற நூலில் காணப்படுகிறது. ஆதிபராசக்தி தன்னுடைய அம்சமான பிராம்ஹி, மகேஸ்வரி கௌமாரி, வைஷ்ணவி, வாராகி, மஹேந்திரி, சாமுண்டி என்ற எழு சக்திகளைத் தோற்றுவித்து அசுரர்களைப் பந்தாடி அழித்தாள என்றும் காணப்படுகிறது. இந்த அன்னைகள் எழுவரில் நடுவில் வைணவி என்ற மாதாவையும் அல்லது சாமுண்டி என்ற கொற்றவையையும் சிறப்பாகக் கொண்டு திருவுருவப் படிமங்கள் அமைத்துப் பூசிக்கவும், தனிக்கோவில்கள் வழிபாடு செய்யவும் விதிகள் அஜிதாகமத்தில் அமைத்துள்ளது- எல்லாத் திருக்கோயில்களிலும் சப்தமாதாக்கள் திருவுருவங்கள் இருந்தாலும் அன்னை எழுவருககு என தனிக்கோயில்கள் அமைந்துள்ள இடங்கள் ஒரு சிலவேயாகும். பழமை வாய்ந்த கோயிலாகக் கருதப்படும் திருச்சி மாவட்டம் செல்லியம்மன் கோவிலும் முகவை மாவட்டம் திருப்புத்தூரில் உள்ள பூமாயியம்மன் கோயிலும் ஆகும். விழுப்புரம் அருகில் உள்ள 'திருவக்கறை' வக்கறகாளியம்மன் கோயிலும் சென்னையில் வேளாச்சேரியிலும் இன்னும் சில இடங்களில் சப்தமாதாக்களுக்கு தனிக் கோயில் உள்ளன. நடுவில் தாமரைப் பூவில் உதித்த திருமகளின் அம்சமான பூமாயி என்ற வைஷ்ணவி பிரதான தேவதையாக சப்தமாதா கோயில் முகவை மாவட்டம் திருப்புத்தூரில் உள்ள திருக்கோயிலாகும். வைஷ்ணவி வழிபாடு மிகச்சிறந்தது, இதனை ஆதிபராசக்தியாகிய பரதேவதையை தியானம் செய்யும்முறையில் இறைவன் பக்கத்திலுள்ள 'விந்திய நிவாஸினி' என்ற சக்தி வைஷ்ணவி' என்ற வடிவத்தில் இலக்கணமாக இருப்பதைக் காணலாம். 'சௌவர்ணம் புஜ மத்யகாம் திரிநயனும் சௌதாமினி சன்னியாம், சங்கம் சக்கர வாரபயஞ்ச ததத் இந்தோகலப் பிப்ரதீம் க்கிரைவேயாங்காத ஹ்ராகுண்டல தராம் ஆகண்டலாஸ்தேதுதாம். தியாயேது விக்திய நிவாஸினிம் சகிமுகீம் பார்ஸ் வஸ்த பஞ்சானனாம்' என்ற சுலோகப்படி வைஷ்ணவி வடிவம் பரமேஸ்வரனின் பாரசக்தியாகவே காணப்படுகிறது. வடநாட்டில் காஷ்மீர் பகுதியில் உள்ள வைஷ்ணவி மலைக்கோயிலிலும் துர்க்கா லட்சுமி சரஸ்வதி என்ற மூன்று லிங்க வடிவாகவே வைஷ்ணவி பூஜிக்கப்படுகிறாள். சென்னைக்கு அடுத்த திருமுல்லைவாயிலிலும் அருளாளர் கனவில் வந்த வடிவமான வைஷ்ணவி சிவசக்தி திருவுருவாகவே அமைந்திருத்தல் காணலாம். உலகன்னையாகிய பராசக்தி ஆன்மகோடிகளுக்கு அருள்பாலிக்க எழுந்த திருக்கோலங்களின் ஒரே அமைப்பு சப்தமாதாக்களின் வடிவங்களின் அமைப்பாகும். மேலேகூறிய நாதவிந்துக்களின் மூலத்தோற்றமே இந்த தத்துவத்தை உணர்த்தி நம்மை பரவசப்படுத்தும் அன்னை எழுவரின் திருவுருவங்கள். அண்மையில் நிகழவிருக்கும் பூமாயி அம்மையின் திருக்குட நன்னீராட்டு விழாவில் மலரும் இந்த தெய்வீக மலரில் என்னையும் ஈடுபடுத்தி தெய்வமலர் பிலிற்றும் தேமதுரதமிழ்த்தேன்நுகர வாய்ப்பளித்தஅன்னை பூமாயி அம்மையின் திருவடிகளை வாழ்த்தி வணங்கி இப்பணியில் ஈடுபட்டுள்ள அன்பர் குழாம் அனைவரும் எல்லா நலன்களும் பெற்று இன்புறுக என்று வாழ்த்தி அமைகின்றேன். நலம் பெருகுக.



# பூமகள் பெருமை பூமிக்கே

வான்மிகி வாழ்ந்த திருப்புத்தூரில்
வழக்கமாக நாற்பத்து ஏழு யாண்டுகள் பூமாரி பொழிந்த
மக்களுக்கு உன் அருள் கிடைக்க வேணுமம்மா.
பால் அபிஷேகம், பன்னீர் அபிஷேகம் தினம் உனக்கு
நடக்குமாம்
வருடம் ஒரு திருவிழா, வையம் புகழ் பூத்திருவிழாவாம்,
மக்கள் வெள்ளமெனத் திரண்டு மலர் சொரிதல் கண்டு
மனம் இனிக்குமாம்.
எங்களுக்குத் தாழ்வில்லா தனம் தந்து தருமம் செய்ய
இங்கு வள்ளல் உண்டாம்.
அவர் திருநாமம் ஆறுமுகம் பிள்ளையாம்.
தையல் திருமாது உன் இருப்பிடம் தெற்கே.
மெய்யான திருப்பணி செய்தவர் குடும்பம் இருப்பிடம் வடக்கே.
அவர்கள் மெய்உலர்த்திப் பொருளும் புகழும் ஈட்டியது கிழக்கே
இங்கு அவர்கள் கல்விக்குக் கலைக்கூடம் கட்டியது மேற்கே.
உன் கனிவான கருணை உள்ளம் எங்கள் புத்தூரில் புதிய
தொழில் அமையவும்
சின்னத்தொழிலாம் சிறுதொழில் செங்கல் தொழில் சிறக்க
அன்பான உன் அருள் வேணுமம்மா.
சிறப்பான சிறுமலரில் என் காணிக்கை
மாதாவுக்கு சேதுவின் வேண்டுதல்-

அன்புள்ள,

குரு. சேது.

செயலாளர்,
நகர் இந்திரா காங்கிரஸ் கமிட்டி,
திருப்புத்தூர். (இரா. மா.)

# தேவாலயங்களில் நவக்கிரகங்கள்

*'சிரலேவாய்த் துறவி'*

பரம்பொருளின் இச்சையினுல் உண்டான பதினுன்கு உலகங்களுக்கும் அகிலாண்ட நாயகியான பராசக்தியே பிரதானமாக விளங்குகிருள். பாலேயாகவும், புவனேச்வரியாகவும், மஹா திரிபுரசுந்தரியாகவும் நாம் போற்றி வணங்கும் அன்னே. பராசக்தியாகவும், ஜீவராசிகளுக்கெல்லாம் தாயாகவும் இருந்து காத்து ரக்ஷிக்கிருள். ஆகவே உலகில் ஜீவன்தோன்றி, பெருக தாய் அவசியமாகிருள் என்பது புலனுகிறது. அதனுல்தான் சிருஷ்டி, ஸ்திதி, லயம் ஆகிய முத்தொழிலேச் செய்யும் பிரம்மா விஷ்ணு ருத்திரன் என்ற மும்மூர்த்திகளேயும் அவர்களின் தொழில் காரணமாக தோன்றும் சத்வ, ரஜஸ், தமோ குணமுடைய ஜீவராசிகளேயும், தேவதா சொருபங்களேயும் தோற்றுவித்து, காரிய காரணங்களேயெல்லாம் தன்னுள்ளடக்கி, உலகம் உய்யக்கருணே கொண்டுள்ளவள் தாய் எனப்படும் பராசக்தியே என வேதங்கள் கூறுகின்றன.

பராசக்தியின் பார்வையின் கீழ் இயங்கும் மற்றத் தெய்வீக அம்சங்கள் பற்றி ஆராயப் புகுந்தால் அவை எல்லாமே அன்னேயின் பாத தூளிகளாகவே தோற்றமளிக்கும். தனித்தனியாக இருந்தாலும் அவைகளுக்குள் ஒருவித ஒருமைப்பாடும் ஒழுங்கு நியதியும் இருப்பதையும் ஆராய்ச்சி எடுத்துக் காட்டும். அத்தகைய தெய்வீக அமைப்பில் நவக்கிரக அமைப்பும் அடங்கியதே.

'0' பூஜ்யத்தில் எண்கள் உற்பத்தியாகின்றன, அவற்றின் அளவு 9 (ஒன்பது) என வரையறை செய்யப்பட்டுள்ளது. உலகத்தின் படைப்பு ஒன்பது, தேகத்தில் ஒன்பது துவாரங்கள், வியாகரணங்கள் ஒன்பது என அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இத்தகைய பெருமை வாய்ந்த ஒன்பது எங்கே போய் முடிவடைகிறது?

ஒன்றில் ஆரம்பித்து ஒன்பதில் போய் முடிவடையும் எண்கள் பூஜ்யத்தினிடம் (0) சரணடைந்து. ஒன்பது ஒன்பதாகப் பெருகி கோடானகோடி வரை போயுங்கூட எல்லேயற்று நிற்பதைப் பார்க்கிருேம். இந்த மகத்தான நிலே எண்களுக்கு ஏற்பட பூஜ்யமே காரணமாகிறது.

பரஸ்பரம் பூஜ்யத்தின் பெருமையும் எண்களின் பெருமையும் ஒருங்கே சேர்ந்து பரிமளிக்கும் தெய்வ நிலேயே நவக்கிரஹங்களும், அவற்றின் சார்பில் பக்தி உள்ளங்களேத் தொடர்ந்து பெருமளவில் தன்பால் ஈர்க்கும் தேவாலயங்களும் ஆகும். பூஜ்யத்தில் ஆரம்பித்த எண்ணிக்கை ஒன்பதைக் கடந்ததும் மறுபடியும் பூஜ்யத்திலேயே போய் அடங்கிவிடுவதற்கு இந்த நவக்கிரஹ சக்கர பிரதிஷ்டை தேவாலயங்களே உதாரணமாகக் கொள்ளலாம். அப்படிப்பட்ட தேவாலயங்களோடு அன்னே ஸ்ரீ வைஷ்ணவி சமேத சப்த மாதாக்கள் தேவாலயமாம் நமது ஸ்ரீ பூமாயி அம்மன் திருக்கோயிலும் இடம் பெறுகிறது — பின் வருவதை முன்னமே அறிந்து நீ ஏற்றுக் கொண்டாலும் புறக்கணித்தாலும் என் கடமை தெரிவித்தேன் என்று சுற்றத்திற்குக் கடமையாற்றி விண்ணுலகு சென்ற அனுபவ மேதை ஸ்ரீ துரைசாமிப் பிள்ளேயின் இளேய குமாரர் ஸ்ரீ மாணிக்கவாசகம் அவர்களால்,

பரம்பொருளின் நோக்கம் விரிவானது. எல்லேயற்றது. தன்னேயோ, தன் இச்சையால் தோன்றிய தெய்வங்களேயோ, ஜீவராசிகள் எவ்விதத்திலாவது வழிபட்டு பிறவித் துன்பத்தை கடந்து மோட்ச சாதனம் பெற

வேண்டு மென்பதே அதன் நோக்கம். இம் முயற்சியில் மனித சமுதாயம் வெற்றி காண வேத — சாஸ்திரங்களும். இதிகாசங்களும், ஜோதிட கிரந்தங்களும் வழிகளைக் கூறுகின்றன.

ஜோதிட சாஸ்திரத்திற்கு சூரியன். சந்திரன், ராகு, கேது, குரு, அங்காரகன், சனி புதன், சுக்ரன் ஆகிய ஒன்பது கிரஹங்களும், அவை சஞ்சாரம் செய்யும் 27 நக்ஷத்திர மண்டலங்களும், 12 ராசிகளும் ஜீவநாடியாக விளங்குகின்றன, முகம் பார்க்கும் கண்ணுடி. நாம் பார்க்கும் போதெல்லாம் எவ்வாறு முகத்தின் தன்மையை பளிச்சென்று காட்டுகிறதோ, அவ்வாறே ஜோதிட சாஸ்திரம் நமது கடந்த, நிகழும். வருங்காலங்களின் தன்மையை விளக்குகின்றன.

மனித குலத்தை பரம்பொருளின் இச்சைக்கு ஏற்ப இயக்க வேண்டிய கடமை நவக்கிரஹங்களையே சாருகிறது. ஒரு விரலில் உள்ள பொம்மையை ஒன்பது விரல்களில் ஒன்பது கயிற்றைக் கட்டி, இழுத்து, ஆட்டி. அசக்கி, நிமிர்த்தி, மடக்கி அங்கசேஷ்டைகளையெல்லாம் கதாபாத்திரத்தின் தன்மைக்கேற்ப ஆட்டி வைக்கும் பொம்மலாட்டக்காரன் போல பரம்பொருள் மனிதகுலம் என்ற பொம்மையை நவக்கிரஹம் என்ற ஒன்பது கயிற்றல் கட்டி படைத்துக் காத்து அழித்து ரக்ஷிக்கிறது. காலத் தெய்வமாகவும் விளங்கும் அன்னை பராசக்தியின் பாசக்கயிறுகளே நவக்கிரஹங்கள். இன்று அவை அன்னை ஸ்ரீ பூமாயி அம்மன் அரவணையில் இடம் பெற்றுள்ளதும் சாலவும் பொருத்தமானதே.

நமது வேத சாஸ்திரங்களும் ஆகம, தாந்த்ரீக முறைகளும் நவக்கிரஹங்களை பெருவாக ஏற்று. விளக்கி அவற்றின் ஆராதனைப் பலனை நமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. சித்தாந்தங்கள், மதக்கொள்கைகளை வெவ்வேறு விதமாக விமரிசனம் செய்த போதிலும் நவக்கிரஹங்களின் நிலை குறித்து முரண்பாடான விளக்கங்களைக் கூறவில்லை.

நமது பாரத இந்து சமுதாயம் நவக்கிரஹ தெய்வங்களுக்கு மகத்தானதொரு இடமளித்து நவக்கிரஹ வழிபாட்டை முறையாகச் செய்து வருகிறது. ஏனெனில் கர்மகாண்டம் கூறும் பரிகாரங்களிலும், வைதீக வேதவேதாந்த சாஸ்திர பரிகாரங்களிலும் நமது முதாதையர் முழு நம்பிக்கை வைத்து, தலைமுறை தலைமுறையாக ஆயிரமாயிரம் வருஷங்களாக நல்வாழ்வும் பெருவாழ்வும் வாழ்ந்து வந்ததை நாம் நன்கு அறிவோம். அவர்கள் கடைப்பிடித்த வழி முறைகளின் இரத்தமே நமது இரத்தத்திலும் கலந்திருக்கிறது. அன்ருட வாழ்க்கையில் உழலுவதே மிகக்கடினமாகவுள்ள இந்தக்காலத்தில் நாம் எவ்வாறு கஷ்ட நிவாரணத்துக்கான பரிகாரங்களை ஆய்ந்து அறிந்து செய்து மன நிறைவு காண இயலும்? நாம் இன்று அனுபவிக்கும் துன்பங்களை, தீர்க்க திருஷ்டியில் திகழ்ந்த நமது சான்ருேர் அக்காலத்திலேயே ஊகித்து உணர்ந்தவர்கள் போன்று மிக மிக எளிதான முறையில் நம்மையறியாமலே நாம் நமக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளும் வகையில் நவக்கிரக சக்கரங்களை எட்டு தேவாலயங்களில் பிரதிஷ்டைகளில் சேர்த்துசெய்தருளியிருக்கிருர்கள். ஒன்பது கிரகங்களை எட்டு தேவாலயங்களில் பிரதிஷ்டை செய்தது ஏன் என்று கேட்டு விடாதீர்கள், ராகு தலை, கேது உடல் இரண்டும் ஒன்றிலிருந்து உருவானவை, திருமால் மோகினி அவதாரமெடுத்து அமுதம் பரிமாறிய போது ஏற்பட்டதல்லவா?

இந்த ஒன்பது கிரகங்களும் தமிழ்நாட்டில் எட்டு பழமையான க்ஷேத்திரங்களில் ஸ்தல மூர்த்திகளின் பாதாரவிந்தங்களின் கீழ் யந்திர வடிவில் அமையப்பெற்று மனிதகுலம் உய்ய அருள்பாலித்து வருகின்றன இத்தகைய பிரதிஷ்டைகள் யார், எக்காலத்தில் செய்தனர் என்பது அன்றுமுதல் இன்றுவரை ரகஸ்யமாகவே இருந்து வருகிறது என்ருலும் இப்பிரதிஷ்டைகள் செய்யப்பட்டிருப்பது மட்டும் கைலாசபரம்பரையில் முதல்வராகிய திருமூலர் அளித்துள்ள ஒருநாடி சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது என்பதோடு நாம் திருப்திப்பட்டுக்கொள்வோம்.

பக்தியுள்ளங்கள் அந்த க்ஷேத்திரங்களுக்குச் சென்று குறிப்பிட்ட நவக்கிரக தேவதையையும்

அதற்கு மகத்தான சக்தியை அளிக்கும் தல மூர்த்தியையும் வழிபட்டு ஜோதிட சாஸ்திரம் கூறும் பரிகாரங்களைச்செய்து துன்ப நிவாரணம் பெறவேண்டி அந்தப் பரம ரகஸ்ய நாடி சாஸ் திரத்திலிருந்து இவ்வதிசய அற்புத ஆலயங்களை மட்டும் குறிப்பாக பிரகடனம் செய்துள்ளவருக்கு நாம் நன்றி செலுத்துவோமாக. இவ்வாலயங் களில் நவக்கிரஹங்களும் அவற்றை தமது இச்சையால் தோற்றுவித்த பரம்பொருளும் ஸ்தூலமாகவும், சூஷ்மமாகவும் கருவறையிலி ருந்து நமது வாழ்வுத்துயர், பிறவித்துயர் இரண்டையும் அகற்றும் அருளொளியாகத் திகழ்வதை நாம் உணரத்தவற மாட்டோம்.

## சூரியன் - சூரியனர் கோவில்

ஆதித்தன், சூரியன், பானு என்று நாம் போற்றும் பிரத்யட்ச தெய்வமாக விளங்கும் சூரியன் தஞ்சை மாவட்டத்தில் சூரியனர் கோயில் என தன் பெயரிலேயே விளங்கு ஒரு சிறிய கிராமத்தில் மற்ற எட்டு கிரகங்களையும் கோயில் பிரகாரத்தில்தனித்தனியேவீற்றிருக்கச் செய்து நடுநாயகமாக கோயில் கருவறையில் சாயா சம்ஞா சமேதராக நின்ற நிலையில் தரிசனம் தருகிறுர். பரம்பொருள் அதைச் சார்ந்துள்ள பிரம்மா, விஷ்ணு, ருத்ரர்கள் மற்றும் கோடானுகோடி தெய்வ நிலைகள் எல்லாம் புராண இதிகாச வேதக் கற்பனை என்று கூறும் அதிமேதைகளின்பகுத்தறிவுக்கும் எட்டாத நிலையில் காலையில் தோன்றி மாலையில் மறைந்து பகலையும் இரவையும் உண்டாக்கி வெப்பத்தையும் தண்மையையும் காலத்திற் கேற்ப அளித்து ஜீவராசிகளின் ஜீவநாடியாக விளங்கும் இந்தப் பிரத்தியக்ஷ மூர்த்தியை இக் கோயிலில் மற்ற எட்டு கிரஹங்களுமே பிரகாரத்திலிருந்து தரிசிக்கிற விந்தையைப் பார்க்கும்போது, பக்தனின் மெய்சிலிர்க்கிறது; உள்ளம் நெகிழ்கிறது.

## சந்திரன் - திருவேங்கட முடையான்

சந்திரன் என்றசோமன், பிரத்யக்ஷ பிரார்த் தனைத் தெய்வமான வெங்கடேச பெருமாளின் திருவடிக் கமலங்களின் கீழ் யந்திர சொருபத் தில் தனக்கே உரித்தான தண்மையின் சுக சௌபாக்யத்தை பரம்பொருளின் இச்சைக்கு ஏற்ப, எவ்வித விரோத பாவமுமில்லாமல் உலக மாந்தருடைய களங்க மெல்லாவற்றையும் தன தாக்கிக் கொண்டு நாடுபவர்க்கு நலன் அளிக் கிருன்.

## செவ்வாய் - திருவாவினன்குடி

தித்திக்கும் திருப்புகழின் தீஞ்சுவை ஜோதி யாகத் திகழும் தண்டபாணித் தெய்வமே அங் காரகன் - செவ்வாய்.

தேவர்களும் சித்த புருஷர்களும் தேவ சேனுதிபதி என்று போற்றி வணங்கிய வீரர் களுக்கெல்லாம் வீரனுக விளங்கும் போகர் கண்ட புனிதன், பழனியம்பதி பரமன் தண்டாயுதபாணி தனது நவகிரஹ ஹம்ஸ் யந்திரத்தை தனது திருப்பாதங்களில் வைத்திருந்து நாடி வரும் அடியாருக்கு அபயமளித்து அவர் பயம் நீக்கி அருள் புரிகிருன்.

## புதன் -- ஆலவாய் க்ஷேத்ரம்

மதுரை என்றதும் அங்கயற் கண்ணி ஞாபகம் ஒன்றே நம் உள்ளத்தில் தோன்றுவது சகஜம். ஆனுல் ஆலவாய் அழகனின் சன்னதி விசேஷம் மிக மிகப் பெரியது என்பதை, இங்கு கும்பாபிஷேகத் திருவிழா இன்று நடக்க வித்திட்டுத் தேவைப்படும்போதெல்லாம் பொருளளித்து, தானும், தன் செல்வமுமே கண் கவர் இராஜகோபுரத்தையும், விமானத்தையும் உருவாக்கித்தந்துள்ள இத்திருப்பணிக் குழுப் புரவலர், வள்ளல், அருள்மாமணி ஸ்ரீ ஆறு முகம் பிள்ளை அவர்களைப் போன்ற ஒரு சிலரே உணருவர். அவருள்ளம் அதையுணர்ந்த தாலேயே ஆலவாய் அரசனுக்கு ஒவ்வொரு ஆண்டும் ஐப்பசி பௌர்ணமியன்று அன்னுபிஷேகம் செய்து ஆலவாய் அழகனை யும் அவன் பாதமலர்களின் கீழ் யந்திரவடிவில் அமைந்துள்ள, ஞானத்தைக் கொடுக்கும் சக்தி வாய்ந்த ஞானகாரகனை புதன் பகவானையும் மகிழ்வித்து, பக்தகோடிகள் பலரும் அக்காட்சி யைக் கண்டு சேவித்து அருள் பெற வகை செய்துள்ளார்.

## குரு - திருச்செந்தூர்

அஞ்ஞான இருளைப்போக்கி ஞானத்தை வளர்த்து வழிகாட்டுபவன் குரு. இதை நாம் உணர உதவும் கிரகம் குரு என்ற தேவ பிரஹஸ்பதி.பரமனின் தக்ஷிணாமூர்த்திக் கோலமும் குரு என்றே போற்றப்படுகிறது. இந்த மகத்தான தெய்வத்துக்கே திருக்குமரனாய் அவதரித்து, குருமூர்த்திக்கே குருவாக விளங்கிய குகப் பெருமான் அறுபடை வீடுகளில் ஒன்றான அலைவாயிலில் குரு மகா சக்ரத்தின் வடிவாக தரிசனமளித்து நம்மைக் காத்தருளுகிறான். பொதுவாக முருகன் திருக்கோயில், சன்னதிகளெல்லாம் அங்காரகன், குரு ஆகிய இரண்டு கிரஹங்களோடும் தொடர்பு கொண்டுள்ளவையாகக் கருதப்பட்டாலும், அங்காரகனுக்கு ஆவினன் குடியையும் (பழநி) குருவுக்கு திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்) க்ஷேத்திரத்தையும் ஜோதிட நாடியில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

## சுக்ரன் - ஸ்ரீரங்கம்

3, 6, 10 தவிர மற்ற ஒன்பது ராசிகளிலும் ஜாதகனுக்கு விசேஷ பலன்களை வாரி வழங்கும் வள்ளலான சுக்ர பகவான் அரங்கத்தம்மானின் ஆலயத்தில் பரிபூரணமாக சக்கரப் பிரதிஷ்டையாகியுள்ளார்.

## சனி - திருநள்ளாறு

சூரியனைப் போல் சனி பகவான் இந்த க்ஷேத்திரத்தில் தனது திவ்ய சொரூபத்தின் அடியிலேயே தன் யந்திரத்தையும் அமைத்துக் கொண்டிருக்கிறார்.சனிச்வர் கிரகத்தின் தனித்தன்மையைப் பற்றி அறியாதார் இல்லை. வாழவைப்பதிலும் வீழ்த்துவதிலும் இவருடைய சக்திக்கு சரிநிகர் சமான சக்தி படைத்த வேறு ஒரு தெய்வம் இல்லை என்ற முடிவிற்கு வராதவர் இருப்பதற்கு இல்லை. இதை எழுதிக் கொண்டிருக்கும் நானும் இப்போது அச்சுழலில் சிக்கி அனுபவித்து வருகிறேன்-விழ்ச்சிப்படலம்! திருநள்ளார் க்ஷேத்திரத்தை நினைத்த மாத்திரத்திலேயே சனி பகவான் கருணை கிட்டுகிறது என்று உறுதியுடன இருப்பவர் அநேகர் அவர்களைப் போல் நானும் உறுதியுடன்தான் இருக்கிறேன்.

காக த்வஜாய வித்பஹே கட்க
ஹஸ்தாய தீமஹி
தன்னோ மந்த; பிரசோ தயாத்.

## ராகு, கேது - காளஹஸ்தி

காளஹஸ்தி, ஸ்வர்ணமுகி நதி தீரத்தின் கரையில் பழம்பெரும் புராதன சிவாலயம். காளத்தீசுவரர் கண்ணப்ப நாயனாரை ஆட்கொண்ட கதையையும், எட்டுக்கால் பூச்சியால் பூஜிக்கப்பட்டதையும் நாம் அறிவோம். சுவாச தத்துவத்தின் அடிப்படைக்கு ஆதாரமாக விளங்கும் சாயா கிரகங்களான ராகு, கேது யந்திரங்களை தன்னுள் வைத்து வாயுலிங்கமாக கருவறையில் காளத்தீச்வார் காட்சி தருகிறார். இந்த அற்புத ரகசியத்தை வெளியிடும் நாடி கிரந்தத்தில் ராகு, கேது கிரகங்களே இந்த காளத்தி நாதனை பூஜித்ததாக விளங்குகிறது.

மேற்கூறிய பழம்பெரும் புராதன ஆலயங்களில் ஒன்பது கிரஹங்களும் யந்திர வடிவில் அமையப்பெற்றிருந்தாலும் இங்கு அவை சிலர் வடிவத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதை பரிசுத்தமான உள்ளத்துடன் பூஜித்து நம் குற்றங்களைக் களையவும், பாவக் குவியல்களை பொசுக்கவும் அருள்புரிய பிரார்த்திப்போமாக.

ஜபாகுஸும ஸங்காசம் காச்ய பேயம்
மஹாத்யுதிம்
தமோரிம் ஸர்வ பாபக்னம் ப்ரணதோஸ்மி
திவாகாம் 1

ததிசங்க துஷாராபம், க்ஷீரார்ணவ
ஸமுத்பவம்
நமாமி சசிநகம் ஸோமம் சம்போர்
மகுட பூஷணம் 2

தரணீ கர்ப்பஸம்பூதம் வித்யுத்காந்தி
ஸமத்பிரபம்
குமாரம் சக்திஹஸ்தம்ச மங்களம்
மங்களம் ப்ரணமாம்யகம் 3

ப்ரியங்கு கலிகாச்யாமம்
ருபேணுபிரதிமம்புதம்
ஸௌம்யம் ஸௌம்ய குணேபேதம்
தம்புதம் ப்ரணமாம்யகம் 4

தேவாநாம்ச ரிஷீணச குரும்காஞ்சன
ஸந்நிபம்
வந்தநியம் த்ரிலோகா நாம்
தந்நமாமிப்ருஹஸ்பதீம் 5

ஹிமகுந்த ம்ருணளாபம் தைத்யாநாம்
பரமம்
குரும் ஸர்வ சாஸ்த்ர ப்ரவக்தாரம்
பார்க்கவம் ப்ரணமாம்யஹம் 6

நீலாஞ்ஜன ஸமாபாஸம் ரவிபுத்ரம்
யமாக்ரஜம்
சாயா மார்த்தாண்ட ஸம்பூதம்
தந்நமாமி ச்னைஸ்சரம் 7

அர்த்தகாயம் மஹாவீர்யம் சந்த்ரா
தித்ய விமர்த்தனம்
ஸிம்ஹிகா கர்ப்ப ஸம்பூதம் தம் ராஹூம்
ப்ரணமாம்யஹம் 8

பலாச புஷ்ப ஸங்காசம் தராகாக்ரஹ
மஸ்தகம்
ரௌத்ரம் ரௌத்ராத் மகம் கோரம்
தம் கேதும் பிரணமாம்யஹம் 9

ஓம் சாந்தி

## ஸ்ரீ பைரவ மூர்த்தி

ரக்த ஜ்வாலம் ஜடாதரம் சசிதாம்
ரத்னங்க தே ஜோன்மயம்
த்ருத்வா சூலம் கபாலம் பாச டமரும்
லோகஸ்ய ரக்ஷாகரம்/
நிர்வாணம் சுனவாஹனம் த்ரிநயனம்
ஆனந்த கோலா ஹலம்
வந்தே பூத பிசாச நாத வடுகம்
க்ஷேத்ரஸ்ய பாலம் சிவம்//

ரக்த ஜ்வாலை போன்ற சிவந்த முடியை உடையவரும், அம்முடியில் சந்திரனைத் தரித்தவரும், ரத்னமயமான ஆபரணங்களை அணிந்து ஒளி பொருந்திய சரீரத்தை உடையவரும், கைகளில் சூலம், கபாலம், பாசம், டமரு முதலியவைகளைத் தரித்து உலகை ரக்ஷிப்பவரும், உடலில் ஆடைகள் எதுவும் தரிக்காது நிர்வாணமாய் இருப்பவரும், நாயை வாஹனமாக உடையவரும் மூன்று கண்களை உடையவரும், எப்போதும் ஆனந்த மயமாக இருப்பவரும், பூத பிசாசங்களுக்குத் தலைவனாக இருப்பவரும், வடுகபைரவரெனப் பெயர் பெற்றவரும், க்ஷேத்திரங்களுக்குப் பாது காவல் தெய்வமாகவும் உள்ள ஸ்ரீ பைரவரை நமஸ்கரிக்கிறேன் என்கிறது த்யான சுலோகம்.

இந்தத் த்யான ச்லோகத்தில் வர்ணிக்கப்பட்ட அலங்கார அழகுகள் யாவும் பொருந்திய சிலையை இங்கு தோற்றுவித்த சிற்பி ஸ்ரீ மாணிக்கம் ஆச்சாரி போற்றுதற்குரியவர். ஸ்ரீ பூமாயி அம்மன் கோயில் பிரகாரத்தில் கலைவளம் பொருந்திய இத்தெய்வத் திருவுருவை பிரதிஷ்டை செய்யும் பாக்கியம் பெற்ற தென்மாநகர் தந்த ஆடல் அரசன்நாமம் பெற்ற ஸ்ரீ பழ. சொ. நடராஜப் பிள்ளையினை போற்றுவோம். அன்னை ஸ்ரீ பூமாயி அம்மன் அன்னருக்கும் அவர் குடும்பத்தாருக்கும் அருள்புரிய பிரார்த்திப்போம்.

'அன்னையின் அடிமை'

# வள்ளலாரும் சக்தி வழிபாடும்

திரு. நா. மகாலிங்கம், பி. எஸ்சி., எப். ஐ. இ.
தலைவர்
இராமலிங்கர் பணிமன்றம், சென்னை.

எல்லாப் பொருள்களையும் அறிந்து, அவற்றுட்பொலியும் இறைமைச் சத்தியையும் உணரும் ஆற்றலுடைய பெருமக்கள், ''எங்கெங்கு காணினும் சக்தியடா'' என்று வியந்து பாராட்டிப் போற்றுகின்றனர்.

கட்புலனாகும் நாம் வாழும் இவ்வண்டமும், கட்புலனாகாது அப்பாலுக்கப்பாலாய் இயங்கும் கோடானுகோடி அண்ட கோளங்களும் ஒரு சக்தியின் ஆற்றலால் இயங்குகின்றன.

ஒன்றை இயங்க வைப்பது எதுவோ அது சக்தி.

நம் கண்ணுக்கு இயக்கமில்லாதவை போல் தோன்றும் பொருள்களுள்ளும், சக்தியின் ஆற்றல் இயங்கிக் கொண்டிருப்பதை. அறிவியல் அறிஞர்கள் கண்டுவியந்துபோயுள்ளனர்.

சக்தியற்றவையெனக் கருதப்படும் ஜடத்துள்ளும் சக்திச் சமுத்திரம் ஒடுங்கிக் கிடப்பதை இன்றைய !அணுக்கதிர் ஆய்வுகள் உலகுக்கு உணர்த்திய வண்ணம் உள்ளன.

விலங்குகளும் பிற உயிரினங்களும் உணர இயலாத இறைத்தத்துவத்தை உணர்ந்த நம் முன்னோர்கள், இறைமையில் ஆற்றல் சக்தியாக வெளிப்படுவதையுணர்ந்து, அதனைச் ''சத்தி தத்துவம்'' ஆக்கி வழிபட்டனர்.

சகத்தைத் திருத்திச் சன்மார்க்க நெறியிற் செலுத்தி, மக்களெல்லாம் இகத்தே பரத்தைப் பெற்றிடுதற்கென்றே இவ்வுலகிற்கு வந்த வடலூர் வள்ளற் பெருமான் சக்தியைப் போற்றிப் பாராட்டும் திறம் தனிச் சிறப்புக்குரியதாகும்.

எதிலும் தனிவழிகண்ட வள்ளற்பெருமான் இதிலும் தம் தனித்துவத்தை வெளிப்படுத்துகின்றார்.

அருட் திருமுறையில் ''சிற்சக்தி துதி'' எனும் பாசுரங்கள் இதனை நன்கு விளக்குவனவாகும். ஒன்றைப் பார்ப்போம்.

''சோதிக் கொடியே, ஆனந்த
சொருபக் கொடியே, சோதி உருப்

பாதிக் கோடியே, சோதிவலப்
பாகக் கொடியே, எனையீன்ற

ஆதிக்கொடியே, உலகுகட்டி
ஆளுங்கொடியே, சன்மார்க்க

நீதிக் கொடியே, சிவகாம
நிமலக்கொடியே அருளுகவே''

— திருவருட்பா 5457

இறைத்தத்துவத்தைச் சோதிவடிவிற்கண்ட பெருமான், இறையாற்றலாகிய சக்தியைச் 'சோதிக் கொடி' யாகக் காண்கின்றார். சக்தியின் சொரூபம் இன்ப வடிவினது என்பதைத் தெளிவுற உணர்ந்தவராதலால் 'ஆனந்த சொருபக்கொடியே' என அடுத்துப் போற்றுகின்றார்.

சோதிமயமான இறைவனின் சொரூபத்தில் சரிபாதியாக ஆற்றல் விளங்குவதால், 'சோதி உருப்பாதிக் கொடியே' எனப் பராவுகின்றார்.

சிவ பரம்பொருளின் இடப்பாகத்தில் இலங்குபவள் சக்தி என்பது இதுவரை கூறி வந்தது. இதனை மாற்றி, இல்லை, இறைவனின் வலப்பாகத்திலும் உறைபவள் சக்தியே எனச் சக்தியின் புகழை வானுக்கு உயர்த்துகின்றார் வள்ளற் பெருமான்.

'சோதிவலப் பாகக் கொடியே' என்பது அவர் வாக்கு.

சோதிமயமாகிய சிவ வடிவில் எங்கும் கலந்து இயங்குவது சக்தியாதலின் இடப்பாகத்தில் மட்டுமின்றி, இறைமையின் வலப்பாகத்திலும் விளங்குவது அவளது வடிவே என்பது சிந்திப்பவர்களுக்குத் தெளிவாகும் கருத்தாகும்.

உலகில் உயிர்களை உய்விக்க வேண்டி, உலகைப் படைத்து, அவ்வுயிர்க்குலங்கட்கு, உணவும், உணர்வும் படைத்து ஊட்டி வளர்ப்பவள் சக்தி. ஆகவே உலகைக் கட்டியாளும் பொறுப்பு, சக்திக்கே உரியதாகின்றது. எனவே

'ஏனையீன்ற ஆதிக்கொடியே, உலகு கட்டி
ஆளுங் கொடியே !'

எனப்போற்றுகின்றார்.

நீதியே அவளது உருவம் ஆதலின், அந்த நீதி மார்க்கம் சன்மார்க்கமே ஆதலின், 'சன்மாரக்க நீதிக் கொடியே' எனச் சக்தி தத்துவத்திற்கு வரையறை யருளுகின்றார் வள்ளற் பெருமான்.

சக்தியை மேலும் வியந்து போற்றுகின்றார்.

''மாலக் கொடியேன் குற்றம் எலாம்
மன்னித்தருளி, மாணம் எனும்
சாலக் கொடியை ஒடித்தெனக்குட்
சார்ந்து விளங்கும் தவக்கொடியே
காலக் கருவைக் கடந்து ஒளிர்வான்
கருவும் கடந்து வயங்குகின்ற
கோலக் கொடியே, சிவஞானக்
கொடியே! அடியேற்கு
அருளுகவே''.

— திருவருட்பா 5460.

மயக்க உணர்வுமிக்க மானுட சாதி புரியும் மாபாதகக் குற்றங்களையெல்லாம் பொறுக்கும் இயல்பு பூண்டவள் சக்தி.

மரணமாகிய கொடுமையை மாற்றியமைக்கும் அந்தப் பெருமாட்டி, கால தத்துவத்தைக் கடந்து, சிதாகாசமாகிய ஞான வானத்தையும் கடந்து விளங்குகின்றாள்.

சக்தியை வழிபட்டால் வன்மையின் மேற் செல்லும் கொடுமனத்தின் சேட்டைகள் எல்லாம் அடங்கும் ; ஒடுங்கும்.

கல்லைப் பிசைந்து கனியாக்கிவிட வல்ல அவள், நம் கன்மனத்தைக் கனிமனமாக்கி இரக்கம் சுரக்க வைப்பாள் :

''நாடாக் கொடியே மனம் அடக்கி
நல்ல மனத்தைக் கனிவித்துப்
பாடாப்பிழையை பொறுத்தருளும்''

— (திருவருட்பா 5462)

பரமேட்டி அவள்.

மனம் போன போக்கில் எல்லாம் போக விடாமல் சன்மார்க்கப் பேருலகை இந்தயுகத்தே வருவிக்க வள்ளற்பெருமானைத் தூண்டியவளே இந்தப் பராசக்திதானும். கூறுகிறார் :

''புலம்கொள் கொடிய மனம் போன
போக்கில் போகாது எனைமீட்டு
நலம்கொள் கருணைச் சன்மார்க்க
நாட்டில் விடுத்த நற்கொடியே!''

— திருவருட்பா 5463.

சமயக் காழ்ப்பு என்னும் படுகுழியில் வீழாது சமரச சுத்த சன்மார்க்கம் காண, வள்ளற்பெருமானுக்குப் பேரறிவு தந்து காத்தது இந்தத் தெய்வ சக்தியே என்கின்றார் :

''வெறிக்கும் சமயக் குழியில் விழ
விரைந்தேன் தன்னை விழாதவகை
மறிக்கும் ஒரு பேரறிவளித்த
வள்ளற் கொடியே !''

— திருவருட்பா 5464.

என இதனைத் தம் தெய்வ அருட்பாவில் நன்றி மறவாது நினைவு கூர்ந்து மகிழ்கின்றார் பெருமான்.

பெருந்துயர், பெருங்கவலை, பெரும்பயம் ஆகியவையெல்லாம் சக்தி வழிபாடியற்று வார்க்குச் சாரா என்பதும் வள்ளலார் கருத் தாகும்.

வள்ளற் பெருமான் மக்கட்குப் பசிப்பயமும், பிணிப்பயமும், மரணப்பயமும் நீக்க வல்ல சித்தராய் விளங்க அருள் பாலித்து, ''இந்தா மகனே இந்தச் சக்தியெல்லாம் கொண்டு, செகத்தைத் திருத்து'' என்று செப்பியவளும் இந்தப் பராசக்தியாம் :

'கடுத்த இடர், வன்பயம், கவலை
எல்லாம் தவிர்த்துக் கருத்துள்ளே
அடுத்த கொடியே, அருள் அமுதம்
அளித்து, என்றனை மெய்யருட் கரத்தால்
எடுத்த கொடியே, சித்தியெலாம்
'இந்தாமகனே! என்றெனக்கே
கொடுத்த கொடியே! ஆனந்தக் கொடியே!
அடியேற் கருளுகவே!'

திருவருட்பா 5465

எனவே, வள்ளற்பெருமான், சன்மார்க்கமே நீதியெனத் தெளியவும், சமயக்காழ்ப்பில்ஆழாது சமரச சன்மார்க்கம் என்னும் உலகுய்யும் பெரு நெறிகாணவும், அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும் நீங்கவும்,சித்திகள் யாவும் கைவந்து சேரவும், மரணமிலாப் பெருவாழ்வு எனும் மாபெரும்நெறி ஒன்றைத் துவக்கவும் சக்தி வழிபாடு பெரிதும் உதவியுள்ளதை மேற்காணும் பாசுரங்களிலிருந்து தெளியலாம்.

நமக்கும் இச்சாதனைகள் எல்லாம் கைகூட, நற்சக்தி உதவவேண்டும் என வேண்டி அவள் பாத மலர்களைப் பணிவோமாக.



ஓம்சக்தி

# திருப்புத்தூர் பூமாயி அம்மன்

தேவாரம் இன்ஜினீயர் என்றழைக்கப்படும்
'பண்ணிசை மாமணி'
**B. மகேஸ்வர்லால்,** B. E.,
மேற்பார்வை மின் பொறியாளர்,
இராமநாதபுரம் மாவட்டம்.

இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள திருப்புத்தூர் திருஞானசம்பந்தராலும், அப்பர் சுவாமிகளாலும் பாடல் பெற்ற தலம். இத்துணை மகிமை பெற்ற திருப்புத்தூரில் சப்த மாதாக்கள் கோயில் கொண்டுள்ள இடம் பூமாயி அம்மன் திருக்கோயில். இக்கோயிலில் முற்காலத்தில் சப்த மாதாக்களும்ஒரு மாடத்துக்குள் வைத்துப் பூஜிக்கப்பட்டு வந்துள்ளனர். கோயில் பற்றிய விழு விவரங்களும் சரிவர கிடைக்கவில்லை எனத் தெரிகிறது. கோவிலுக்கு முன் ஒரு குளம் மண் மேடுகளுடன் இருந்தது. இந்த சப்த மாதாக்களும்பல்லாண்டுக்காலமாக மக்கள் பலர் பக்தி சிரத்தையுடன் பூஜித்துப் பயன் பெற்று வருகின்றனர் என்பதைப் பல மெய்யன்பர்கள் வாயிலாகக் கேட்டறிய முடிகிறது.

இக் கோயிலில்ஒவ்வொருஆண்டும்சித்திரை மாதம் தேய்பிறை பஞ்சமி அன்று பூச்சொரிதல் விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. நவராத்திரி திருவிழாவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. மற்றும் எல்லா செவ்வாய், வெள்ளிக்கிழமைகளிலும் விசேஷ பூஜை, அலங்காரங்கள் நடைபெறுகின்றன. மார்கழி மாதம் முழுவதும் எல்லாக் கோவில்களில் நடைபெறுவதைப்போல் விசேஷ பூஜை நடைபெறுகிறது.

இக்கோயிலிலுள்ள சப்த மாதாக்கள் :

| | |
|---|---|
| 1. ப்ராஹ்மி, | 2, மகேஸ்வரி, |
| 3. கௌமாரி, | 4. வைஷ்ணவி, |
| 5. வராஹி, | 6. இந்திராணி. |
| 7. சாமுண்டி. | |

இடதுபுறம் : ஸ்ரீ வீரபுத்திரர்
வலதுபுறம் : ஸ்ரீ கணபதி

இக்கோயிலுக்கு பல மெய்யன்பர்கள் வந்து தரிசித்துப்பலனடைந்துள்ளனர். திரு நா. ஆறுமுகம் பிள்ளை, அவர்களுள் ஒருவர். அவர் கோவிலுக்கு முன்னுள்ள குளத்திற்குத் திருப்பணி செய்து சிறிது காலத்தில் நல்ல பலனடைந்ததாகக் கேள்வியுற்றேன். அவர்களுடைய பெரு முயற்சியால் இக்கோயிலுக்கு இராஜ கோபுரம் அமைத்து மகா கும்பாபிஷேகம் 21—6—1981 அன்று நடைபெற இருக்கின்றது.

சிறிய கோயிலாக இருந்தது இப்போது இராஜ கோபுரம் அமைத்து,கர்ப்பக்கிரகம் நல்ல முறையில் கட்டி, விநாயகர், சுப்பிரமணியர், வீரபத்திரர்க்குத் தனித்தனி கோயில் கட்டியும், நவக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்தும் பெருங் கோயிலாக உருவாகியிருக்கின்றது.

சப்த மாதாக்களில் நடுவில் வீற்றிருக்கும் வைஷ்ணவிதான் இக்கோவிலின் பிரதான தெய்வம். சென்னைக்கருகிலுள்ள திரு முல்லை வாயிலில் குடிகொண்டிருக்கும் வைஷ்ணவியின் மகிமை சொல்லில் அடங்கா. திரு முல்லைவாயில் சுந்தர மூர்த்தி நாயனாரால் பாடல் பெற்ற தலம். திருப்புகழ் வள்ளிமலை சுவாமிகள் அவரு டைய சித்திகளை யெல்லாம் இத்தெய்வத்திடம் சாந்நித்தியம் செய்திருக்கிறார். பார்த்த சாரதி என்பவர் சிலைகளைச் சேகரித்து வந்தவர். அவர் பின்பு வள்ளிமலை சுவாமிகள் மூலம் வைஷ்ணவி தேவியின்பால பக்தி பூண்டு, சாது பார்த்த சாரதி ஆகி, தற்போது அனுவாநந்தா எனும் நாமத்தோடு துறவு பூண்டுள்ளார், காஷ்மீரில் குகைக்குள்ளே வைஷ்ணவி கோயில் கொண்டுள் ளாள். பலமகான்கள், சித்தர்கள் அங்கு வழிபடு வதாகக் கூறப்படுகிறது- இத்துணை மகிமை வாய்ந்த வைஷ்ணவி பிரதான தெய்வமாகக் கோயில் கொண்டுள்ள பூமாயி அம்மன் கோயில் திருப்புத்தூரில் அமைந்துள்ளது. இது இராம நாதபுரம் மாவட்ட மக்கள். அதன் சுற்றிலு முள்ள மாவட்ட மக்கள் அருள் பெற வசதியாக உள்ளது.

இக்கலியுகத்தில் சக்தி உபாசகர்கள் பலர் உள்ளனர். ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதி பதி சங்கராச்சாரியார் ஸ்ரீ காமாட்சி அம்மனை யும், சிருங்கேரி சங்கராச்சாரியார் ஸ்ரீ சிருங்கேரி சாரதாம்பாளையும் புதுக்கோட்டை சாந்தாநந்த சுவாமிகள் ஸ்ரீ புவனேஸ்வரியையும் பூஜித்து வருகின்றனர். நாயன்மார்களில் திருஞான சம்பந்தர் " அம்மே, அப்பா " என அழுது ஸ்ரீ பார்வதி தேவியார் ஞானப்பால் ஊட்டி ஞானசம்பந்தர் ஆனார். மாணிக்கவாசகரோ " அம்மையே அப்பா ஒப்பிலா மணியே..." எனவும், " அம்மை எனக்கருளியவாறு யார் பெறுவார் அச்சோவே! " எனவும் அம்மனைப் போற்றிப் புகழ்கின்றார்.

உலகத்தில் மக்கள், ஆண்களுக்கு நிகர் பெண்களுக்குச் சம உரிமை வழங்க வேண்டும் எனக் கூறியும். போராடியும் வருகின்றனர். இந்தியாவில் குறிப்பாக இந்து மதத்தில் பெண் களுக்குச் சம உரிமைக்கு மேல்,நல்ல பண்புள்ள பதவி பல்லாண்டு காலமாக வழங்கியும், பெண் களைப் போற்றியும் வந்திருக்கின்றனர். பிறப்பு இறப்பில்லாத பெம்மானாகிய சிவபெருமான் காரைக்காலம்மையாரை " அம்மையே! " என அழைக்கின்றார்.

எந்தக்காரியம் செய்வதற்கும் சக்தி தேவை: சக்தியிருந்தால் எக்காரியத்தையும் சாதித்து விடலாம். சக்தியின் சொருபமே பூமாயிஅம்மன். மானிட சக்தியுடன் தெய்வீக சக்தியின் துணை யிருந்தால் எந்தக்காரியத்திலும் வெற்றியடை வது உறுதி.

அபிராமி பட்டர் திருக்கடவூரில் அபிராமி அம்மையைப் பூஜித்துக் கொண்டிருக்கும்போது வந்து வினவிய சரபோஜி மன்னரிடம் அமாவாசையன்று பௌர்ணமி என (தேவியின் தேஜஸில் லயித்திருந்ததால்) கூறி விட்டார். மெய்யன்பனுக்கருள்புரிய தனது தோட்டினை வான மண்டலத்தில்வீசி,நிலவொளி உண்டாக்கி அடியார் பெருமையினை உலகறியச் செய்தாள் அபிராமி அம்மை.

சக்தி கருணையுள்ளம் கொண்டவள். சாதாரணமாகவே உலகில் தாயன்பு, தாய்ப் பாசம் மிகச்சிறந்தது என்பது அறிந்ததே. தன் குழந்தைகள் செய்யும் குற்றம் குறைகளையும் பாராமல் தாய் அவர்கள்பால் அன்பும் பாசமும் செலுத்திப் பேணிக்காக்கிறாள். லோகநாயகியா கிய அம்பாள் மக்களாகிய தன் குழந்தைகள் மீதுசெலுத்தும்பரிவும்பாசமும் சொல்லிலடங்கா.

திருஞானசம்பந்தர் கோளறு திருப்பதிகத் தில் "எருதேறி ஏழையுடனே..." என்று பராசக்தியின் குழந்த உள்ளத்தைக் குறிப்பிடுகிறார். இராமலிங்க சுவாமிகள் 'தடித்த ஒர் மகனை தந்தையிண்டடித்தால்தாயணைப்பாள். அம்மையப்பா இனியாற்றேன்' என்று தாய்ப் பாசத்தையும் தாயின் கருணையையும் விளக்க மாகப் பாடியுள்ளார்.

## கும்பாபிஷேகத்தின் பலன்

கார், லாரிகளில் (Battery) உள்ளது.அதை அடிக்கடிசார்ஜ்(Charge)செய்தால்தான்பேட்டரி நன்றாக இயங்கும். பல்பு (Bulb) பிரகாசமாக எரியும். அதேமாதிரி கும்பாபிஷேகம் செய்த பின் சுவாமி உருவங்களுக்கு அருட்சக்தி பன்

மடங்கு அதிகரிக்கிறது; நமக்கு நிறைய அருள் கிடைக்கிறது.

இறைவனின் சக்தியைக் கிரஹித்திருப்பதால், விக்கிரஹங்கள் எனப்படுகின்றன. 'வி' என்ற எழுத்து சிரேஷ்டமானது, சிறந்தது என்ற பொருளில் வந்தது. இறைவனின் சிறந்த பிரதிநிதி என்றும் சொல்லலாம்.

இவ்வாறு ஆலயம் இறைவனின் வீடாகவும் (கோயிலாகவும்) ஆகிவிடுகின்றது.

ஆகமங்களில் விதிக்கப்பட்ட முறைப்படி கும்பாபிஷேகம் செய்தால் இறைவன் தன் பரம கருணையால் குறிப்பிட்ட விக்கிரஹத்தில் அவதரித்து பூர்ணகலையுடன் நித்தியவாசம் செய்கின்றார். அந்தவிக்கிரஹங்களிலிருந்து வெளிப்படும்சூக்ஷ்ம சலனங்கள் வழிபடுவோர்க்குஎல்லா விதநலன்களை நல்குகின்றன.இத்தகையஆலயம் அமைந்த ஊர்களில் வசிக்கும் எல்லா மக்களுக்கும் எல்லா நலன்களும் ஏற்படுகின்றன.

ஒருவன் ஆயுளில் மூன்றுகும்பாபிஷேகத்தை தரிசித்தால் அவனுடைய பாபங்கள் நசிந்து விடுகின்றன என்பது ஆகமங்களில் கூறப்படும் பலனாகும்.

## இறைவனுக்கு அர்ப்பணிக்கப்படும் பொருள்களினால் ஏற்படும் நன்மைகள்

| | |
|---|---|
| தைலாதிகள் | பக்தி |
| சூர்ணாதிகள் | சம்பத்து |
| பழவகைகள் | ஜன வசீகரம் |
| பஞ்சாமிர்தம் | நீடிய வாழ்வு |
| பால் | சாந்தகுணம் |
| தயிர் | திடகாத்திரம் |
| தேன் | சங்கீதவன்மை |
| நெய் | சுகவாழ்வு |
| சர்க்கரை | சாஸ்திர தேர்ச்சி |
| இளநீர் | நன்மக்கட்பேறு |
| விபூதி | ஞானம் |
| சந்தனம் | சுவர்க்கபோகம் |
| பஞ்சகவ்வியம் | பாவநிவர்த்தி |
| பொன் | வைராக்யம் |
| பன்னீர் | புகழ் |
| வஸ்திரம் | சம்பாவனை |
| பூ | மகிழ்ச்சி |
| கற்பூரம் | முக்தி |

## கும்பாபிஷேகத்தின் பயன்

'புல்லினால் வருடம் கோடி
புது மண்ணால் பத்துக் கோடி

செல்லுமா ஞாலந் தன்னில்
செங்கலால் நூறு கோடி

அல்லியங் கோதை பாகன்
ஆலயம் மடாலயங்கள்

கல்லினால் கட்டி வைத்தோர்
கயிலை விட்டகலார் அன்றே:

'நாயகி நான்முகி நாராயணிகை நளின பஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதி நச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கி என்(று)
ஆயகி யாதி உடையாள் சரணம் அரண் நமக்கே'

என்ற அபிராமி பட்டர் பாடிய அந்தாதிப்பாடலை நினைவுகூர்ந்து பூமாயி அம்மனின் பாதகமலங்களில் சிரந்தாழ்த்தி வணங்கி இக்கட்டுரையைச் சமர்ப்பிக்கிறேன்.

சுபம்



# இந்து சமயம்

தேவகி வெங்கடேஷ்

பரதகண்டம் என்னும் இப்பாரத மண்ணில் பழமையாக இருந்துவரும் வேதம், ஆகமம், சாஸ்த்ரம், ஸ்மிருதி, புராணம் முதலியனவற்றை அடிப்படையாகக் கொண்டுவிளங்குகிறது இந்து சமயம். ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஒன்று கலத்தற்கு உறுதுணையாக மனிதர்களின் கடமையான தர்மங்களை விளக்கிக் கூறுவது சமயம். இந்து சமயத்தில் பொதிந்து கிடக்கின்ற பல தத்துவ முத்துக்களில் சிலவே பிற சமயங்களில் இதுவரை கண்டுணர்ந்து பின்பற்றப்பட்டு வருகின்றன. இத்தகு பெருமைக்கு இந்து சமயத்தின் கிளைகளாக சைவம், வைஷ்ணவம், சமணம், ஜைனம் போன்றவை விளங்குகின்றன வாழ்க்கை நடைமுறைத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு, சமயம் பல்வேறு உணர்வுகளையும், பழக்கவழக்கங்களையும் கொண்டுள்ள மனிதர்களுக்கு எற்றவாறு வளைந்து கொடுத்ததால்தான், அது பல கிளைகளாக உருவெடுத்தது கடவுள், உலகம், தனிமனிதன் ஆகியோரிடையே நிலவும் ஒர் உறவின்மேல் எழுப்பப்பட்டுள்ள பெருமாளிகைகள்தாம் இக்கிளைச் சமயங்கள். வாழ்க்கைப் புதிர்களை விளக்கி முக்திப்பாதைக்கு இட்டுச் செல்லும் மெய்வழிச்சாலைகள் அவை. வாழ்வியலை மறுக்கவில்லை அவை. வாழ்வாங்கு வாழத்தான் வழிவகுக்கின்றன

எங்கும் இறைவன் இயைந்துள்ளான். இறைவனது அருவுருவத் தோற்றமே இப்புவனம், உலகெல்லாம் உணர்ந்து ஒதற்கரியவனாய் இவ்வுலகங்களை ஆக்கி ஆதரித்து அழிப்பவனாய் நித்தியனாய் இருக்கும் இறைவனை வேண்டுவோர் வேண்டியவாறு வழிபடுவர்: படைப்பின் தத்துவமே வேற்றுமைகளைக் கொண்டதுதான். இதற்கு சமயம் ஒரு விதிவிலக்கல்ல. அவற்றின் நடைமுறைகள் பல்வேருயினும் அவை சுட்டிக்காட்டும் இட்டுச் செல்லும் முடிவு ஒன்றுதான்.

இவ்வகையில் பாரதத்தில் பலவாறு வழிபடும் மக்களிடையே அதிகமானசெல்வாக்குடன் விளங்குவன வைணமும், சைவமுமாகும். ஆனால் இவ்விரு சமயத்தினரில் சிலர், அச்சமயங்களின் நடைமுறை வழிபாடு வேற்றுமைமுறைகளை, அடிப்படை வேற்றுமைகளைக் கொண்டு, தங்களுக்கிடையே ஒரு செயற்கையான மடுவினை உண்டாக்கிக்கொண்டு, தங்களையும் குழப்பிக் கொண்டு பிறரையும் குழப்பத்திலாழ்த்துவது வருந்துதற்குரியதாகும், அவ்வவ் சமயாச்சாரியார்கள்கூட தங்கள் சமயங்களில் சமரச சமய உணர்வினை உணர்த்தியும்கூட, அச்சமயங்களைத்தாங்கள் தாம் காப்பாற்றி வருவதாக மனதிற் கொண்டு, பிற சமயத்தினரைத் தாழ்த்தியும் குறைகூறியும் வரும் சில சமயச் சான்ருேர்கள் இன்றைய இளம் தலைமுறையினர்க்கு ஒரு முட்டுக்கட்டையாக விளங்குகின்றனர். ஆகவே சாரங்கனில் சங்கரனையும், மகாதேவனில் மாதவனையும், ஹரியில் அரனையும் காணுவதே இன்றையச் சமுதாயச் சூழ்நிலைக்கு ஆரோக்கியமானதாகும்.

ஆலயங்களில் பிரதிஷ்டை செய்யப்பட்டுப் பூசிக்கப்படும் மூர்த்தங்கள் பல தத்துவார்த்தங்களை உணர்த்துவனவாகும். இறைவனுல் படைக்கப்பட்டுள்ள இவ்வுயிர்களின் சரீர முதலியனவும் தூலமாகவும், சூக்குமமாகவும், அதி சூக்குமமாகவும் இருக்கும் ஆதலால் கடவுளரும் இவைகளுக்கேற்றவாறு உருவம் அருவம் அருவுருவம் எனப்படும் மூவகை அருட்திருமேனிகளைக் கொண்டருளுவர். அநித்தத்தை நித்தம் என்றும், அசுத்தத்தைச் சுத்தம் என்றும் துன்பத்தை இன்பமென்றும், தானல்லாத பொருளை, தான் என்றும் கருதித்திரியும் மானிடனைத் திருத்தி ஆட்கொள்ளத்தான் ஆண்டவன் அவதாரம் கொள்கின்ருன். அப்போது ஞானியருக்கு மட்டுமே பரமார்த்த ஸ்வருபத்தின் உண்மை புரியும். உருவத்தைப் பார்த்துப் பார்த்து ஆனந்தம் கொள்பவருக்கு உருவத்தோடு காணும்போது ஆனந்தம் மிக்கு இருக்கும். அதற்காகத்தான் உருவமற்ற ஈசன் அருவுருவமான லிங்கமானதோடு மல்லாமல் அந்த லிங்கத்திற்குள் திவ்ய ரூபம் காட்டும் லிங்கோத்பவ மூர்த்தி யாக இருக்கிருர் அவ்வாறு ஜ்யோதி ஸ்வருபமாக - ஜ்யோதிர்மயலிங்கமாக விண்ணுக்கும் மண்ணுக்கும் சங்கரன் உற்பவித்த இரவு சிவராத்திரி. அன்று இவ்ஜோதிர் லிங்கத்தினை ஒரு குறிப்பிட்ட மதத்தினர்மட்டும் வழிபடவில்லை. லிங்கத்தின் பீடத்தினை சக்தி ரூபமாகவும். பாணத்தை சிவரூபமாகவும். பீடத்தை கிரியாசக்தி வடிவமாகவும், லிங்கத்தை ஞானசக்தி யாகவும், பீடத்தின் அடிப்பாகத்தினை பிரம்மஸ்வருபமாகவும், நடுபாகத்தினை விஷ்ணு ரூபமாயும் மக்கள் அன்று கருத்திற் கொண்டு வழிபட்டனர். திருமூலரும் இதனை நன்கு உணர்த்தியுள்ளார்.

# கர்ணன்

பெரும்புலவர் பா. நமசிவாயம், எம். ஏ.,
தமிழ்ப் பேராசிரியர்
ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி, திருப்புத்தூர்

கர்ணன் கதை நம்மில் பலர் அறிந்த கதைதான். கர்ணனைப் படித்தாலும், நினைத்தாலும், பேசினாலும் நம் நெஞ்சம் கனிந்து கசிந்து கரைகிறது.

வியாசர் கர்ணனைப் படைக்கும்போது விழிகளில் நீர் வழியப் படைத்தாரென்றால் தமிழில் வில்லிப்புத்தூராழ்வார் நெஞ்சத்தில் உதிரங் கொட்டப்படைத்தாரென்றே எனக்குத் தோன்றுகிறது.

வில்லிபுத்தூரார் வியாசமுனிவரைத் தழுவியும், சில இடங்களில் நழுவிப் புதியன ஆக்கியும் கர்ணனை நம்மிடையே உலவ விடுகிறார்.

தமிழ்காட்டும் பாரி, காரி போன்ற வள்ளல்களைப்பற்றிய இலக்கிய உணர்வும், திருக்குறள் காட்டும் ஈகைத்திறனும் வில்லிபுத்தூராருக்குக் கர்ணனைப் படைக்கப்பெரிதும் துணை புரிகின்றன.

தாயின் விளையாட்டு மகனுக்கு வினையானது அவசரத்தில் எண்ணிப்பார்க்காமல் அன்னை ஒரு செயல் செய்தாள், மகன் நிதானமாகத் தன் வாழ்வு முழுவதும் அதையே எண்ணி எண்ணி நைந்தான். ஒருகால் அவன் மறந்தாலும் சமுதாயம் அவனை மறக்கவிடவில்லை.

துருவாசர் சொல்லி வைத்த மந்திரத்தைக் குந்தி உடனடியாகப் பயன்படுத்தினாள். கன்னித் தாயானாள், கர்ணன் பிறந்தான்.

விளைவினை அறியாச் சிறுமியின் விளையாட்டில் பிறந்த மகன் கர்ணன். உலகப் பழிக்கு அஞ்சிய குந்தி கதிரவன் மகனைக் கங்கையிலே விட்டாள். இப்பொழுது-குழந்தை நதியினிலே, குந்தி மட்டும் கரையினிலே !

இதுதான் கர்ணன் பிறந்த கதை. நம்மில் பலர் அறிந்த கதைதான். என்றாலும் அவன் வாழ்க்கையில் அவன் அனுபவித்த துயரம் கற்பார் உள்ளங்களையெல்லாம் கசிந்து உருகச் செய்கிறது. பாரத வீரர்களுள் அவன் ஓர் அவல வீரன். (Tragic Hero).

ஏவலர் புடைசூழ, மன்னர்கள் பணி செய்ய அரண்மனையிலே வளரவேண்டிய கர்ணன் தேரோட்டியின் வீட்டிலே வளர்கிறான்.

படிக்கப்போன இடத்திலே பரசுராமனின் சாபத்தைப் பெற்றான். ஆசிரியர் சபித்து விரட்டி விட்டார்.

பொதுவாக ஒருவனுக்கு உற்றதுணைகளென நால்வரைக் கூறுவர். மாதா, பிதா, குரு, தெய்வம்......

சிலருக்கு நாலு துணையும் கிடைக்கலாம். சிலருக்கு ஒன்றிரண்டு கிடைக்கலாம். நிச்சயமாகத் தெய்வத்தின் துணை எல்லோருக்கும் உண்டு. திக்கற்றவனுக்குத் தெய்வம் துணை என்பர்.

கர்ணனோ நால்வராலும் கைவிடப்பட்டவன். இவனைப் பெற்ற அன்றே அன்னை ஆற்றிலே கைவிட்டாள். தந்தையாகிய கதிரவனோ மகனுக்கு எந்த உதவியும் புரியாமல்

கைவிட்டான். ஆசிரியராகிய பரசுராமனே கடு மொழி சொல்லி விரட்டினன். தெய்வமாகிய கண்ணபிரானே இவனுக்கு எதிரணியில் நின்று இவனை அழிப்பதற்குப் பாண்டவர்களுக்கு வழி வகை சொல்லிக் கர்ணனைக் கைவிட்டான்.

கிருபாச்சாரியார்போன்ற கற்றவர்கள்கூடக் கர்ணனின் ஆற்றலை நோக்காமல் அவனது ஆண்மையை மதிக்காமல் 'தேரோட்டியின் மகன் என்று ஏளனமாகப் பார்த்தனர். இழிவாகப் பேசினர். பிதாமகன் விடுமர் இவனுக்குத் தர வேண்டிய இடத்தைத் தராமல் கீழே ஒதுக்கி வைத்தார். சமூக அங்கீகாரம் எங்கும் கிடைக்கா மல், சென்ற இடத்திலெல்லாம் இவனது மரியாதை குறைக்கப்பட்டு அலட்சியப்படுத்தப் பட்டபோது துரியோதனன் இவனுக்கு மதிப்பும், மரியாதையும் கொடுத்தான். அங்க நாட்டுக்கு அரசனாக்கினன். உடன் உண்டான். உயிரினும் மேலான இவன் மானத்தைக்காப்பாற்றி இவனை நிமிர்ந்து நிற்கச் செய்தான். இவனுக்கு ஏற்ற மும் தோற்றமும் அளித்தான்.

இந்தத் துரியோதனனிடமிருந்து கர்ண னைப் பிரித்துவிடக் கண்ணபிரான் முயன்றார். சொல்லிப் பார்த்தார். கர்ணன் மறுத்து விட் டான். யாரென்று அறியத்தகாத கர்ண னுக்கு அரசு கொடுத்து, முடி சூட்டிச் சீரும் திறமும் பெருந்திருவும் கொடுத்தவன் துரியன். கண்ணபிரானிடம் அழகாகப் பேசிப் பாண்டவர் பக்கம் வர இயலாமைக்குக்காரணம் சொன்னன். கண்ணபிரான் குந்திதேவியை ஒருமுறைக்கு இருமுறை தூண்டிக் கர்ணனிடம் அனுப்பினர். முதல் முறை சொன்னவுடன் குந்தியால் கர்ண னிடம் வர முடியவில்லை. ஒருவேளை அவனது நெஞ்சில் எழுந்த குற்ற உணர்வு மகனைச் சந்திக்க விடவில்லையோ ? வேறு வழியின்றிக் கர்ணனைச் சந்திக்கிருள். இந்தச் சந்திப்பு உள்ளத்தை உருக்கும் சந்திப்பு. மகன் யாரைப் பார்க்க வேண்டுமென்று காலமெல்லாம் காத்தி ருந்தானே அந்தத் தாய் மகனிடம் வருகிறள். கர்ணன் தன்னைப் பெற்ற தாயிடம் தன் நண்பனின் சிறப்பை எடுத்துச் சொன்னன். "உலகத்தின் பழிச் சொல்லுக்கு நாணி என்னை நீர் பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டீரா? அல்லது உமக்குப் பிள்ளைப் பாசமே இல்லையா? இரண்டில் ஒன்று காரணமா? அல்லது இரண் டும் காரணங்களா? எனக்குத் தெரியாது. ஆனல் என் நண்பன் துரியோதனன் என்னை எப்படி நடத்தினன் என்பதற்கு நடந்த நிகழ்ச்சி யொன்றைச் சொல்கிறேன்.'' இவ்வாறு வாழைப்பழத்தில் ஊசியைச் செலுத்துவது போல, வந்த அன்னையிடம் ஒரு நிகழ்ச்சியைச் சொல்கிருன். இந்த நிகழ்ச்சி வியாச பாரதத் தில் குறிப்பிடப்படவில்லை. இந்த நெஞ்சுருக் கும் நிகழ்ச்சியைத்தான் நட்பின் ஆழத்துக்கு உதாரணம் காட்டிப் பேசுவோரெல்லாம் குறிப் பிடுவர் ... கர்ணன் சொன்னன் —

"பெற்ற தாயாகிய நீ என்னைப் பச்சிளங் குழந்தைப் பருவத்திலேயே கை விட்டாய். துரி யோதனன் எனக்குச் செய்ய வேண்டிய கடமை களை யெல்லாம் செய்தான். என்னை அங்க நாட்டு அரசன் ஆக்கினன். அவன் தம்பிய ரெல்லாம் என்னை வணங்க எனக்கு ஏற்றமும் தோற்றமும் தந்தான். நானும் அவன் மனைவி யாகிய பானுமதியும் ஒரு நாள் தனியிடத்திலே அமர்ந்து சூது விளையாடிக் கொண்டிருந்தோம். அப்பொழுது துரியோதனன் வந்தான். கண வனைக் கண்ட அவள் ஆட்டத்தைவிட்டு எழுந் தாள். நான் துரியோதனனைப் பார்க்கவில்லை. தோல்விக்கு அஞ்சித்தான் பானுமதி இடையிலே ஆட்டத்தை விட்டு எழுந்திருக்கிருள் என எண்ணிய நான் அவளுடைய மடியைப் பிடித்து இழுத்தேன். மேகலை அறுந்து மணிகள் எங்கும் சிதறின. துரியோதனன் அண்மையில் வந்துவிட்டான். அவனைக் கண்ட நான் திகைத்துத் திடுக்கிட்டேன். எனது தடுமாற்றத் தைக் கண்ட அவன் சிறிதும் தடுமாருமல் அமைதியாக "நண்பனே! சிதறிய மணிகளை நான் பொறுக்கித் தரவா? கோத்துத் தரவா?" என்று கேட்டான ... அவனுக்காகச் செஞ் சோற்றுக்கடன் கழிப்பதே எனக்குப் புகழ். அதுவே என் கடமை. அதுதான் அறம்...

"மடந்தைபொற் றிருமே கலைமணி யுகவே
மாசறத் திகழும் ஏகாந்த
இடந்தனிற் புரிந்தே நானயர்ந் திருப்ப
எடுக்கவோ கோக்கவோ என்ருன்''

எவனும் உணர்ச்சி வசப்பட்டு ஆத்திரங் கொண்டு மிருகமாக மாறும் ஒரிடத்திலே துரி யோதனன் நயத்தக்க நாகரித்தின் எல்லேக்கே சென்று விட்ட காட்சியைக் கர்ணன் நெஞ்சில் வைத்துப் போற்றுகிருன். சிறிதும் கலங்கவோ சினங்கொள்ளவோ ஆத்திரப்படவோ செய் யாமல் அமைதியாக 'எடுக்கவோ கோக்கவோ?' என்று துரியன் சொன்ன சொல்லேக் குந்திக்கு உணர்த்தினன். சான்றுக்காக — உணர்ச்சி வசப்படவில்லை என்பதைக் காட்டுவதற்காகத் துரியன் சிறிய மணியின் மிகச் சிறிய துவாரத் துக்குள்ளே நூலினைக் கோர்க்கும் அளவுக்கு அமைதியுடன் இக்காட்சியைக் கண்ட பிறகும் நிலே தடுமாருது இருந்தானென்ருல் அவ னெங்கே? உலகம் பழிக்குமே என்று அஞ்சி அவசரப்பட்டு ஆத்திரத்தில் ஆற்றிலே ரெற்ற குழந்தையை விட்ட நீரெங்கே?

குந்தியை நிலேதடுமாறச் செய்த அற்புத மான இடம் இது.

கர்ணனே நன்றியுடையவனுகக் காட்டிய அருமையான இடம் இது.

எல்லாவற்றுக்கும் மேலாகத் துரியோதனன் நட்புக்களத்தின் தன்னிகரற்ற நாயகனுகக் காட்டும் ஒப்புயர்வற்ற இடம் இது.

ஆசிரியனுகிய பரசுராமனிடம் வேறு வழி யின்றிப் பொய்வேடம் புனைந்து கர்ணன் கற்றதைக் குற்றமாகச் சிலர் சுட்டிக் காட்டுவர். அந்தணனைப் போல் வேடம் பூண்டு ஆசிரிய ரைக் கர்ணன் ஏமாற்றலாமா? என்று வினுத் தொடுப்பர். தன்னைவிடத் தாழ்ந்தவனுகிய கர்ணனிடம் தனக்குத் தேவையில்லாத கவசகுண்டலங்களைப் பெற வந்த போது இந்திரன் பொய்வேடம் புனைந்தே வந்தான். உலகத்துக்கே படியளக்கும் பரந்தாமன் — கண்ணபிரான் — கர்ணனிடம் அவன் செய்த புண்ணிய மனேத்தையும் யாசித்துப் பெற்ற போதும் பொய்வேடம். புனைந்தே வந்தார். இவர்கள் ஒருவனே அழிக்கும் முயற்சியில் பொய்வேடம் புனையுங்கால் மிகத் தேவையான கல்வியைப்பெற அவனைவிட உயர்ந்த ஆசிரிய ரிடம், அவர் கைக்கொண்டிருந்த ஒவ்வாக் கொள்கை காரணமாகக் கர்ணன் பொய் வேடம் புனைந்து கற்றதுஎவ்வாறு குற்றமாகும்?

கர்ணன் மடியில் பரசுராமர் உறங்குகிருர். கர்ணனின் தொடையை ஒரு வண்டு குடை கிறது. குருதி பொங்குகிறது. ஆசிரியரின் உறக்கம் கலேந்துவிடக் கூடாதே என்று கருதிய கர்ணன் வேதனையைப் பொருட்படுத்தாமல் தாங்கிக் கொள்கிருன். பெருகிய குருதி ஆசிரி யரின்மேல் பட்டவுடன் உறக்கம் கலேகிறது. பாராட்ட வேண்டிய ஆசிரியர் கர்ணனேச் சபிக் கிருர். "நீ உண்மையிலேயே பிராமணனு? இல்லே. நான நம்பமாட்டேன். நீ ஒரு பொய்யன். நீ நிச்சயம் ஒரு சத்திரியன்தான். நான் கற்பித்த பிரமாத்திர வித்தை உனக்குச் சமயத்தில பயன்படாமற் போகட்டும்."

குருவைத் தாங்கிய அன்பு மாணவனுக்கு ஆசிரியரின் சாபத்தால் வருத்தம் ஏற்பட்டிருக் குமா? அல்லது மகிழ்ச்சி ஏற்பட்டிருக்குமா? ஆசிரியரின வாயால் தான் சத்திரியன் என்பது உறுதிப்பட்டதால் இன்னுனென்று தெரியாது மருகிய கர்ணன் தன்னே இனங்கண்டு கொள்ள ஆசிரியர் சாபம் துணே செய்ததே என மகிழ்ந்தி ருக்கலாம்.

கண்ணிலான் சாபத்தால் மக்கட் செல்வம் உண்டு என்று மகிழ்ந்தானே தசரதன்! சாபமே சிலருக்கு வரமாகிறது.

சிலருக்கு வரமே சாபமாகிறது. கர்ணன் பெற்ற சாபம் உண்மையினே உணர்த்திய வரந் தானே!

அங்க நாட்டின் களஞ்சியத்தை எல்லோருக் கும் வாரி வழங்கிய வள்ளல் கர்ணன். 'தெரு விலே திரிந்தவனேத் துரியோதனன் அங்க நாட்டுக்கு அரசனுக்கினன். தான் ஈட்டிய செல்வத்தையா மற்றவர்க்கு வழங்கினன்? கடைத்தேங்காயை வழிப்பிள்ளேயாருக்கு உடைத்தவன்தானே கர்ணன்' என்றுகூடச்சிலர் வாய் கூசாமல் பேசக்கூடும் என்று கருதியே கவசகுண்டலக் கொடையினே ஆசிரியர் காட்டு கிருர்.

கொடையால் மிக்கோனுகிய கர்ணன் துரியன் தந்த அங்கத்திலிருந்து பிறர்க்குக் கொடுத்தான்.

தன் அங்கத்திலிருந்து அறுத்தும் கொடுத் தான்.

உலகுக்கு வாழ்வளிக்கும் கதிரவன் மகனு கிய கர்ணனுக்குக் கொடைப்பணபு பிறவிக் குணம். எனினும் சமூக அங்கீகாரமின்றிஎல்லோ ராலும் எள்ளிப்புறக்கணிக்கப்பட்ட சபையிலே துரியோதனன் இவனுக்கு அளித்த கொடை யால் அவன் மனிதன் ஆனன், மன்னன் ஆனன். பிறவிக்குணமாகிய கொடையுணர்வுக் குப் புத்துயிர் கொடுத்து மேலும் வளர்த்த பெருமை துரியனின் கொடையாகலாம். காரணம் அங்கநாடு கர்ணன் கைக்கு வந்த பிறகே இவனது கொடைப்பண்புகள் வில்லியால் விதந்து பேசப்படுகின்றன.

பதினேழாம் நாள் நடந்த போரிலே கொடை ஞாயிறு விழ்ந்தது. கண்ணபிரான் அர்ச்சுனனிடம் சிறிது போரை நிறுத்தி வைக்கு மாறு கூறி விட்டுக் கர்ணன் இடத்துக்குச் சென் ருர். தவம் புரியும் மறையவனுகப் பொய்க் கோலம் பூண்ட கண்ணபிரான் கர்ணனைப் பார்த்து "நான் இந்நாள் வரையில் மேருமலை யில் தவஞ் செய்து கொண்டிருந்தேன். வறுமை யால் வாடுகிறேன். உன்னுல் கொடுக்க முடிந்ததை இப்பொழுதே கொடு" என்று கேட் டார்.

"நான் இப்பொழுது உனக்குக் கொடுக்கத் தக்க பொருளைச் சொல்க"

"நீ இதுவரை செய்துள்ள புண்ணியம் முழு வதையும் கொடு"

வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த கர்ண னிடம் செங்கண்மால், ஆதியும் நடுவும் முடிவு மாய் நின்ற ஆதியான், பஞ்சபூதமும் புலனும் புலன்களின் பயனுமாய் நின்ற நம் பெருமான் கண்ணபிரான் கை யேந்தி நின்ருர். புண்ணியப் பிச்சை கேட்டார். புண்ணியத்தைக் கடவுளுக்கே கொடுக்கும் பேறு பெற்ற கர்ணனே இப்புண்ணி யத்தைக் கொடுப்பதால் வரும் புண்ணியத்தை யும் சேர்த்துக் கொடுத்து நிமிர்ந்து நிற்கிருன். நெஞ்சக் குருதியால் தாரை வார்த்துக் கொடுத் தான் வள்ளல். கர்ணனிடமிருந்து புண்ணியத் தைப் பெற்றுச் செல்ல வந்த கண்ணபிரானின் திருக்கரங்களில் கர்ணன் கொடைக்குருதிபட்ட தாலோ என்னவோ அவருக்கும் கொடைச் சுவை பிறந்தது ..

"அப்பா! உனக்கு என்ன வேண்டும்? கேள்"

பெற்றுச் செல்ல வந்த பரந்தாமனையும் கொடுத்துச் செல்லுமாறு செய்தது கர்ணனின் கொடை வாழ்வு – நிறை வாழ்வு.

கர்ணன் என்ன கேட்கப் போகிருன் என்று நாம் உன்னிப்பாகக் கவனிக்கிருேம். ஆவி கலங் கிக் கிடக்கிருன். உயிர் அகத்ததோ புறத்ததோ என்று கேட்டுத்தெரியும் நிலையில் கிடக்கிருன். குருதி வெள்ளத்தில் குற்றுயிராய்க் கிடக்கிருன். இவனை இந்த நிலைக்குக் கொண்டுவந்த வண்மை யின் மீது இவனுக்கு வெறுப்பு ஏற்பட்டிருந்தால் அதுவும் நியாயமே. கொடையால் அல்லவா போர்க்களத்தில் வீழ்ந்து கிடக்கிருன். கண்ண பிரானே ஆனந்தக்கண்ணீர் வடிக்குமாறு கர்ணன் வரங்கேட்டான்.

'அல்லல்வெவ் வினையால் இன்னம் உற்பவம்உன்
டாயினும் மேலெழு பிறப்பும்
இல்லையென் றிரப்போர்க் கில்லை யென்றுரையா
இதயம்நீ அளித்தருள் என்ருன்.

கிருஷ்ணபரமாத்மாவின் திருச்செவிகளில் இச் சொற்கள் விழுந்தவுடன் கண்ணீர் விட்டார். பிறர் அழுகையை நீக்கும் கண்ணபிரான் கர்ணன் நிலை கண்டு அழுதார்.

வீழ்ச்சியிலும் கொடை கொடை என்று பேசும் கர்ணனின் இதயத்துடிப்பின்பெருமைக்கு முன்னுல் கரைந்தார். கசிந்துருகினர்.

மனமலராலும், கைமலராலும், கண்மலரா லும் கர்ணனை எம்பெருமானே போற்றினர். கண் மலரால் கருணை நீராட்டினர்.

வழங்கிச் சிவந்த கைகளையுடைய கர்ண னுக்கு இதை விடச் சிறந்த பேறு வேறு என்ன

இருக்க முடியும்? உண்மையிலேயே பாரதக் கதையில் கர்ணன் பெற்ற பெருந்தவப் பேறு வேறு யார் பெற்றார்கள்? போர்க்களத்திலே உயிர் மெல்லப் போய்க்கொண்டிருக்கும்போது கண்ணபிரானிடம் இதனைக் கர்ணன் சொல்லி மகிழ்ந்தான். தாழ்ச்சி இகழ்ச்சி—இவைகளால் வாழ்நாளெல்லாம் புண்பட்ட இந்தப் பெரு வீரனுக்கு மரணத்துக்கு முன்பு இந்தப் பெருமித உணர்ச்சியைக் கொடுப்பதற்காகத்தானே பரந்தாமன் வந்துள்ளான்? கர்ணன் விம்மிதம் எய்திப்பாடுகிருன் வேதியப் பொய் எடிவம் வன்மைக்கு முன்னே கரைகிறது. உண்மை உருவம் வெளிப்பட்டது. யாருக்கும் கிடைக்காத பெருஞ் சிறப்பினைத் தாமோதரன் போர்க்களத்தில் கர்ணனுக்கு அருளினன்...அபபும் வில்லும் குருதியும் எலும்பு மலையும் குவிந்து கிடக்கும் செங்களத்தில் இறைவனின் அருளால் கர்ணன் அமைதி காண்கிருன்... அவனருளாலே அவனுக்கெதிரில் அவனைப் போற்றும்போதே, தரன் பெற்ற பெரும் பேறு வேறு யார் பெற்ருர் என்று கேட்கிருன்...உண்மைதானே? அவன் பெற்ற நற்பேறு வேறு யார் பெற்ருர்? தன் தகுதியால், ஈரநெஞ்சத்தால், வாரி வழங்கிய கொடைப்பண்பால் எங்கோ எதிரி முகாமிலிருந்த பரம்பொருளை இவனை நோக்கி இறங்கி வரச்செய்து பெரும்புகழ்பெற்றகர்ணன் ஆனந்த பரவச நிலையில் பாடுகிருன். எம்பெருமான் கண்ணபிரான் மலர்விழிகளில் ஆனந்தக் கண்ணீர். குற்றுயிராய்க் கிடக்கும் கர்ணனுக்கு எல்லையற்ற நிறைவு. கர்ணன் முழங்கினுன். அவன் கேள்வி நியாயமானதுதானே?

'வான்பெற்ற நதிகமழ்தாள் வணங்கப் பெற்றேன்
மதிபெற்ற திருவுளத்தால் மதிக்கப் பெற்றேன்
தேன்பெற்ற துழாயலங்கல் களப மார்பும்
திருப்புயமும் தைவந்து தீண்டப் பெற்றேன்
ஊன்பெற்ற பகழியினல் அழிந்து வீழ்ந்தும்
உணர்வுடன்நின் திருநாமம் உரைக்கப்பெற்றேன்
யான் பெற்ற பெருந்தவப்பேறு என்னை அன்றி
இருநிலத்திற் பிறந்தோரில் யார் பெற்ருரே?

## மகாபாரதமும் 18-ம், இராமாயணமும் 7-ம்.

மகாபாரதம் 18 பர்வங்களை உடையது. பாரதப்போர் 18 நாட்கள் நடந்தது. போரில் பங்கு கொண்ட சைன்யங்கள் 18. மகாபாரதத்தின் உயிராம் பகவத்கீதை 18 அத்தியாயங்களை உடையது. மகாபாரதத்திற்கும் 18 என்ற எண்ணுக்கும் அவ்வளவு தொடர்பு உள்ளது.

இதைப் போலவே இராமாயணத்துடன் 7 என்ற எண் தொடர்பு கொண்டுள்ளது. தசாவதாரத்தில் இராமபிரான் 7 வது அவதாரம். அவருடைய அவதார நக்ஷத்திரம் புனர்பூசம் 7 வது நக்ஷத்திரம். இராமாயணம் 7 காண்டங்களைக் கொண்டது. சுக்ரீவன் இராமபிரானைச் சரணடைந்த போது சுக்ரீவனுக்கு நம்பிக்கையூட்ட அம்பு எய்து துளைத்த மாமரங்கள் 7. இராமபிரான் வனவாசம் ஏற்று முடித்தது 14 வருடங்கள் — ஏழிரண்டாண்டுகள். இராம இராவண யுத்தம் நடந்தது 7 நாட்களே. இராமபிரான் தன் உடன் பிறந்த சகோதரர்களுடன் குகன், சுக்ரீவன், விபீஷணன் ஆகிய மூவரையும் சகோதரர்களாகச் சேர்த்துத் தம் தந்தை ஏழு பிள்ளைகளைப் பெற்ருேனுயினன் என்ருர் — கம்பர் புலமையில்

''குகனொடும் ஐவரானேம் முன்புபின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானேம் எம்முழையன் பின் வந்த
அகனமர் காதலைய! நின்னொடும் எழுவரானேம்
புகலரும் கானந்தந்து புதல்வரால் பொலிந்தானுந்தை''

திருக்குடந்தை பத்மநாபன் அவர்களின் உபந்யாசத்தில்
கேட்டது — ஸப்தகிரி

# வேதம் - என் உயிர் நாடி

ரவி சம்பத்

" வணங்கும் துறைகள் பல பல வாக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பல பல வாக்கி அவையவை தோறும் நின் மூர்த்தி பரப்பிவைத்தாய் ! "

— சடகோபன்

வாழ்க்கையின் பல்வேறு தாமுடையாரையும் உய்யும் பொருட்டு எண்ணிலா சமயங்களைத் தோற்றுவித்து, இம்மையிலும் மறுமையிலும் இன்ப வாழ்க்கை அனுபவிக்கும் வகையில் மனிதனைப் பக்குவப்படுத்தி இறுதியில் பிறவா நெறிக்கு வழிகோலுவதே அச்சமயங்களின் இறுதி நோக்கம். இந்த சமயங்களுள் காணப்படும் தனித் தன்மைகளை நாம்மறைக்க முடியாது. ஆனால் மற்ற சமயங்களுக்கு தத்துவ ஊற்றாக இந்து சமயம் விளங்குகின்ற நிலையையும் நாம் மறுக்க முடியாது.

மற்ற தத்துவங்களைப் போன்று மேலோட்டமான வாழ்க்கை வழி முறைகளைப்பற்றிய விளக்கங்களைக் கொண்டொழுகாது, மனித ஆன்ம உணர்வினைத் தட்டியெழுப்பும் வகையில் பரம் பொருள் பற்றிய உண்மைகளையும், அவன் படைத்த இப்பரந்த உலகத்தைப் பற்றியும், அவ்வுலக வாழ்க்கைப் பற்றியுமான தத்துவக் கோட்பாடுகளையும்விளக்கி பிற சமயத்தத்துவங்களுக்கு ஓர் வழிகாட்டியாக நம் இந்து சமயம் அமைந்துள்ளது. இந்து, தன் சமயத்தை, ஒரு பொழுது போக்குச் சாதனமாகவோ அல்லதுஒரு குறிப்பிட்ட நாளில் கூடும் ஒரு சடங்காகவோ அமைத்துக் கொள்ள வில்லை. இந்து சமயம் கூறும் தத்துவங்கள் யாவும் வாழ்க்கையினூடே பின்னிப்பிணைந்தவை. அன்றுட வாழ்க்கை அனுபவங்களின் மீது கட்டப்பட்ட பெரியதொரு மாளிகை இந்து சமயம். அதனால்தான் இன்று வரை இவ்வுலகம் கண்ட தத்துவக் கருத்துக்களுக்கெல்லாம், இந்து சமயம் தோன்றிய இப் பாரதம் ஓர் தொட்டிலாக விளங்குகிறது. உலக வரலாற்றினை மேலெழுந்தவாரியாகப் படித்தவர்கள் கூட, ஐரோப்பிய கலாசாரத்திற்கும், நாகரிக வாழ்க்கைக்கும் வழிகாட்டிய கிரேக்கர்கள் கூட இந்து சமயத்திற்கு பெரிதும் கடன் பட்டிருக்கின்றனர் என்றே கூறுவர்.

இவ்வுயர்ந்த பெருமையுடன் விளங்கும் இந்து சமயத்திற்கு உயிர்நாடியாக, அடித்தளமாக திகழ்வது தொல்காப்பியத்தால் " அறிவன் நூல் " என்றும், குறளால் "அந்தணர் நூல்" என்றும், புறநானூற்றால் " நிறவோர் காட்சி " எனவும் போற்றப்பட எழுதா இலக்கியமான வேதமாகும். கருத்தாழத்தால் உள்ளத்தை உயர்த்தி வாழ்வளிக்கும் இவ்வேதத்தினை ஆதாரமாகக் கொண்டு இறையுணர்வோடு பாவ, புண்ணிய மோட்ச நகரங்களில் நம்பிக்கையூட்டி, மேலும் வேத நெறி செழித்தோங்க வழிசெய்வது வைதிக சமயமான இந்து சமயம். வேதத்திலிருந்து தோன்றி வேதக்கருததுக்களோடும் வைதிக நெறிகளோடும் உறவு கொண்டு, அக் கருத்தினையும், நெறியினையும் பரப்பும் பணியில் இரகசியமாக தன்னைவளர்த்துக்கொண்டு வரும் சமயம் இந்து சமயம். பிறருக்கு அறிவளிக்கும் மெய்யறிவை உய்த்துணரும் வகையில் மறை பொருளாக விளங்கி, ஸப்தலாபம்,அர்த்தலாபம் ஆகிய இரண்டினையும் வழங்கும் செய்யா மொழியான வேதத்தின் சிறப்பினை " வேதத்தை

விட்ட அறம் வேறில்லை; வேதத்தை ஓதியே வீடு பெற்றார்கள் '' என்று கூறுகிறார் திருமூலர்.

இந்தியக் கலாசாரத்தின் ஊற்றாக விளங்கும் வேதத்தில்பொருந்தியிருக்கும்தத்துவமுத்துக்கள் யாவும் இறைவனைப் பற்றிய உண்மையை, வாழ்க்கை இரகசியங்களை இறைவனிடமிருந்து நேரடியாகவோ, மறைமுகமாகவோ மாமுனிவர் களாலும், ஞானிகளாலும் பெறப்பட்டு, உண ரப்பட்டுப்பிறருக்கு உணர்த்தினவையே யாகும். வேதத்தில் காணப்படும் தத்துவக் கருத்துக்கள் பின்னர் ஏற்பட்ட உபநிஷத்துக்களுக்கு வித் திட்டன. அதில் காணப்படும் தெய்வீகக் கருத் துக்களால் அடைக்கப்பட்ட சமயக் கோட் பாடுகள் யாவும் யோகம் எனும் ஒரு மன, உடல் பயிற்சி சாதனம் உருவாகக் காரணமாக அமைந் தன. அதில் விளக்கப்பட்ட இவ்வுலகத்தைப் பற்றிய அடிப்படை உண்மைகள் யாவும், இவ் வண்டத்தைப் பற்றியும். உளநூல் பற்றியும் விளக்கும்படியான சாங்கியத் தத்துவம் தோன்ற வழி வகுத்தன. அதில கூறப்பட்ட வைதிக முறைகள், புரோகிதர்க்குரிய இயல்புகள் யாவும் மீமாம்ஸ விதி முறைஒன்று ஏற்படக் காரணமா யிற்று அதில் செப்பிய தியானம், வழிபடு முறைகள் யாவும் சைவம், வைணவம், சாக்தம் போன்ற மதங்களில் பக்தி இயக்கங்கள் தோன்றப் பெரிதும் உதவின. அதில் அறிவுறுத் தப்பட்ட சமூகக் கோட்பாடுகள், பழக்க வழக் கங்கள் ஆகியவை பின்னர் நடைமுறை ஆட்சி யமைப்பிற்குத் தேவையான ஒழுங்கும், சட்டம் பற்றிய கட்டுத் திட்டங்கள் அடங்கிய ஸ்மிருதி கள் அல்லது தர்ம சாஸ்திரங்கள் ஏற்படக் காரணமாயின. மகா சரஸ்வதியின பீஜாக்ஷ ரங்கள் எனப்படும் அகரம் முதல் க்ஷகரம் ஈருக 50 அக்ஷரங்களைக் கொண்டு விளங்கும் வேதத் தில் வரும் மந்திரங்களைத் தொடர்ந்து ஓத 6000 மணி நேரமாகுமாம். இம்மந்திரங்களின் பெருமை, அவற்றின் வலிமை, ஒலியில்தான் அடங்கியுள்ளது. வழிவழியாக அவ்வேத மந்தி ரங்களை மனதால் வாங்கி சிந்தனையால் தேக்கிக் காத்து வந்துள்ளனர்.

ஆனல் இந்த நிலை இன்று பெரிதும் மாறி விட்டது. வேதத்தின் பல பகுதிகளை வழிவழி யாக ஓதிவரும் இனத்தினர் சிதறுண்டு, மறைந் தும் வருகின்றனர். வேதம் கற்ற சிலரும் இச் சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்டு, வறுமையில் உழன்று வருகின்றனர். சமூக, சமய நிறுவனங் களும், அரசும் தனி மனிதனின் தகுதியை வளர்த்து, அவனை உயர்த்தவே ஊக்கம் காட்டு கின்றன. மேலை நாட்டாரும், அந்நாடுகளில் உள்ள சில ஆராய்ச்சி நிலையங்களும் வேத உப நிஷத்துக்களின் மேல் காட்டும் ஈடுபாட்டிலும், விருப்பிலும் ஒரு சிறு பகுதியைக் கூட அப்புனி தக் கருத்துக்கள் தோன்றிய இப்பாரதத்தில் உள்ள மக்களோ, சம்பந்தப்பட்ட அரசோ காட்ட வில்லை என்பது மறுக்க முடியாத உண்மை. '' இந்தியர்கள் அவர்களது பெருமை மிக்க கலாசாரத்தை விட்டு வெகுதூரம் வந்து விட்டார்கள். வேதங்களின் பெருமை அறிந்து, அவற்றிற்குப் புத்துயிர் அளிக்க அவர்கள் எல்லா வகையிலும் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் '' என்று நமக்கு எடுத்துரைத்து, வேத உபநிஷத்துக்களின் சிறப்பினை உணர்த்த ஓர் அன்னிபெஸண்ட் அம்மையார் இங்கிலாந்தி லிருந்து இந்தியாவிற்கு வரவேண்டியதாயிற்று. '' உபநிஷத்துக்கள் என் வாழ்க்கையின் உயிர்த் துணை; இறக்கும்போது அவையே எனக்கு முழுச் சாந்தியைத் தரவல்லன '' என மாக்ஸ் முல்லர் கூறி நாம் தெரிந்துகொள்ள வேண்டி யிருந்தது.

ஆனல் இந்நிலை சற்றே மறைந்து, மக்கள் தெய்வ வழிபாட்டிலும், தெய்வீகத் தொண்டி லும் ஈடுபட்டவர்களாக மாறிவரும் அறிகுறிகளை இப்போதெல்லாம் காணும் வாய்ப்பினைப்பெற்ற வர்களாக நாம் இருக்கிறோம். ஆங்காங்கே புராதனக்கோயில்கள்திருப்பணிகளும்தெய்வீகத் திருவிழாக்களும், திருமறைப் பிரசங்கங்களும், நடந்து வருவதே இதற்குக் கண்கூடு. வேதம் கற்றவர்கள் மதிக்கப்படுவதும், போற்றப்படுவ தும் ஏராளவு காணப்படுகிறது. இத்தகு போற்று தற்குரிய நிலையில் இன்று பாண்டியப்பொன்நாட் டின்கண் உள்ள ஒருசிறிய நகரம் – திருப்புத்தூர் காட்சியளிக்கின்றது வேத மந்திரங்களின் பெருமை, அவற்றின் வலிமை, மந்திர பீஜா க்ஷரங்களை உச்சரிப்பதிலும், ஒலியிலும்தான் அடங்கியுள்ளதை உணர்ந்த வேத விற்பன்னர் கள் ஸ்ரீ பூமாயி அம்மன் கோயில் மகாகும்பாபி ஷேக யாகசாலையில் கூடி வேதமந்திரங்களை

ஓதி வருகின்றனர் காணபத்திய வழி, காஞ்சி காமகோடி பீடம் சிவாகமமணி சித்தாந்த ரத்நாகாம், சிவாகம சிரோமணி, சேது சமஸ்தான ஆகமவித்வான் ஸ்ரீ ஐயாமணி சிவம் அவர்களை சர்வசாதக ஆச்சாரியாராகக் கொண்டு இந்த சூழ்நிலையை உருவாக்கித்தந்த பெருமை இச்சிற்றூருக்கு வாய்வளித்த தந்தை, தன் அரும் இளவலையே இவ்வூருக்குத் தொண்டு செய்ய தத்தம் செய்த தவச்சீலர், அருள்மாமணி ஸ்ரீ நா. ஆறுமுகம் பிள்ளை அவர்களுக்கும், அவர் பெற்ற செல்வங்களுக்குமே உரித்தாகும். அவர்களும் அவர் வழியும் வளம்மிக்க செல்வச் சிறப்புடன் நீடுழி வாழ்ந்து மேன்மேலும் பலப் பல தெய்வத்தொணடு, சமயத்தொண்டு தார்மீகப்பணிகள் பலபுரிந்திட அன்னை ஸ்ரீ பூமாயி அம்மன் அருள்புரிய வேண்டி நிற்பதே நம்கடன்.

# ஸ்ரீமகா வாராஹி

‘ஏ ரூஙன்’

ஸ்ரீ சக்ரத்தின் முதலாவது ஆவரணமாகிய த்ரைலோக்ய மோகன சக்ரத்தில் அமைந்துள்ள அதிஷ்டான தேவதைகளான ஸப்த மாத்ரு கணங்களில் ஐந்தாவதாக வைத்து எண்ணப் படுபவள் வாராஹி தேவியாவாள்.

ஸ்ரீ வாராஹி தேவி தாருகாசுர யுத்தத்தில் காளிக்கு உதவியாகவும் சும்பாசுர யுத்தத்தில் சண்டிகா தேவிக்கு உதவியாகவும், பண்டாசுர யுத்தத்தில் ஸ்ரீ லலிதா தேவிக்கு உதவியாகவும் தோன்றி அரும்பணி புரிந்து உலகின் துயரைத் துடைத்த தேவியாவாள்.

ஸ்ரீ லலிதாம்பிகைக்கு ஸேனா நாயகிகள் நால்வர். இவர்கள் ஸம்பத்கரீ, அச்வாரூடா, மந்த்ரிண்யம்பா, தண்டநாதா என்பவராவர். இவர்களில் ஸம்பத்கரீ லலிதையின் அங்குசத்திலிருந்து தோன்றியவள் இவள் லலிதா தேவியின் யானைப்படையின் தலைவி. அச்வாரூடா தேவி அம்பாளின் பாசத்திலிருந்து தோன்றியவள். இவள் அம்பாளின் குதிரைப் படைத்தலைவி. மந்த்ரிண்யம்பா தேவி அம்பாளின் மந்திரியாய் ஆலோசனை கூறுபவள். இத்தேவி பண்டனுடைய உடன் பிறந்தானாகிய விஷங்காசுரனைக் கொன்றவள். தண்டநாதா தேவி சக்தி சேனைகள் அனைத்திற்குமே தலைமை பூண்டவள். இத்தேவியின் ரதத்திற்கு ''கிரிசக்கரம்'' என்று பெயர். மூன்று யோஜனை உயரமுள்ள 'வஜ்ரகோஷம்' என்ற சிமயத்தை இத்தேவி வாகனமாக உடையவள். இத்தேவியே வாராஹி என்று அழைக்கப்படுகிறாள்.

ஸ்ரீ லலிதாம்பிகையின் இருப்பிடமான ஸ்ரீ மந்நகரத்தில் 16-வது பிராகாரத்தில் இத்தேவி வசிக்கிறாள். இப்பிரகாரம் மரகதமணி மயமானது. சிறந்த மணிகளால் ஆகிய கிரீடம் உடையவளும், பவழத்தாலாகிய காதணிகளைக் கொண்டவளும், ஹாரம் அட்டிகை முதலிய அணிகளைத் தாங்கியவளும், மஞ்சள் பட்டாடை தரிப்பவளும், வலது கைகளால் உலக்கை, வரத முத்திரை ஆகியவைகளைத் தரிப்பவளும், இடது கரங்களால் லாங்கலம், கபாலம் ஆகியவைகளை ஏந்துபவளும், எப்போதும் சுமுகமாக புன்சிரிப்புடன் விளங்குபவளுமான வாராகியை வணங்குகிறேன் என்று பிரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹம் என்னும் மந்திர சாஸ்திர நூலில் இத்தேவியின் தியானம் எழுதப்பட்டுள்ளது.

சத்ருவின் உபாதையால் வேதனையுற்றோர் வாராஹியை நினைத்த ல் சத்ருக்களின் தொல்லை அழியுமென்று மந்த்ர மஹோததி என்ற மாந்த்ரீக நூல் உணர்த்துகிறது. தேவிஸப்தசதீ என்ற உயரிய கிரந்தம் வாராஹிதேவி யக்ஞ வாராஹ உருவமெடுத்த ஸ்ரீ மஹா விஷ்ணுவின் உருவம் தரிப்பவள் என்று கூறுகிறது.

வாராஹி தேவிக்கு பன்னிரு நாமதேயங்கள் உண்டு. பஞ்சமீ, தண்டநாதா, ஸங்கேதா, ஸமயேச்வரி, ஸமய ஸங்கேதா, வாராஹி, போத்ரிணி, சிவா, வார்த்தாளி, மஹாஸேனா, ஆக்ஞாசக்ரேச்வரி, அரிக்னீ என்பவைதான் அத்திருநாமங்கள். இப்பெயர்களை பக்தியுடன் சொல்பவர்களை ஸங்கடம், துக்கம் ஆகியவை ஒருபோதும் அணுகாதென்று லலிதா உபாக்யானம் கூறுகிறது.

வாராஹி மூலமந்திரம் அஸ்த்ர வாராஹி, தூம்ர வாராஹி, ப்ருஹத் வாராஹி, ஸ்வப்ன வாராஹி என நான்கு வகைப்படும். ஸ்வப்ன வாராஹி மந்த்ரம் யாவரும் ஜெபிக்க எளிதானது.

ஸ்ரீ மஹா வாராஹியின் அபூர்வமான மூல மந்த்ரம் பின்வருமாறு :

''ஓம். ஐம் க்லௌம், ஐம் நமோ
பகவதி,
வார்த்தாளி, வார்த்தாளி,
வாராஹி, வாராஹி,
வாராஹமுகி வாராஹமுகி, அந்தே
அந்தினி நம:
ருந்தே ருந்தினி நம: ஜம்பே
ஜம்பினி நம:
மோஹே மோஹினி நம: ஸ்தம்பே
ஸ்தம்பினி நம:
ஸர்வதுஷ்ட ப்ரதுஷ்டானாம்,
ஸர்வே ஷாம் ஸர்வ வாக்சித்த
சதுர்முக கதி,
ஜிஹ்வாஸ்தம்பனம் குருகுரு,
சீக்ரம் வச்யம் ஐம் க்லௌம் ஐம்
க்லௌம் ஐம்ட:ட:ட:ட:
ஹும் அஸ்த்ராயபட்.''

வாராஹியைக் குறித்துத் தமிழில் வாராஹி மாலை என்ற நூல் உள்ளது.

# பூமாயி அம்மை நீயே!

பொற்கிழிக் கவிஞர் ச. சவகர்லால் எம். ஏ., பி. டி.

ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி
திருப்புத்தூர்

பூமாதே! நாடு பொலிவோடு குளிரப்
புகுந்தோடி மீளுங் காற்றே!
பொன்னுகை மின்னும் புதுவெய்யில் தன்னிற்
பொலிகின்ற ஒளியின் கீற்றே!
தாமாக மோதும் பெருந்துன்பத் தாக்கில்
தவிப்போரைக் காக்குந் தேவி!
தனியாகத் துன்பப் பெருங்கேணி வீழ்ந்து
தளர்ந்தோரைக் காக்குங் கையே:
பூமாயி என்றே புகழ்வோரை நாளும்
பொறுப்போடு தழுவுந் தாயே!
புவிமீது நன்மை பொலிவோடு காணப்
புரிகின்ற கருணை வடிவே!
பூமீதில் வாடும் புதல்வர்கள் நன்மை
பெறவேநீ அருளு வாயே!
புத்தூரிலின்று புதுக்கோயில் காணும்
பூமாயி அம்மை நீயே! 1

ஆசையாங் காற்றி லலைருட மாடி
அலைப்புண்ணும் மாந்தர் கூட்டம்
அம்மாவென் றலறி யன்போடு சென்றே
அடைவதேஉன் மடிதா னம்மா!
வேசங்கள் கட்டி விளையாடுங் கோலம்
விடிகாலங் கலைவ தேபோல்
வாழ்க்கையில் நடிக்கும் மனிதர்க ளுள்ளம்
வெளியாவ துன்றன் முன்தான்

ஓசையிடும் போதும் ஓலமிடும் போதும்
ஒவ்வாத நினைப்புத் தானே
உள்ளத்துள் நின்று பொல்லாங்கைச் சேர்க்கும்
உலகத்தின் நடப்புக் காணாய் !
பூசையிடும் போதுன் பொன்னடியே நெஞ்சிற்
புகுந்திருக்க அருளு வாயே !
புத்தூரி லின்று புதுக்கோயில் காணும்
பூமாயி அம்மை நீயே ! 2

எண்ணங்கள் திசைக ளெங்கெங்கோ ஓடி
என்றென்றும் அலைக்க ழிக்கும்
இதயந்தான் துன்ப அலைவிச்சில் நொந்தே
ஏழையாய்த் துடிது டிக்கும்
வண்ணங்கள் நடப்பிற் பெறவேண்டி நெஞ்சம்
வழியெல்லா மேங்கி நிற்கும்
வாயாடிப் பிள்ளை வளர்ந்தோங்க நல்ல
பிள்ளையோ வாடி நிற்கும்
எண்ணிக்கை கோடி எல்லாமுன் பிள்ளை
ஏங்குவது முனக்கு முன்தான்
ஏழையா யொருவன் ஏங்கிறைந் தாலும்
அம்மாவுன் பிள்ளை தானே !
எண்ணம்போல் மாந்த ரெல்லோரு மோங்க
ஈடின்றி யருளு வாயே !
புத்தூரி லின்றி புதுக்கோயில் காணும்
பூமாயி அம்மை நீயே ! 3

கையோடு கால்கள் எல்லாமும் பெற்றுக்
கலந்தாடி நிற்ப துன்றன்
கருணைவிழி வீச்சுக் காந்தஒளி யால்தான்
காணுதா ரில்லை யம்மா :
பையோடு சென்று பொருளோடு மீளுங்
கடைத்தெருவா யுன்றன் கோயில்
வஞ்சமிலா வுள்ளம் வணங்குங்கால் தூய்மை
வாய்த்திட்டா லருளு வாயே :
பொய்யோடு வந்துன் னருளோடு திரும்ப
நினைத்திட்டா லருளு வாயா ?
பொழுதெல்லாந் தூய்மை புகுந்தாடி நாளும்
பொலிவாகு முன்றன் முற்றம்.

மெய்யோடு நின்று மனத்தோடு தொழுவார்
மேன்மையுற வழங்கு வாயே :

புத்தூரி லின்று புதுக்கோயில் காணும்
பூமாயி அம்மை நீயே.

இல்லையென் றென்றும் சொல்லாத வள்ளல்
இதயந்தாள் தளர லாமா?

இலையென்ற ராக மெப்போது மிசைப்போர்
என்றைக்கும் உயர லாமா ?

வள்ளல்கள் வாழ வாழ்க்கையி லோங்க
வைத்தால்தான் நீதி யன்றோ ?

வாழ்க்கையிற் பிறரைத் தூக்கிவிடு வோர்கள்
வழுக்கிவிழ நீவி டாதே.

உள்ளத்தி னுயர்வே வாழ்க்கையி னுயர்வாய்
உருவாக அருள வேண்டும்

ஒப்பற்ற வாழ்க்கை நல்லோர்கள் காண
அம்மாநீ யுதவ வேண்டும்.

பள்ளங்க ளெல்லாம் மேடாக்கி நல்ல
பண்புள்ளோர்க் கருளு வாயே :

புத்தூரி லின்று புதுக்கோயில் காணும்
பூமாயி அம்மை நீயே :



# வரலாற்றுத் திருப்புத்தூர்

## முந்தாநாள் நேற்று இன்று

இரா. இராசகோபாலன்

### திருப்பத்தூரும், திருப்புத்தூரும்

வட ஆர்க்காடு மாவட்டத்தில் திருப்பத்தூர் என்றொரு நகரம் இருக்கிறது. கிழக்கு இராமநாதபுர மாவட்டத்தில் மதுரை தேவகோட்டைநெடுஞ்சாலையில் புதுக்கோட்டை தஞ்சை, திருச்சி, மதுரை, முகவை ஆகிய மாவட்டங்களை இணைக்கும் ஒரு பெரிய சந்திப்பாக இருக்கும் திருப்புத்தூர் என்றொரு பேரூர் இருக்கிறது.

இந்த இரண்டு ஊர்களும் ஒன்றுக் கொன்று தொலைவில் இருந்தாலும் உறவுகொண்டு இருக்கின்றன. அங்கே போகவேண்டிய தபால்கள் இங்கே வரும்; இங்கே வரவேண்டியவை அங்கே போகும். சில சமயம் அங்குமிங்கும் மாறி மாறிப் போகும்.

அஞ்சல் ஏற்படுத்திய இந்த அன்புறவுக்கு இன்னொரு காரணமும் இருக்கலாம். இராமநாதபுரம் மாவட்டத்துத் திருப்புத்தூர் ஆங்கிலத்தில் திருப்பத்தூர்என்றே எழுதப்படுகிறது. ஆங்கிலம் அமெரிக்கச் சேலத்தையும், தமிழ்ச் சேலத்தையும் இணைக்கக் கூடியது, எனவே திருப்புத்தூரை இணைத்ததில் வியப்பொன்றும் இருக்கமுடியாது.

பத்தூர் என்பது பத்து ஊர்களைக் கொண்டது என்று பொருள் தரும்: 'சொத்துப் பத்து' எனப்படும் உடைமை மிகுந்திருப்பதாலும் பத்தூர் என்று பெயர் வந்திருக்கலாம். திருப்பத்தில் உள்ள ஊர் திருப்பத்தூர் என்று சொல்வதிலும் சுவை இருக்கிறது.

ஆனால் வசிட்டர் வாயால் 'பிரம்ம ரிஷி' என்று வந்ததுபோல மூத்த ஞானிகளாகிய அப்பரும் ஆளுடைப் பிள்ளையும் இராமநாதபுர மாவட்டத்துத் திருப்புத்தூரைத் திருப்புத்தூர் என்றே பாடியிருப்பதால் இது திருப்புத்தூர் தான். அது திருப்பத்தூர்தான் !

### அப்பரும், சம்பந்தரும்

திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர்

பெயர்களை அறியாதவர்கள் 'தமிழ்கூறு நல்லுலகில்' இருக்க முடியாது, 'பட்டி தொட்டி' எங்கும் பாட்டுப்பாடிக் கடவுள் வழிபாட்டை வீடு வீடாகப் பரப்பிய 'தமிழ்ப் பாட்டாளிகள்' அவர்கள். பரசமய கோளரிகள்; பல்லவனையும் பாண்டியனையும் பணியவைத்த 'புரட்சிக் கவிஞர்கள்'! அவர்கள் இருவரும் பாண்டி நாட்டுப் பயணத்தின் போது திருப்புத்தூர்க்கு வந்து வழிபட்டுப் பெருமகிழ்வு பெற்றார்கள். இப்பொழுது திருப்புத்தூர் அதை நினைந்து பெருமகிழ்வும் பெருமையும் பெற்றுத் திகழ்கிறது !

"தேனும் மணமும் மிகுந்த சோலைகள், வானத்திலுள்ள சந்திரனோடு அளவளாவுகின்றன; வரிவண்டு இசைபாடிக் கொன்றையில் திளைக்கும்; திசை விளங்க பொழில் சூழ்ந்த திருப்புத்தூர்; நெய்தல் ஆம்பல் மலர்கள் மிகுந்து செய்கள் மலிந்த திருப்புத்தூர்; சிவனார் ஊர்; அழகிய விழாக்கள் மிகுந்தவூர், மடமயில்கள் தெருவுதொறும் திளைக்கின்ற ஊர், செல்வர்

சேடர் உறையும் திருப்புத்தூர்'' என்பது சம்பந்தரின் வருணனை.

திருநாவுக்கரசர் திருப்புத்தூரொடு 'திருத்தளியான்' என்ற பெயரைத் திரும்பத் திரும்பச் சொல்கிறார். அவருடைய பார்வையில் ''திருந்து வயல் சூழ் திருப்புத்தூர், தேராரும் நெடுவீதித் திருப்புத்தூர் பொன்போலக் கொன்றைப் பூப் பூத்திருக்க, அதன் செல்வத்தைக் காந்தள் பூ கைபோலப் பூத்துச் சுட்டிக் காட்டி விட அதனை வண்டு கண்டு மகிழ்ந்து தென் மாங்கு பாடும் செழிப்பான காடுகள் உள்ள திருப்புத்தூர் வளமிக்க எருமையின் பெருமையான மடுப்படியும் திருப்புத்தூர் என்று கண்டு பாடுகிறார். தருமிக்குப் பொற்கிழி யளித்த கதையையும் சொல்கிறார். சுருங்கச் சொன்னால், சோலையும் வயலும் பூவும் மயிலும் மாடும் செல்வமும் பக்தியும் மிக்க ஊர் என்று திருப்புத்தூரின் பெருமையைப் பாடி என்றென்றும் அதனை நிலைபெறச் செய்து விட்டார்கள் அந்த ஆண்டகை இருவரும்.

## சிந்தாமணியும், புராணமும்

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வெளியான முதல் தமிழ்க் கலைக்களஞ்சியமான அபிதான சிந்தாமணி' என்ற நூலில் பாண்டி நாட்டுத் திருப்பதிகள் என்பதில் முதலில் இடம் பெறுகின்ற திருப்புத்தூரைப் பற்றி பின்வரும் குறிப்பு காணப்படுகிறது. '' திருப்புத்தூர் :- உமாதேவியார் முதலியோர் பூசித்த தலம், சுவாமி திருப்புத்தூரீசர். தேவி-சிவகாமித் தாயம்மை. தீர்த்தம்-அற்புத கங்கை. ரூட்:-மானாமதுரை ஸ்டேஷனிலிருந்து இறங்கிச் சிவகெங்கைச் சென்று அங்கிருந்து 22 மைல் சென்றால் இத்தலம். ஞா. – நா-2. புராணமிருக்கிறது. அதில் கூறியதுபோல திருப்புத்தூருக்குத் தலபுராணம் ஒன்று இருக்கிறது. 1535 விருத்தங்களைக் கொண்ட அந்தப் புராணம் மிகவும் விருத்தாப்பியமானதாகவே இருக்கிறது, தொட்டால் தாள் எல்லாம் நொறுங்கிக் கையில் ஒட்டிக்கொண்டு விடும்போல் தெரிகிறது. அவ்வளவு தொன்மையானதாக இருக்கிறது! அதை எழுதியவர்''காரைக்குடி இராமநாதசெட்டியார் குமாரர் சொக்கலிங்கச் செட்டியார். பள்ளத்தூர் க. ப. குமரப்பச் செட்டியார் வேண்டுகோளின் படி சென்னை: மதரூஸ் ரிப்பன் அச்சியந்திர சாலையில் அச்சிடப்பட்டது. விளம்பி ஹு ஆவணி மீ'.' அது வட மொழியிலிருந்து தமிழில் எழுதப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

## புரட்சித் தலைவர்கள்

''உன்னைச் சுற்றியிருப்பவர்கள் இன்னார் என்று சொல்லு, உன்னை யாரென்று சொல்லி விடுகிறேன்'' என்று ஒரு பழமொழி உண்டு. தான் தலைமையானதாக இருப்பதோடு புரட்சித் தலைவர்கள் பலரைத் தனக்குச் சுற்றமாக, நண்பர்களாக கொண்டிருக்கும் பெருமையுடையது திருப்புத்தூர்.

தாழ்த்தப் பட்ட மக்களைக் கட்டித் தழுவித் 'திருக்குலத்தார் என்று போற்றிப் புரட்சி செய்த வைணவப் பெரியார். உடையவர் இராமானுஜர் ; திருமந்திரப் பொருளை உணரத் திருப்புத்தூரை அடுத்துள்ள திருக்கோட்டியூர்க்கு வந்தார். 'இதன் இரகசியத்தை எவரிடமும் கூறமாட்டேன்' என்ற வாக்குறுதியை வாங்கிக் கொண்டு திருக்கோட்டியூர் நம்பி என்ற குரு, உடையவர் இராமானுஜருக்கு உண்மைப் பொருளை ஓதியருளினார். கேட்டறிந்த அவர் கோபுரத்தில் ஏறி 'வாருங்கள் வாருங்கள்' என்று மக்கள் எல்லாரையும் அழைத்துமெய்ப்பொருளை உரத்துக் கூறி விளக்கினார். 'நீ நரகத்துக்குத் தான் போவாய்' என்று அவருக்கு எச்சரிக்கை விடப்பட்டது. பொதுமக்களின் ஞான உணர்வுக்காக நான் எந்த நரகத்துக்கு வேண்டுமானாலும் போகிறேன் என்று முரசு கொட்டிய எம்பெருமானார் புரட்சி செய்தவூரான திருக்கோட்டியூர் பாடம் பெற்ற வைணவத் தலம். அது திருப்புத்தூரின் ஒரு சுற்றம்.

கோயில்களில்குடைவரைகோயில்என்ற புதுமையைச் செய்த பல்லவன் மகேந்திரவர்மன் மனமாற்றம் பெற்றுச் சிவநெறி சேர்ந்தவன். அவனது காலத்துக் குடைவரை கோயிலில் பெரிய பிள்ளையாரைப் பெற்று அருள்பாலிக்கும் பிள்ளையார்பட்டி திருப்புத்தூரின் இன்னொரு சுற்றம். நீண்ட மீசை, பெரிய கொண்டை, வீரம்தெறிக்கும் வலுமிக்க உடம்பு, உடைவாள், அஞ்சாமை யறியாத முகத்தோற்றம்—

இத்தகைய வீரர்இருவர்எவ்வளவுபயபக்தியுடன் நூற்றுண்டுக்கு மேலாகச் சண்முகநாதனைத் துதித்தவாறு இருக்கிறார்கள்! ஆகா, அவர்கள் வீரமங்கை வேலு நாச்சியாரின் தளபதிகள் அல்லவா? ஆம் அவர்களேதாம்! சிவகங்கைச் சீமையின் புரட்சித் தலைவர்கள். மருது சகோதரர்கள். அவர்கள் காலமெல்லாம் நீள் சிலையாய்க் கையெடுத்துக் கும்பிட்டவாறிருக்கும் குன்றக்குடியின் பக்திப் பேரிசையைக் கேட்டு மகிழாதார் உண்டோ? அந்தக் குன்றக்குடி திருப்புத்தூரின் ஒரு சுற்றம்.

கொடைவகையில் மடம் உடையவனாக முல்லைக்குத்தேர் கொடுத்தான் பறம்பிற் கோமான் பாரி, அவனைத் தெரியாதவர்கள் உண்டா? அவனது கொடைப் புரட்சி மாரியையும் வென்றதல்லவா? அவனது பறம்பு, கடோரகிரி என்ற கொடுங்குன்றம் இன்று பிரான்மலையாய்த் திருப்புத்தூரின் சுற்றமாக இருந்து வருகிறது.

காரை சூரை விரை என்ற சொற்களைக் கேட்டவுடன் கலிங்கத்துப் பரணி யின் பாலைவனம் நமக்கு நினைவில் வரும். அந்தக் காரைக்குடியைக் கல்விப் பெருங்குடியாகவும் கம்பன் குடியாகவும் செல்வக் குடியாகவும் ஆராய்ச்சியின் குடியாகவும் மாற்றினர் செல்வப் புரட்சியாளர் சிலர் அந்தக் காரைக்குடியும், விடுதலை போராட்டத்தில் வீர வேதனைப்பட்ட தேவகோட்டையும், பூலாங்குறிச்சியும் திருப்புத்தூரின் சுற்றங்கள் என்றுதான்சொல்ல வேண்டும்.

## அண்ணனும் தம்பியும்

இந்தியவிடுதலை வரலாற்றில் நெற்கட்டுஞ் செவ்வல், பாஞ்சாலங்குறிச்சி என்ற வரிசையில் திருப்புத்தூரும் வருகிறது. சின்ன மறவர் சீமை எனப்பட்ட சிவகங்கைச் சீமையின் இரண்டாவது தலை நகரமாக ஏற்றமும் தோற்றமும் பெற்று விளங்கிய திருப்புத்தூர் மருதிருவரின் தியாகத்தால் வரலாற்றுப் புகழில் சிறந்து நிற்கிறது. தன் கைகளைப் புலியின் வாய்க்குள் செலுத்தி அதனால் அப்படியே வாயைக் கழித்துக் கொல்லும் பெரிய மருதுவின் செய்கையைப், பன்முறை வாயை மூடாது கண்ட ஆங்கிலன் ஒருவனின் குறிப்பு இன்று படிக்கும் பொழுதும் மெய்யெல்லாம் சிலிர்க்கச் செய்கிறது. வேங்கைப் புலிகளை வென்றவன் வெள்ளைப் புலிகளை வேட்டையாடும் புரட்சியில் தம்பியொடும் படைகளொடும் தளராது போராடினன்.

சூழ்ச்சிக்கும் வரிசகத்திற்கும் பலியான மருதிருவர் திருப்புத்தூரில் சொல்லவே நாகூசுகிறது. தூக்கிலிடப்பட்டார்கள். அவர்கள் சிந்திய இரத்தத்தால் தமிழ் மண் சிவந்தது. சிதம்பரனூர் முதல் பலர் அதிலிருந்து பூத்து வந்தார்கள். மருதிருவரின் வேண்டுகோள்களில் ஒன்றின்படி அவர்களதுஉடல்திருப்புத்தூரில் அடக்கங்கண்டது. தலை, காளையார் கோயிலில் குடி கொண்டது] திருப்புத்தூரில் பெரிய மருத்துவ மனையின் ஒரு சிறிய இடத்தில் விளம்பரமற்றுக் கிடக்கும் மருதிருவரின் பதுக்கை, 'ராஜ்காட்' 'சாந்திவனம்' போல என்றும் நாட்டுமக்களின் நன்மதிப்பில் உயர்ந்து நிற்கக்கூடியதே !

## ஸ்வீடிஷ் திருப்பத்தூர்

'என்ன தம்பி, உங்களைக் காணவேயில்லையே, எந்த ஊரில் இருக்கிறீர்கள்? 'முப்பதாண்டுகளுக்கு முன்னால் முதியவர் ஒருவர் கேட்கிறார். அதற்குப்பதில் 'திருப்புத்தூரில் இருக்கிறேன்' என்று வருகிறது. மேற்கு மலை அடிவாரத்தில் சிற்றூர் ஒன்றில் இருக்கும் அவர் மறுபடி கேட்கிறார், 'அந்தக் கண் ஆஸ்பத்திரியிருக்குதே, அந்தத் திருப்புத்தூரா?' 'ஆம்' என்று பதில் வந்ததும், தமக்கு அது தெரிந்திருக்கிறது என்ற திருப்தியுடன் அமைதியடைகிறார் பெரியவர். அப்பரும், சம்பந்தரும் மருதரசரும் மக்களது மனத்திரையில் மறதிப் பின்னிலைக்குச் சென்ற பிறகு திருப்புத்தூர் வரலாற்றைக் 'கண் ஆஸ்பத்திரி' உயர்த்திப் பிடித்தது. தேசமெங்கும் எதிர்ப்புக்கள் ஒடுக்கப்பட்டு அன்னியரின் கொடி பறக்கத்தொடங்கியது. வெளிநாட்டுக் கிறித்தவக் குழாத்தினர் தத்தம் சமயப் பணியுடன் கல்வி மருத்துவப் பணிகளையும் செய்யத் தொடங்கினர். ஐரோப்பாவின் வடபக்கத்தில் பருத்திக்காய் வெடித்துச்

சிரிப்பதுபோல் தேசப்படத்தில் காட்சிதரும் நார்வே, ஸ்விடன் டென்மார்க் என்பவற்றுள் ஸ்விடன் தேசத்தின் அன்புப் பார்வை தென் நாட்டுத் திருப்புத்தூரின்பால் திரும்பியது. ஸ்விடிஸ் மிஷின் மருத்துவ மனை ஒன்று எழுந்தது. காடாக இருந்த இடம் கட்டடங் களாக மலர்ந்தது. தேசமெங்கும் கண்ணொளி வழங்கும் கர்மயோகத்தைச் செய்து சிறந்து நின்றது. திருப்புத்தூருக்கு 'புகழேந்தி' யாக விளங்கியது, இன்றும் விளங்குகிறது.

## ஆறுமுகம் பிள்ளை, திருப்புத்தூர்

பதினைந்து ஆண்டுகட்கு முன் விருதுநகரில் ஒரு திருமணம், சென்னையில் நூற்பதிப்பு நடத்தும் நெல்லைப் பெரியவர் ஒருவர் கேட்கிறார். ''நீங்கள் எங்கே வேலைபார்க்கிறீர்கள்?'' பதில் 'திருப்புத்தூரில்'. ஆறுமுகம் பிள்ளை காலேஜ் கட்டியிருக்கிறாரே, அந்தத் திருப்புத் தூரா?' என்று மறுபடியும் கேட்கிறார் அவர். ''ஏழுபேர் பூண்டிருந்த ஈகை நுகத்தைத்தான் ஒருவனே தாங்கி நடத்துகிறான்'' என்று சிறுபாணாற்றுப்படையின் தலைவனை, அதனை எழுதியவர் கூறுவார், திருப்புத்தூர் வரலாற்றுப் பெரும்புகழைத் தொடர்ந்து நிலைநாட்டும் அருஞ்செயலை ஆற்றல் மிக்க அறவீரர் நா. ஆறுமுகம் பிள்ளை அவ்வாறு மேற் கொண்டார்.

காலம் மாறுகிறது. தெருவுதோறும் மடமஞ்சுறை திளைக்க வில்லை. வயலும் சோலையும் வளமற்றுக் கிடக்கின்றன. மன்னர்கள் புரந்த கோயில்கள், கலைகள். குடத்துள் விளக்காக அடங்கி விட்டன.

புதிய புதிய மாறுதல்கள் வந்து விட்டன. மக்களாட்சி வந்து விட்டது. எல்லாம் மக்கள் கைக்கு வந்து விட்டது. ஆனால் மக்களின் கையில் என்ன இருக்கிறது? அன்பு அறம் வீரம் உழைக்கும் திறம் இருக்கின்றன. இருந்தும் என்ன பயன்?

'திரைகடல் ஓடித் திரவியம் தேடிவந்த திருவுடையார் சிலர் தத்தம் அளவில் அறப்பணி செய்யலாயினர். !உன்னை நம்பு, கடவுளை நம்பு' என்று அளப்பரிய ஊக்கமும் நம்பிக்கையும் கொண்ட ஆறுமுகம் பிள்ளையவர்கள் பெரிய தாளாண்மைபோன்றே வேளாண்மைப் பெருமிதமும் கொண்டவர்.

''பார்த்தா, எவரொருவர் என்னை எப்படி வழிபடுகிறார்களோ அவரவர்க்கு நான் அப்படி அருள் புரிகிறேன்' என்ற கீதை வாக்கைப் பூரணமாக உணர்ந்தொழுகும் பிள்ளையவர்களது வேளாண்மை பல பக்கத்திலும் பரந்து பயன் தருகிறது.

ஸ்விடிஸ் மருத்துவ மனையா, பெரிய பள்ளி வாசலா, பெரிய கோயிலா, உயர்நிலைப்பள்ளியா உத்தரகோசமங்கையா, இராமேசுவரமா, மதுரை கோயிலா ஆறுமுகம் பிள்ளையவர்களின் நன்கொடை உவந்து நடைபெற்றது.

அரசினர் மருத்துவமனை ஏற்படவும், திருப்புத்தூருக்கு குடிநீர்த் திட்டம் செயலாகவும் அவர் கொடுத்த பெருங்கொடை விழிப் புருவங்களை உயர்த்தக்கூடியது. அவற்றுக்குச் சிகரமாகக் கல்லூரி ஒன்றை நிறுவி இந்தியாவின் கல்விப் படத்தில் திருப்புத்தூருக்கு இடம் தேடித்தந்தது வியத்தகு சாதனை என்பதில் ஐயமே இல்லை, அதனால் திருப்புத்தூருக்குப் பெயர் மட்டும்தானா கிடைத்தது? கல்வியும் கலையும். நாகரிகமும், கடையும் வாணிகமும் பெருகி வளர நிரந்தரமான வாய்ப்பு கொடுத்துள்ளன அல்லவா.

இருபதாண்டுக்கு முன் இக்கட்டுரையாளர் 'ஊருணிக்குக் கரையெடுத்தும் உயர் கல்வி நாட்டுவித்தும்' என்று பாடினார். அன்று பூமாயி அம்மன் கோயில் குளம் தரையோடு தரையாகக் கிடந்தது. அதை ஆழப்படுத்தி சுற்சுவர் எழுப்பி அகலப்படுத்தினார் அழகுப்படுத்தினார் திருவாளர் பிள்ளை.

## பொன் வழங்கும் பூமாரி பூமாயி

''வினைப்பயனை விரும்புபவர்கள் இம்மையில் தேவதைகளைத் 'தொழுகிறார்கள். ஏனென்றால் வையகத்தில் வினைப்பயன் விரைவில் வாய்க்கிறது'' என்று பகவான் கண்ணன் தேவதை வழிபாடு பற்றி அருளினார்,

பலவகைப் பெயர்களால் பலவகைத் தெய்வங்களைப் போற்றினும் பரமாத்மா ஒன்றே, என்று உறுதியான கோட்பாடு கொண்டது இந்தியத் தத்துவ ஞானம். அதனால் "ஒன்றே குலமும்" ஒருவனே தேவனும்" என்றார் திருமூலர், திருப்புத்தூரின் தென்பால், தென்மாப்பட்டுக்கு முன்பால் நின்று ஆண்டு பலவாக அருளாட்சி புரிந்து மக்களுக்கு வாழ்வளித்து வரும் சக்தி பூமாயி அம்மன், அவளை வழிபட்டோர் வாழ்வு பெற்றார்: பொன் பெற்றார், புகழ் பெற்றார், போகம் பெற்றார். திருப்புத்தூர் மக்களின் மாச்சரியம் கடந்த மத ஒற்றுமைக்கு எடுத்துக் காட்டாக இருப்பது பூமாயி கோயில் விழாவும் விமரிசையும். அதன் நடைமுறைத் தொடக்கச் சிறப்பு தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த பக்திமானுக்கு ஆண்டுதோறும் தரப் படுகிறது. சாதி கடந்த சமத்துவ வழி, மதங் கடந்த மங்கல வழி பூமாயி வழியாகும்.

சக்தி வழிபாடு இந்நாட்டின் பழைய வழக்கம்' Mother worship is so old in this land that its origin cannot be traced என்பர் சித்பவானந்த சுவாமிகள், அவ்வாறே கன்னித் தெய்வ வழிபாடும் மிகப் பழங் காலந் தொட்டே வளர்ந்து வருவதாகும். ஆங்காங்குப் பலப்பல கதைகளைக் கொண்டிருந்தாலும், காரணச் சிறப்போடு விளங்கி வருவதும் ஆகும். இது பற்றிச் சித்பவானந்தர் சொல்வதைக் கவனிப்போம் ;

',Sakti is called Jagan mata - the Progenitres of the universe. Because of her self - revealing power, she is simultaneously the producer and the produced' He who understands the working of the cosmos has really understood the Cosmic Mother. She is the source of the atom and the universe ... ... ... Nature is as much a Virgin as she is the Progenitor of the universe. She retains her purity. immutability and self - sufficiency. She is simultaneously the Producer and the Primordial Energy - the Mother and the Maid."

## பிள்ளை அவர்களும், பிள்ளைகளும்

பொன் கொழிக்கும் பூமாயி அம்மன் கோயில் திருப்பணியைச் செய்விக்கும் தந்தையின் திருக்குறிப்பை ஏற்றுத்தக்காராக முன் வந்து செயல்புரியலானார் பிள்ளையவர்களின் மூத்த மைந்தரான திருவாளர் நா. ஆறு. நாகராஜன் அவர் ஏற்கனவே ஊராட்சித் தலைவர், ஊராட்சி ஒன்றியத் தலைவர், கல்லூரிச் செயலாளர், பல்கலைக் கழக செனட் உறுப்பினர் என்ற பொதுநிலைப் பணிகளை இளம் வயதிலே ஏற்று மக்கட் சக்தியோடு தொடர்பு கொண்டவர் பலநாடு சுற்றிய அனுபவம் உடையவர்.

'ஏவா மக்கள் மூவா மருந்து' என்பார்கள். குறிப்பறிந்து செய்யும் மக்கள் தந்தைக்கு மூவா மருந்தாகிய அமிர்தம் போன்றவர்கள் என்று பொருள்.

திருவாளர் ஆறுமுகம் பிள்ளையின் மக்கள் இருவரும் தந்தைக்கு மட்டுமல்ல, ஊருக்கும் நாட்டுக்கும் பணி செய்வதில் ஏவா மக்களாகத் திகழ்பவர்கள். வாணிபம் தொழில் நிமித்தம் தந்தையும், மூத்த மைந்தனை வெளிநாடுகளில் தங்கியுள்ள காலை, ஆற்றவேண்டிய பணிகளைத் திறம்பட ஆற்றும் ஆற்றல் பெற்ற இளைய மைந்தர் திரு. நா. ஆறு. தங்கவேலுமிகஇள வயதினராயினும் அரசு, மக்கள். அலுவலர் என்ற முத்திறத்தாரோடுஇணைந்து வெற்றிபெற நடத்தி வைப்பது பாராட்டுக்குரியதாக இருக்கிறது.

'தம்பியுடையான் படைக்கு அஞ்சான்' என்பது பழமொழி. படைத்தல் தொழிலுக்குத் தம்பின் நிற்பவர் தானே தம்பி. அவ்வாறே இளைய நம்பி, கல்லூரி முதலிய நிருவாகப் பொறுப்புகளோடு, பூமாயி கோயில் திருப்பணி குடமுழுக்கு, மலர்ப்பணி என்பவற்றையும் ஏற்றுச் செயலாற்றுகிறார்; சிறப்புச் செய்கிறார். சிறப்புச் சேர்க்கிறார், சிறப்பு அடைகிறார்.

## வரலாறு தொடரும்

திருப்புத்தூர் வரலாறு பௌதிக வீறும். அரசியல் வீறும் தார்மிக வீறும் உடையது அது. மேலும் மேலும் தொடர்ந்து வரவல்லது, வளர வல்லது.

இந்தியாவின் தொழில் படத்தில் திருப்புத்தூர்க்கு நல்லதோர் இடத்தைத் தேடித் தரும் வேட்கை, வள்ளல் ஆறுமுகம் பிள்ளைக்கும் அவர் தம் பிள்ளைகளுக்கும் மிகுதியாக உண்டு. இறை வழிபாட்டோடு சேர்ந்து தொழில் வழிபாடும் பெருகினாலே காலத்தை வென்று வாழமுடியும். தொழில் வளம் பெருக்கித் திருப்புத்தூர், வரலாற்றில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்த நாட்டு மக்கள் விழையும் வேட்கையைக் கொடை வள்ளல் குடும்பத்தார் முன்னிலையில் நின்று சாதித்து அளிக்க இறை அருள்க. ஊரார் உறுதுணை நல்குக. உரமும் ஊக்கமும் உயர் வாழ்வுக்கு வழி கோலுமாக!



# ஸ்ரீ தேவியின் மகிமை

திருமதி சசிகலா ரங்கராஜன் M. A., B. T.

தேவ்யா யயா தத-மிதம் ஜகதாத்ம -
சக்த்யா
நி; சேஷ - தேவகண - சக்தி - ஸமூஹ-
மூர்த்யா/
தாமம்பிகா - மகில - தேவ - மஹர்ஷி -
பூஜ்யாம்
பக்த்யா நதா:ஸ்ம விததாது சுபானி
ஸா ந: //

எந்த தேவி தனது சக்தியால் இவ்வுலகை யெல்லாம் வியாபிக்கின்ருளோ, எல்லா தேவ கணங்களின் சக்தியும் எவளுடைய வடிவில் ஒன்று கூடுகின்றனவோ, எல்லாத் தேவர்களா லும், மகரிஷிகளாலும் பூஜிக்கப்பட்டவள் எவளோ அந்த அம்பிகையை நாங்கள் பக்தி யுடன் வணங்குகின்றோம். அவள் நமக்கு நலன் களை அருள வேண்டும்.

இவ்வுலகெங்கும் வியாபித்துள்ள சக்தியின் அம்சத்தை மானுடன் பல பெயர்கள், பல உருவம் கொடுத்து வழிபட்டு வருகிருன். அம்பிகை உலகிலுள்ள அனைத்து உயிர்கட்கும் தாயாகின்ருள். இவ்விடத்தில் பரமஹம்ஸரின் ஒரு கதை நினைவிற்கு வருகிறது.

"நீங்கள் என் பத்தினியுடன் இல்லறமுறை யில் வாழவில்லை?' என்று ஒருவர் கேட்க, பகவான் ராமகிருஷ்ணர் ஒரு கதையைச் சொன்னர்.

"நீ கேட்ட கேள்விக்கு ஒரு கதையைச் சொல்லுகிறேன். ஒரு நாள் பரமசிவனுடைய குழந்தையாகிய கணேசன் ஒரு பூனையை நகத் தால் கீறிக் காயம் பண்ணி விட்டான்! பிறகு தாயிடம் திரும்பிப் போனபோது அவளுடைய கன்னத்தில் ஒரு காயம் இருக்கக் கண்டு 'அம்மா, இதென்னது, உன்னை யார் காயப் படுத்தினது?' என்று கேட்டான். அதற்குப் பார்வதி, 'மகனே, இது நீ செய்த வேலை யல்லவோ? உன் நகத்தினுல் கீறின காயம் இது' என்ருள். 'இதென்ன விபரீதம்? நான் எப்போது உன்னைக் கீறினேன், அம்மா?' என்ருன் கணேசன்.

'கண்மணி! நீ பூனையைத் தொந்தரவு செய்து கீறினதை மறந்து விட்டாயா?' என்ருள் கௌரி.

'ஆமாம்; கீறினேன். அது உன் கன் னத்துக்கு எப்படி வந்தது?' என்று கணேசன் கேட்டான்.

'மகனே, உலகமெல்லாம் என் உடல் தானே? யாருக்கு என்ன காயமுண்டானுலும் அது எனக்கு உண்டான காயமே' என்ருள் தாய்.

''இதற்கு மேல் கணேசன் யாரை விவாகம் செய்து கொள்ள முடியும்? எந்தப் பெண்ணைக் கண்டாலும் அவளைத் தன் தாயாகவே கண் டான். பெண்மை அனைத்தும் அவனுக்குத் தாயாகவே போய் விட்டதால் விவாகம் செய்து கொள்ளும் எண்ணமே ஒழித்தான். என் கண் ணுக்கும் அப்படியே எந்த ஸ்திரீயும் பார்வதி யம்மனாகவே தோற்றம் தருகிருள். நான் என்ன செய்வது?'' என்ருர் பரமஹம்ஸர்.

இவ்விதம் எல்லா உயிர்களிடத்தும் தேவியைக் காணும் மனப் பக்குவம் கொண்ட மகான்கள் இப்புண்ணிய பாரதத்தில் இருந்திருக்கின்றனர்.

தேவியின் சிறப்பை எடுத்தியம்ப எத்தனையோ நூல்கள் உள. ஸ்ரீ தேவி மகாத்மியம், லலிதா ஸஹஸ்ர நாமம், ஸௌந்தர்யலஹரி யாவும் தாயின் அருளை, அழகை எண்ணி எண்ணி வியக்கின்றன. பராசக்தியை வழிபட வேண்டுமென்ற எண்ணமே பூர்வ புண்ணியத்தின் பயன் என்பர்.

கண்ணியதுன் புகழ் கற்பதுன்னு மங்க
சிந்து பத்தி

பண்ணிய துன்னிரு பாதம் புயத்திற் பக
லிரவா

நண்ணிய துன்னை நயந்தோரை
வையத்து நான் முன் செய்த

புண்ணிய மேதென்னம் மேபுவி யேழை
யும் பூத்தவளே,
— அபிராமி அந்தாதி

ஸ்ரீ சங்கராச்சாரியார் பிரபஞ்ச சாரத்தில்
''ததா தாம்

தாரமி-த்யாஹு ரோமாத் மேதி பஹுஸ்
ருதா : | தாமேவ

சக்திம் ப்ருவதே ஹ்ரீ - மாத்மேதி
சாபரே ॥ ''

எனக் கூறுகிருர். ஒரே பரம்பொருள் ஓம் என்ற பிரம்ம வித்யா மந்திரத்தாலும், ஹ்ரீம் என்ற வித்யா மந்திரத்தாலும் கூறப்படுகிறது. ஹ்ரீம் என்ற புவனேசுவரி பீஜத்திலிருந்து மஹாகாளி மஹாலக்ஷ்மி, மஹா சரஸ்வதி தோன்றினர்,

தேவியானவள் மதுகைடபர் வதத்திற்குக் காரணமானவள். மகிஷாஸுரமர்த்தனி ரக்தபீஜனை வதைத்தவள். சண்டமுண்டாசுர நிஷூதினி, சும்ப நிசும்பனை வதைத்தவள். சதுர்முக பிரம்மனல் துதிக்கப் பட்டவள். கிருஷ்ணனல் போற்றப்பட்டவள். பார்வதி நாதனல் பூஜிக்கப்பட்டவள்.

## மதுகைடப வதம்

கல்பத்தின் முடிவில் பிரபஞ்சம் ஒரே ஜல மயமாகி விட்டபோது விஷ்ணு ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டு யோக நித்திரையில் ஆழ்ந்தார். அப்பொழுது விஷ்ணுவின் காதினுள்ளழுக்கினின்று தோன்றிய அவர்கள் பிரம்மாவைக் கொல்ல முயன்றனர். அவ்வமயம் பிரம்மா உலகநாயகியைத் துதித்தார். அந்த தாமஸீ தேவியின் உந்துதலில் எழுப்பப்பெற்ற விஷ்ணு, ஐயாயிரம் ஆண்டுகள் போர் புரிந்து மதுகைடபர்களை அழித்தார்.

## மஹிஷாசுர வதம்

முன்னொரு காலத்தில் மஹிஷாசுரன் அசுரர்க்கரசனும், இந்திரன் தேவர்கட்கு அரசனும் இருக்கையில் நூறு வருஷ காலம் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் ஒரு யுத்தம் நிகழ்ந்தது. தேவர்கள் தோற்கடிக்கப்பட்டனர். மஹிஷாசுரன் இந்திர பதவி எய்தினன். தேவர்கள் திரிமூர்த்திகளை அணுகி முறையிட்டனர். ஒவ்வொருவரின் உடலினின்று வெளிப் போந்த ஒளியானது திரண்டு ஒரு பெண்ணுருக் கொண்டது. அவளே தேவி: இந்திராதி தேவர்கள் தந்த ஆயுதங்களுடன் சண்டிகா மகிஷாசுரனை வதஞ் செய்தாள்.

## சண்ட முண்ட வதம்

ஒருமுறை பார்வதியின் சரீரகோசத்தினின்று மங்கள வடிவான அம்பிகை தோன்றினள். சும்ப நிசும்பனின் பணியாட்களான சண்டனும் முண்டனும் இந்த ஸ்திரீயைக் காணப்பெற்றனர். அவர்கள் மூலம் தேவியின் அழகைக் கேட்ட சும்பன் அவளை அடைய எண்ணி அசுரசிரேஷ்டனன சுக்ரீவனைத் தூதனக அனுப்பினன். தேவி அவர்களைப் போருக்கு அழைத்தாள். தூம்ரலோசனனை வதைத்தாள் சண்டமுண்டாசுரர்களை முண்டமாக்கி சண்டிகையிடம் எடுத்துச் சென்றதால் சண்டிகா எனப்பெயர் பெற்ருள்.

## ரக்தபீஜ வதம்

ரக்த பீஜனுடன் போர் புரியும்போது ப்ரம்மாணி வஜ்ராயுதத்தாலும், வைஷ்ணவி

சக்ராயுதத்தாலும்; ஐந்த்ரீ கதையாலும், கௌமாரி சக்தி ஆயுதத்தாலும், வாராஹீ வாளாலும், மகேஸ்வரி திரிசூலத்தாலும் அடித்தனர். ரக்தபீஜன் உடலிருந்து வெளிப்பட்ட ஒவ்வொரு துளி ரத்தமும் ஒவ்வொரு ராக்ஷஸனாக உருவெடுத்தது. சண்டிகை காளியிடம் ரத்த பிந்துக்களினின்று உண்டான மகா அசுரர்களையும், ரத்த பிந்துக்களையும் வாயால் ஏற்றுக் கொள்ளச் சொன்னாள், இவ்விதம் ரக்தபீஜ வதம் நடந்தது.

நிசும்ப வதம்

சண்டிகையுடன் சப்தமாதாக்களும் சேர்ந்து நிசும்பனையும் பிற ராக்ஷஸர்களையும் அழித்தனர்.

சும்ப வதம்

சும்ப வதத்தின்போது பிரம்மாணீ முதலிய தேவிகளெல்லாம் தேவியின் உடலில் புகுந்தனர். அம்பிகை மட்டும் அவனுடன் போர் புரிந்து கொன்றாள்.

இத்தகைய மகிமை பெற்ற அம்பிகை சப்த மாதாக்கள் வடிவில் நமது திருப்புத்தூர் பூமாயி கோயில் என்ற திருக்கோயிலில் எழுந்தருளி இவ்வூரைத் தன் கருணைக் கடாக்ஷத்தில் மூழ்க வைப்பது யாம் செய்த புண்ணியமே. இக் கோயிலின் சரித்திரச் சான்றான விவரங்கள் ஆதாரப் பூர்வமாகக் கிடைக்காவிடினும் ஓரளவு விஷயங்கள் தெரிய வருகின்றன. கி. பி. 1862ல் வனத்தினால் சூழப்பட்டிருந்த இந்தக் கோயில் திருவாதவூர் பேஷ்கார் பார்வையில் இருந்ததாகவும், கருப்பப்பட்டர் என்பவர் அன்றாட பூஜைக்கு நியமிக்கப்பட்டதாகவும் தெரிய வருகிறது.

பூமாயி கோயில் எனப் பொதுவாக வழங்கப்படினும் இங்கு ஸப்தமாதாக்களான 1) ப்ராஹ்மி 2) மாஹேஸ்வரி 3) கௌமாரி 4) வைஷ்ணவீ 5) வாராஹி 6) மஹேந்திரி 7) சண்டிகா என ஏழு தெய்வங்கள் வீற்றிருக்கின்றன.

ப்ராஹ்மி :

பிரம்மாவின் சக்தி ஸ்வரூபம். ஹம்ஸம் பூட்டிய விமானத்தில் உறைபவள். அக்ஷமாலையும், கமண்டலமும் ஏந்தியவள். கூர்ச்சத்தால் தீர்த்தத்தைப் புரோக்ஷிப்பவள்.

மாஹேஸ்வரி :

மகேஸ்வரரின் சக்தி அம்சம். முச்சூலத்தையும், சந்திரனையும், பாம்பையும் தரிப்பவள் விருஷபத்தை வாகனமாகக் கொண்டவள்.

கௌமாரி :

குமரனின் சக்தி அம்சம். மயிலுஞ் சேவலும் சூழப் பெரிய வேலாயுதத்தைத் தரித்தவள்.

வைஷ்ணவீ :

விஷ்ணுவின் சக்தி ஸ்வரூபம். சங்கு, சக்கரம், கதை, வில் ஆகிய சிறந்த ஆயுதங்களை ஏந்தியவள்.

வாராஹி :

ஹரியின் ஒப்புயர்வற்ற யக்ஞ வராஹ வடிவத்தின் சக்தியே வாராஹி. எருமையை வாகனமாய் கொண்டவள், பயங்கரமான பெரிய சக்கரந்தாங்கி தெற்றிப் பல்லில் பூமியைத் தூக்கிக் கொண்டு வராஹ ரூபம் தரித்த மங்கள வடிவினள்.

மஹேந்திரி :

கிரீடந்தரித்து பெரிய வஜ்ராயுதந் தாங்கி ஆயிரங் கண்களுடன் ஜ்வலிக்கும் இந்திர சக்தியே இந்திராணி, ஐராவதத்தை வாகனமாய் உடையவள்.

சாமுண்டி :

தெற்றிப் பல் கொண்ட வாயும், தலைமாலை ஆபரணமும் உடைய சாமுண்டா தேவி. பிரேதத்தை ஆசனமாய்க் கொண்டவள்.

இந்த அம்மனின் மஹிமையை விளக்கக் கர்ணபரம்பரைக் கதை ஒன்று கூறப்படுகிறது. வெகு காலத்திற்கு முன்பு மலம்பட்டி கிராமத்தைச் சேர்ந்த மூன்று திருடர்கள் ஒருநாள் அம்மனின் மேலிருந்த நகையைக் கவர முற்பட்ட போது அவர்கள் கண்கள் குருடாகிப் பிறகு இறந்து போனார்கள். இன்றும் கூட அவர்கள் சந்ததியினர் வருடத்திற்கு ஒரு முறை பூஜை செய்ய வருவதாக பூஜாரிகள் கூறுகின்றனர். இது தவிர திருப்புத்தூர் வாழ் மக்களே தங்கள் அன்றாட வாழ்வில் இந்த அம்மன் புரியும் லீலைகளை அறிந்து மெய்சிலிர்ப்பது தெள்ளத்தெளிவு. பூமாயிக்குச் சித்திரைத் தேய்பிறை பஞ்சமியில் பூத்திருவிழா. அன்று தேவியின் சரஸ்வதி அலங்காரத்தை காணாத கண்ணும் ஒரு கண்ணோ ?

இந்த ஸப்த மாதாக்களின் அருளால் இந்தத் திரும்புத்தூர் என்றும் செழித்து வளர வேண்டுவோமாக!

யாதேவீ ஸர்வ பூதேஷு மாத்ரு ரூபேண
ஸம்ஸ்திதா

நமஸ்தஸ்யை ! நமஸ்தஸ்யை!
நமஸ்தஸ்யை நமோ நம !!

எந்த தேவியானவள் எல்லா உயிர்களிடத்தும் தாய் வருவில் குடியிருக்கின்றாளோ அவளுக்கு நமஸ்காரம்! நமஸ்காரம்! நமஸ்காரம்!



# பழமைப் பாங்கும் புதுமைப் பொலிவும்

முருகன்அடிமை நா. கணபதி, எம். ஏ.,

தண்தமிழ் வளர்க்கும் தென்பாண்டி நன்னாட்டில் "பாண்டி பதினான்கு தலம்" எனப் போற்றப்படும் ஊர்களில் இறை வனப்பும் இயற்கை வனப்பும் கொண்டதோடு வானம் பார்த்துக் காய்ந்தாலும் மானம் காத்து நிற்கும் சிறப்புக்கொண்டது திருப்புத்தூர் முகவை மாவட்டத்தில்.

தெய்வத் திருமுறையாளர்களாகிய அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோரின் திருவடியும் பாவடியும் கிடைத்த சிறப்புப் பெற்றது இவ்வூர். சுந்தரரின் பாடல்கள் கிடைக்கப் பெற்றிலவாயினும் கழறிற்றறிவாரோடு திருப்புத்தூர் வந்தாரென்பது.

"அங்கு வைகிப் பணிந்தருளாற்
போவார் அகன்சோணாட்டரனார்

தங்கும் இடங்கள் வணங்கிப்போய்ப்
பாண்டிநாடு தனைச்சார்ந்து

திங்கள் முடியார் திருப்புத்தூர் இறைஞ்
சிப்போந்து சேண்விளங்கும்

மங்குல் தவழும் மணிமாட மதுரை மூதூர்
வந்தணைந்தார்.

என்ற கழறிற்றறிவார் வரலாற்றால் அறிய வருகிறது. இவ்வடியார்கள் காலத்தே இவ்வூர் சீரும் சிறப்பும் பெற்று மேம்பட்டு இருந்ததெனில் இதன் பழமையினை—வரலாற்றினை—இறைப்பற்றினை—அறிதல் எளிதன்று.

வட ஆற்காடு மாவட்டத்தில் ஒரு திருப்புத்தூரும், தஞ்சை மாவட்டத்தில் மன்னார் குடிக்கும் திருத்துறைப்பூண்டிக்கும் இடைப்பட்ட திருப்புத்தூரும் இருப்பினும் சிறப்புப் பெற்றது முகவையின் பெருமை கூறும் திருப்புத்தூரே! ஏனெனில் இவ்வூரினை அடுத்து திருக்கோட்டியூர், பட்டமங்கலம், பறம்புமலை, பிள்ளையார் பட்டி, குன்றக்குடி யாகிய பக்தி வளம் மிக்க ஊர்கள் அமைந்ததே யாகும்,

தென் சிதம்பரம், புத்தூர், கொன்றைவனம் நவபுரம், கௌரிபுரம், வால்மீகிபுரம் என்ற பெயர்களும் உண்டு இவ்வூர்க்கு. இங்கு எழுந்தருளியிருக்கும் இறைவண் திருப்பெயர் திருத்தளி என்பதாகும். திரு = இலக்குமி, தளி = தங்குமிடம்.

"காசிக்கு அதிகமாம் ஒருமுழம்
காரணம் மிகுந்த புத்தூர்,

கங்கைக்கு ஒருமுழம் அதிகமாம் கமல
சீதளி தடாகம்"

என்னும் நாட்டுப்பாடல் அடிகளும் இவ்வூரின் மேன்மை கூறுகின்றன.

இறைப்பற்றோடு நாட்டுப்பற்றிலும் தனியிடம் பெற்றிருப்பது திருப்புத்தூர் என்பது மருது சகோதரர்களின் வரலாற்றினால் அறியவரும். விடுதலைப் போராட்டத்திற்கும் தியாகி கிட்டு ஐயர் போன்றோரைத் தந்து தன்பங்கில் தனி சிறந்தது திருப்புத்தூர்.

பிராஹ்மி, மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராஹி, மகேந்திரி, சாமுண்டி என அன்னையர் எழுவர் எழுந்தருளியிருக்கும் கோயில் ஒன்றும் உளது. அவைகளில் நடு

நாயகமாக வீற்றிருந்து அருள்மழை பொழியும் வைஷ்ணவி—பூமாயி என இவ்வூர் மக்களால் போற்றப்படுகிருள். (பூ+மா+ஆய்=பூமாயி.) பூவிலிருந்து மக்களைப் புரக்கும் மேன்மையான தாய் என்பர்.

இக்கோயில் சிறிதாயும். பழுதாயும் இருந்ததைக் கண்ட எங்கள் தங்கத்தாயான திருப்புத்தூர் தவப்பயனல் பெற்று எடுத்த கொடைச் சிறப்பும் குணச்சிறப்பும் கொண்டபெரியோரான அருள் மாமணி திருவாளர் நா. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் இறைப் பற்றுக் கொண்டோரையும் சேர்த்துக் கொண்டு திருக்கோயிலை நல்ல கற்றளிக் கோயிலாகத் திருப்பணி செய்வித்து திருப்புத்தூரில் இராஜகோபுரம் அமைந்த திருக்கோயில் இல்லாத குறையினையும், நன்னீராட்டு விழா நடந்ததான வரலாறு இல்லாத நிலையினையும் மாற்றிச் சிறப்புறச் செய்துள்ளார்கள். அவர்கள் இவ்வூர்க்குத்தந்த கல்விக் கொடையே கல்லூரியாகும். அன்னரும் அவர்தம் வழித்தோன்றல்களும் இறைப் பணியிலும் கொடைப் பணியிலும் சிறந்து வண்ணமும் அழகும், மணமும் பெற்ற மலர்கள் போல் நெடு நாள் சீரும் சிறப்பும் பெற்று வாழ எல்லாம் வல்ல இறைவன் திருவடிகளை வணங்குகின்றேன்.

''சீதளி இறைவன் பாதம் சென்னிமேல்
வைப்போர் வாழ்க

சீதளி திருத்தம் மூழ்கும் சிறப்பினேர்
பெருமை வாழ்க

சீதளி தலத்தைச் சூழும் செயலினர்
சிறந்து வாழ்க

சீதளி யிருக்கும் கொன்றைத் திருவனம்
சிறப்ப வாழ்க''



# அபிராமி அந்தாதி

உதிக்கின்ற செங்கதி குச்சித்திலக முணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம்போது மலர்க்கமலே
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக்குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனியபிராமி யென்றன் விழுத்துணையே

நாயகி நான்முகி நாராயணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கியென்
ருயகி யாதி யுடையாள் சரண மரணமக்கே

தனந்தரும் கல்விதருமொரு நாளும் தளர்வறியா
மனந்தருந் தெய்வவடிவந் தருநெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரு நல்லன வெல்லாந்தருமன்ப ரென்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாளபிராமி கடைக்கண்களே

விழிக்கே யருளுண்ட பிராமவல்லிக்கு வேதஞ்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண் டெமக்கவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்று வெம்பாவங்களே செய்துபாழ்நரகக்
குழிக்கே யழுந்துங்கயவர்தம் மோடென்ன கூட்டினியே

# தேவி கவசத்தின் விளக்கம்

1 அம்மைமுன் பக்கம் காக்க
அசலமா மகள்பின் காக்க
வெம்மைசார் நெறிவா ராகி
விரும்பியே காக்க கோட்டை
தம்பிலே துர்க்கை காக்க
சமரினில் காளி காக்க
சும்மைசால் மண்ட பத்தில்
மாதங்கி துனைந்து காக்க

2 சுயம்வர மதனில் தேவி
சௌமிய காக்க சூழும்
வயமுடை அரசர் நாப்பண
மன்னிய பிறவி என்னும்
துயர் தவிர் பவானி காக்க
துன்றுநாற் சந்திக் கண்ணே
மயர்விலாச் சாமுண் டீச்சு
வரிநின்று காக்க காக்க

3 கானகத் தினில்தொல் லோளாம்
காமகா என்னும் தேவி
ஈனம் அற் றிடவே காக்க
விவாதங்கள் எழுந்த காலே
ஆ னவை ணவிதான் காக்க
அடர்தரு பகைஞர் மோதின்
மானமற் றடியில் விழ
வயிரவி காக்க காக்க

4 இருபுறங் களிலும் தேவி
பார்வதி காக்க எங்கும்
தருசிவை ளாம்சிற் சக்தி
தாங்குக ஞாலம் காப்பாள்
வெருவரு விசுவரூபி
மெய்யறிவு இன்பமாகிப்
பெருவிலாது அருள்செய் அன்னை
புவனேசை என்றும் காக்க

# சித்தர் சொன்ன சிவநெறி

ஆரல்வாய் மொழிப் புலவர் *சி. சுப்பையா பிள்ளை*
ஆறுமுகம் பிள்ளை அரசு மேனிலைப் பள்ளி
திருப்புத்தூர்

உலகும் உலகிடை உறையும் பொருளும்
நிலவும் கதிரும் நீள்வா னகமும்
வானில் வாழும் கோளும் மீனும்
ஊனமில் ஐம்பெரும் பூதச் சேர்க்கை ;

ஐந்து

நிலனும் நீரும் நெருப்புங் காற்றும்
அலகில் வெளியும் ஐம்பெரும் பூதம் ;
அரும்பொருள் ஐந்தையும் ஆட்டிப் படைக்கும்
பெரும்பொருள் ஒன்று பரம்பொருள் ஆகும் ;
பைந்தமிழ்ச் செல்வர் பரம்பொருள் தன்னைச்
சிந்தையிற் சிறந்த சிவமெனச் சொல்வர் ;
சிவநெறி யொன்றே செந்நெறி யாமென
உவகை கொள்வார் சைவ ராவர்,
நால்வகைச் சைவம் நாட்டி லுண்டு
நூல்வகை யறிவார் நுண்மை யுணர்வார் ;

நான்கு

சீலம் நோன்பு செறிவே அறிவெனும்
நாலும் சிவநெறி தன்னில் சிறக்கும் ;

சீலம்

கொல்லா நோன்பும் புலாலுண் ணமையும்
எல்லா உயிர்க்கும் இரக்கம் காட்டலும்
இயன்ற வரையில் உதவி செய்தலும்
பயிலும் மொழியில் இனிமை நாட்டலும்
மனத்தி னிடத்து மாசு களைதலும்
நனவில் கனவில் சிவனை நினைதலும்
சிவனுறை கோயில் சென்று வணங்கலும்
சிவையின் அருளைப் பெற்றங் குய்தலும்
சீலம் என்று செப்புவர் மேலோர் ;

நோன்பு

ஆலம் உண்ட நீல கண்டனை
நாளும் நன்மலர் நறுமணம் கொண்டும்
ஆளும் சத்தியின் அடிபணிந் தேத்தியும்
இடைவி டாது தொண்டுகள் செய்து
அடைவில் நிற்பது நோன்பென மொழிப;

செறிவு

நெறிவழி சென்று நேர்மையில் நின்று
தறியிருந் தாற்போல் தம்மை இருத்தி
அடுப்பவை இடிப்பவை யாங்கு வரினும்
தடுப்படு சிவத்தை நாடி யிருந்து
பயிலும் முறையே செறிவென மொழிப;

முத்தி

நயனுடைச் சீலம் நோன்பு அறிவு
கைவந்த பின்னர் கைகூடும் அறிவு
கைகூடும் அறிவே முத்தி நிலையாம்:

அம்மையப்பன்

அம்மை யப்பன் இருக்கும் உண்மை
இம்மை உலகில் இரவும் பகலும்
இருக்கு மாறே இனிது காண்க;

இந்தியா

இருக்கும் இந்த நாவலந் தீவே
சிவவுரு என்று கொள்வார் உண்டு
தவமலி புவியெனத் திகழ்வது இந்நிலம்;
இமயம் சிவனின் முடியாம் என்ருல்
குமரி யவன்றன் அடியாம் என்க;

குமரித் தெய்வம்

அன்னை சத்தியின் அடிபணி வார்க்கே
முன்னைத் தீவினை முடிவுறும் என்றும்
பின்னர் தானே மன்னும் சிவனின்
இன்னருள் வந்தங்கு இணையும் என்றும்,
கண்ட நல்லோர் கன்னி குமரியை
அண்டம் ஆளும் அன்புக் கரசியைச்
சிவனடி பாதம் சிறக்கும் எல்லையில்
தவவுரு வாகச் சமைத்து வைத்தனர்;
அன்னை யன்பே தந்தையை முந்தி
இன்னருள சுரக்கும் என்றனர் போலும்.

அண்டமே பிண்டம்

அண்டம் பற்றிய ஆய்வு வேண்டார்
பிண்டம் பற்றித் தெளிந்து நிற்பார்,
அண்டத் துள்ள ஐம்பெரும் பூதமே
பிண்டத் துள்ளும் இருப்பள காண்க;

உடல்

அண்டம் உலகெனின் பிண்டம் நம்முடல்
கண்டு கொள்க; கருதுக நன்கு;
இந்த உடலுக் கோரிரு வாயில்
வந்த காலதர் ஏழென மொழிப!
ஒன்ப தோட்டை உள்ள உடலில்
நின்ற நிலைக்களன் ஆறெனக் கூறுப;

ஆறு ஆதாரம்

அறுநிலை கடந்தபின் எழுநிலை மாடத்து
உறுபொருள் உண்பான் சிவனைக் காண்பான்;
மூலம் உந்தி மேலாம் வயிறு
சீலம் செய்யும் நெஞ்சு மிடறு
புருவ நடுவில் அமைந்த நெற்றியென
வருவன ஆறும் வாய்த்த அறுநிலை;

ஏழாவது

உச்சித் தொளையே ஏழாம் நிலையென
நச்சி உரைத்தார் நல்லறி வாளர்;

விநாயகன்

ஓம்எனும் வடிவம் மூலம தாகும்
ஆம்அதன் நாயகன் விநாயக னவான்;

பிரமன்

உந்திக் கமலத் திருப்பவன் அயனெனச்
சிந்தித் தறிக சிந்தை மகிழ்க;

அரி

அரன்

அரியின் தங்கல், மேல்வயிறு ஆகும் ;
அரனவன் உறையுள் நெஞ்சக் கோயில் ;
அருமை யாண்டான் தொண்டையுள் நிற்பான்;
புருவ நடுவில் அருளோன் வாழ்வான்.

மூச்சுப் பயிற்சி

முறைமுறை யாக உயிர்ப்புப் பயிற்சி
குறைவற நடப்பின் சிவனருள் தருவான் ;
பதினறு அளவு மூச்சை இழுத்து
பதினறு நான்கை உள்ளே இருத்தி
பதினறு இரண்டை வெளியே விட்டால்
பதினறு அகவைப் பாலன் ஆவீர் ;

திருமூலர்

சிவசிவ என்ருல் நான்கு மாத்திரை
சிவசிவ கூட்டி வேண்டுவ கொள்க ;
திருமூலங் கண்டால் தெளிவு பிறக்கும்,
வருமோர் இன்பம் பேரின்பம் ஆகும் ;

பசுக்கள்

அன்பும் அருளும் பண்பும் பயனும்
என்ற கொள்கை இங்கு வேண்டும் ;
வெறிகொள் ஐம்புலப் பசுக்களை அடக்கும்
நெறியறி வாரே குறியறி வார்கள் ;

சிவனே

சிவன்

சிவனே சிவன் என்றுணர் வார்க்குச்
சிவநெறி செந்நெறி என்பது புலப்படும்,
அகம்புறம் என்ற இரண்டின்
வகைதெரி வார்க்கே வாய்க்கும்இந் நெறியே !



# அம்பாளின் மடிப்பிச்சை

- லெ. சந்தனம்

அந்த வண்டியில் ஒலிபெருக்கி கட்டி இருந்தது. ஆனல் அது சினிமா விளம்பரம் இல்லே. சினிமாப் பாட்டுக்கள் போடப்பட்டன. இடையிடையே விளம்பரம். அந்த விளம்பரம் என்ன என்பது அங்குத்தாயின் குடிசைக்கு எட்ட வில்லே. அந்த விளம்பரத்தை அறிய ஏனே அவளுக்கு ஓர் ஆசை. கதவுக்காகச் சாத்தப் பட்டிருந்த படலே தள்ளிவிட்டு வெளியே வந்தாள். வண்டி குளத்தைத் தாண்டி வள்ளலார் வீட்டைக் கடந்து கொண்டிருந்தது. அங்குமிங்கு மாக ஆண்களும் பெண்களுமாகக் கூடி நின்று பேசினர்கள். அவைகளில் சில :

'எந்தப் புண்ணியவானுக்கு கொடுத்து வைத்ததோ! நல்லா இருக்கட்டும்.'

'யார் முகத்தில் முழிச்சானே, ஐந்து லட்சம் கிடைச்சிருக்கு!'

'அதிட்டக்காரனுக இருந்தா இவங்க ஏன் வண்டியிலே மைக்கை கட்டி ஆளேத் தேடனும்? எவன் வாங்கி எங்கே தொலேச்சானே ?

இப்படிப் பேசிய பேச்சின் சிதறல்களே யெல் லாம் ஒட்டவைத்துப் பார்த்ததில் அவளுக்கு விபரம் புரிந்து விட்டது. அவளும் எட்டு வகுப்பு வரை படித்தவள், அதுவும் அந்தக் காலம்! எப் படிப் புரியாமல் இருக்கும்? நேரே கோவிலுக் குச் சென்ருள். பூசை நேரம். பூமாயி அம்மன் புன்னகையோடு அங்குத்தாயியைப் பார்ப்பது போல இருந்தது. பட்டர் பூஜை காரியங்களே முடித்து அவள் கைகளில் தேங்காய், பழம், பூ கொடுத்தார். கையில் வாங்கிய அவள் பூச்சரத் தைக் கண்களில் ஒற்றி தாலி இல்லாத மஞ்சள் கயிற்றில் சுற்றினுள். அதற்குள் நைவேத்தியத் தின் உருண்டையைக் கொடுத்தார். அது அவளுக்குத் தரும் நித்திய கடன். உயிர் ஊட் டம் தரும் அம்பாள் பிரசாதம். வாங்கியவள் செல்லவில்லே. நின்ருள். வந்த பட்டர் " என்ன அங்கு நிற்கிறே ? " என்ருர்.

" ஒரு விஷயம்,..." தயங்கினுள்

" சும்மா சொல்லு "

" ஒண்ணுமில்லே, பட்டர்! இப்ப லாட்டரி சீட்டைப் பற்றிப் பேசினுங்களே அந்த நம்பர் தெரியுமா ? " பட்டர் சிரித்தார்; பரிதாபமாக பார்த்தார் :

"அங்கு! யாருக்கும் உள்ள ஆசைதான் உனக்கும் வந்திருக்கு ஆனல் அது நமக்கெல் லாம் கிடைக்காது. லெட்சுமி குடியிருக்கிற இடத்திலே தான் தனலெட்சுமியும் சேருவாள். நம்மகிட்டே வருவ தெல்லாம் தரித்திர லெட்சுமி தான். உ...ம்! உன் அசையை நான் ஏன் கெடுக்க வேனும்? அந்த நம்பர் L/S 125792" என்று கூறி விட்டு தட்டோடு பட்டர் சென்று விட்டார். அங்குத்தாயி கோயிலே விட்டு வெளியே வந்தாள். புதிதாகப் பொலிவோடு நிற்கும் ராஜ கோபுரத்தைப் பார்த்தாள். கை தூக்கி வணங்கினுள். அதன் மேலே கருடன் வட்டமிட்டது. கன்னத்தில் போட்டுக் கொண் டாள். அதே சமயம் பூஜைமுடிந்ததும் யாரோ குறும்புக்காரப் பையன் கோவில் மணியை அடிக்க அதற்கொரு கும்பிடு போட்டபடி வேக மாகத்தன் குடிசைக்குச் சென்ருள்.

'என்ன அங்குத்தாயம்மாள்! இந்த சாயந்திர நேரத்தில்? ஏதாவது அம்மாளுக்கு குறைபாடு உண்டா?' என்று கேட்டார் தங்கராஜா. வள்ளலாரின் மூத்த மகன். எல்லோரும் அவரை மூத்தவர் என்று அன்பாக-அருமையாக அழைப்பார்கள்.

''தம்பி நிர்வாகம் என்ருல் குறைபாடு இல்லாத நிர்வாகம்என்று ஊரே சொல்லும்பொழுது கோயில் நிர்வாகத்தில் எந்தக்குறை வரப் போகிறது?'' என்று கூறியபடி சேலைத்தலைப்பை இழுத்துப் பிடித்துக்கொண்டு.

'த...ம்...பி! உங்ககிட்ட ஒரு முக்கியமான விஷயமா பேசனும்'என்று மெதுவாகக்கூறினுள் அங்கு. அதனை உணர்ந்த தர்மராஜா தனது விட்டுக்கு அழைத்துச் சென்ருர். அவர்கள் பின்னுலே இரண்டு டம்ளரில் காபி வந்தது: இதெல்லாம் எதற்கு என்பது போல தர்மராஜாவைப் பார்த்தாள். பார்வையிலே உணர்ந்துவிட்ட ராஜா.

''அம்மா!யார் வந்தாலும் இங்கு நடக்கும் முதல் மரியாதைஇதுதான்...உம். குடியுங்கள்'. என்ருர். காபியைக் குடித்துத் திரும்பிய கண்களுக்கு வள்ளலார் படம் தெரிந்தது. பார்த்துப்பல நாட்களாகி விட்ட துயரத்தில் அவள் கண்களிலே நீர் கசிந்தது. அதனைக் கவனித்த தர்மராஜா ''என்ன பாட்டி,'''' என்ருர். ''ஒண்ணுமில்லே,'' என்று கூறி கண்களைத்துடைத்துக் கொண்டு இருந்தவளுக்கு அச்சமும் நாணமும் கலந்து உறவாடியது. வயதில் அதிகமாக இருந்தாலும் பணிவு அவளை விடவில்லை. மெதுவாக அவரது காதருகில் சென்று ஏதேதோசொன்ருள் — சொல்லிக் கொண்டே இருந்தாள், தர்மராஜாவின் முகம் மலர்ந்தது—புன்னகைத் தேனை உதிர்த்தது. தன் இதழ் திறந்து ''இதுதான் உங்கள் முடிவா,?'' என்ருர்.

''ஆமாம் தம்பி! இன்று மதியத்திலிருந்து நன்கு யோசனை செய்து எடுத்த முடிவு, எல்லாப் பொறுப்பும் நீங்கதான்,''என்ருள் தலை கவிழ்ந்தபடி.

''பெரிய விஷயம்.அதுவும் நீங்க வந்து ...'' என்று முடிப்பதற்குள் அங்குத்தாயம்மாள் முந்திக் கொண்டு

''உங்களை நம்பாமே வேறு யாரை நம்புவது? ஜாதியையும் மதத்தையும் கடந்தவள் அம்பாள் என்பதற்காகத்தான் பூமாயி அம்மனை வேறுபாடின்றி அனைவரும் மலர்க் குவியலில் கண்டு வணங்குகின்றனர். அதைப் போல ஞான ஒளி பெற்ற கண்களோடு அனைவருக்கும் ஆதரவு தந்து போற்றுகிறீர்கள். இராமலட்சுமணர்களை நம்பிய முனிவர்களும் சுக்ரீவ கூட்டமும் அழிந்தா போனுர்கள்? இல்லை கண்ணனையும் பலராமனையும் நம்பிய பாண்டவர்கள் கெட்டழிந்து போனுர்களா? அதைப் போல உங்களையும் இளையவரையும் நம்பியவர்கள் கெட்டதில்லை. இது நான் வழங்கும் தீர்ப்பு'' என்ருள்,

''அதிகமாகப் புகழ்ந்துவிட்டீர்கள். அந்த நம்பிக்கை இருந்தால் போதும். நாளையே முடித்து விடுகிறேன். இப்பொழுது சந்தோஷம் தானே? ''என்று கூறி அங்குத் தாயம்மாளுக்கு விடை கொடுத்தார்.'' சென்றவளைப் பார்த்துக் கொண்டிருந்த தர்மராஜாவின் கண்களிலோ நீர் சுரந்து வழிந்து கொண்டிருந்தது. எத்தனை நேரம் நின்று கொண்டிருந்தாரோ தெரியாது.

''அண்ணு!'' என்ற குரல் கேட்டுத் திரும்பினுர். இளையவர் முத்து வேல் நின்றுகொண்டிருந்தார். அவர் உள்ளம் படபடத்தது. கலக்கத்தையே காணுத கண்களில் நீரைக் கண்டதும் '' என்ன நடந்தது ? எதற்காக கலக்கம்?'' என்று கூறியபடி அருகில் நெருங்கினுர்,

'ஒன்றுமில்லை தம்பி ! ஏழ்மையின் காரணமாக, அவரவர் உருவத்தைக் கண்டு எப்படி எப்படியோ எடைபோடுகிருேம். அதிலும் உயர்வில் பணிவும், பணிவில் கனிவும் கொண்ட ஓர் தெய்விக உள்ளத்தை இப்பொழுது தான் கண்டேன். ஒரு ஏழையின் உள்ளத்தை ஒரு ஏழையால்தான் உணர முடியும் என்பார்கள் ஆனுல் அந்த ஏழைத் தாயின் உள்ளத்தை நான் உணர்கிறேன். அதில் பின்னிக்கிடக்கும் தாய்ப் பாசத்தைக் கண்டு என் நெஞ்சு நெகிழ்கிறது என்ருல் அது நம் சக்திக்கு உட்பட்டதல்ல, அம்பாள் காட்டிய கருணை உள்ளம்—கசிந்துருகும் உள்ளம் '' என்றபடி தன் கண்களைத் துடைத்துக் கொண்டார்,

மஞ்சள் பூசிய முகம், அதனைப் படர்ந்து நிற்கும் நெற்றியில் திரு நீற்றுப் பட்டை. வெண்ணிற மேகத்தூடே எழுந்து வரும் முழு நிலவு போன்ற குங்குமத்திலகம். அன்னை பூமாயிக்குச் சாத்துபடியான மலர்க் கற்றையோடு வட புற வாசலுக்கு வந்தாள் அங்குத்தாயி. திருக்குளத்தில் நீந்தி விளையாடும் குழந்தைகளைக் கண்டாள், மெய்மறந்தாள், நிலைகலங்கினாள். பெருமூச்சு விட்டாள்.

'அம்மா!—தம் பிள்ளைகள் அழைப்பது போன்ற பிரமை. திரும்பினாள்.

'நீங்கள்தானே அங்குத்தாயம்மாள்?' பார்க்காத முகம், பழகாத குரல். முப்பது வயதுள்ள அந்த மனிதர் ஊருக்குப் புதிது. எதிரே நின்றார்.

'நீங்கள் ......'வார்த்தைகள் முடியவில்லை.

'நான் பத்திரிகை நிருபர். தர்மராஜா நேற்று விபரங்கள் அனைத்தும் தொலைபேசியில் கூறினார். அதற்காக வந்தேன். உங்கள் வரலாற்றைச் சொன்னால் எழுதிக்கொள்கிறேன்' என்றார். அங்குத்தாயின் முகத்தில் களிப்போ கவலையோ இல்லை. மௌனமாக மறுபடியும் குளத்தைப் பார்த்தாள். குளித்துக்கொண்டிருந்த பிள்ளைகள் கரையேறி நின்றன. இவள் கண்களிலே நீர்திரண்டு முத்துக்களாக உருவெடுத்து கன்னங்களில் உருண்டு கொண்டிருந்தன.

'அம்மா! உங்களைப் புண்படுத்துவதாக இருந்தால் வேண்டாம்' என்று அவள் சிந்தனையைத் தம் பக்கம் திருப்பினார் நிருபர். 'அதெல்லாம் ஒன்றுமில்லை என்றபடி கண்களை துடைத்துக் கொண்டு 'என் கதை இந்தப் பூமாயி அம்மனுக்குத் தெரிந்தாலும் அவள் முன்னிலையில் சொன்னால்தான் எனக்கு நிறைவு ஏற்படும். வாருங்கள்' என்று கூறியபடி கோவிலுக்குள் சென்று அன்னையின் சன்னதியில் அமர்ந்தார்கள்

'நான் பிறந்தது சிறிய குடும்பமாக இருந்தாலும் வாழ்க்கைப்பட்டது பெரிய குடும்பம். உணவுக்கும் உடைக்கும் தட்டுப்பாடில்லாத விவசாயக் குடும்பம். என் கணவர் அதிகம் படிக்காவிட்டாலும் என்னைவிட மூன்று வகுப்புகள் அதிகம் படித்தவர். நல்லது கெட்டது என்ற பாகுபாடு இல்லாமல் எல்லாப் புத்தகங்களும் படிப்பார். அதிலும் தமிழ் இலக்கியம் இலக்கிய கூட்டம் என்றால் அவருக்குத் தேன் சுவைதான். அதனால்தான் என்னவோ கற்றபடி நடக்க எண்ணி, எண்ணியபடி நம்பிக்கை, நாணயம், நேர்மையோடு வாழ்ந்தவர். நீடித்து வாழத்துடிப்பவர். அவருக்கென்ற இரண்டொரு நண்பர்களைத்தவிர மற்றவர் யாரோடும் பழகாமல், வீடுண்டு, வயல் உண்டு என்று இருப்பாரே தவிர ஊர் விவகாரங்களைக் காதுகளில் போட்டுக்கொள்ளமாட்டார். எங்களின் வாழ்க்கைச் சோலையிலே பூத்த மலர் மூன்று. மூன்றும் மும்மணிகள். மூன்றாவது மணியின் உதய காலத்தில்தான் எங்களுக்கு சோதனை ஏற்பட்டது. குடும்பத்திலே புயல் வீசத்தொடங்கியது. சுழன்று சுழன்று எங்களைச் சுற்றியடித்தது. கலங்கினோம்! கண்ணீர் விட்டோம்! துடுப்பின்றிப் படகு தத்தளித்தது. கரை காண முடியாது துவண்டு துவண்டு துடிதுடித்தோம். உற்றார் உறவினர் உதவ முன்வரவில்லை. பந்துக்கள் பரிதாபப்படவில்லை என் கணவருக்கு உடன்பிறந்தார்கள் உண்டு. அவர்கள்தான் உடன்பிறந்தே கொல்லும் வியாதியாயிற்றே! எங்கோ பிறந்து வளர்ந்து மாமலை மருந்தாக அவரின் நண்பர்கள் உதவினர்! உறுதுணை புரிந்தனர். காலம் என்பது பொல்லாதது' மனிதனை வாழவைப்பதும் வாட்டி வதைப்பதும் அதற்கு விளையாட்டு. பொழுதுபோக்கு! அதனால்தான் விதி முடிவுத் தெய்வத்தின் ஈர்ப்புக்கு எனது மாமனார் ஆளானார். இப்பொழுதுதான் துடுப்பின்றித் தத்தளித்த படகில் கொந்தளிக்கும் நீரலைகள் புகுந்தன! பாகப் பிரிவினை என்ற பெயரால் எங்களைச் சூனியமாக்கி பொய்—பித்தலாட்டம்—மோசடி—வஞ்சகம் என்ற நாற்பெருஞ் சேனைகளால் ஓட, ஓட விரட்டினார்கள், ஒண்டுவதற்கு இடமில்லாமல் ஓடினோம், ஒதுங்குவதற்கு இடமில்லாமல் ஓடினோம்! பஞ்சபாண்டவர்களைப் போல என் கணவரும் மூன்று பிள்ளைகளும் தவித்தோம், தடுமாறினோம்! பஞ்சையாக இருந்த போதும், பராரியாகத் திரிந்த போதும் நெஞ்சைத்திடமாக்கி கூலி வேலைகள் செய்தேன்! கூழ் சமைத்துப் போட்டேன்! ஆனால்...ஆனால்....'' என்று விக்கினாள் அங்குத்தாய்,

'என்ன நடந்தது?' என்று வேதனையோடு கேட்டார் திருபர்.

'திக்பிரமை பிடித்தவர் போலிருந்த என் கணவர் திடீர் என காணமல் போய்விட்டார்',

'என் உங்கள் குடும்பத்தில் யாரும் தேட முயற்சி செய்யவில்லையா?'

'ஒட்டுறவு இருந்தால்தானே செய்வார்கள்? வெட்டி வீழ்த்திய மரத்தில் பச்சை துளிரக் கூடாது என்று நினைப்பவர்கள்தானே? நான் தேடி இருக்கவேண்டும். அதை நான் செய்ய வில்லை. செய்திருந்தால் எனது மூன்று இளஞ் சிட்டும் அவரின் உடன் பிறந்தாரின் கழுகுக் கண்களுக்கு ஆளாகி கோர நகங்களால் அழிந்து அழிந்து கிழிக்கப்பட்டிருக்கும். என் குலவிளக்கு வாரிசற்ற வெறுந்திரியாக்கப்பட்டிருக்கும். இது நாள்வரை என் கணவரை யாரும் கண்டதாக இல்லை. ஆனுல் அவர் விட்டுச் சென்ற இந்தக் கயிற்றில் மஞ்சளையும், குங்குமத்தையும் இழக்கா மல், பூவையும் சூடிக்கொண்டிருக்கிறேன்.'

'பிறகு...?'

'' அன்று வெள்ளிக்கிழமை பல நாட்களாக பலகாரம் காணுத என் பிள்ளைகளுக்காக சோள அடை தட்டிக் கொண்டிருந்தேன். பிள்ளைகள் குளிக்கச் சென்றிருந்தார்கள். அடுத்த விட்டுப் பையன் ஓடோடி வந்தவன் ''உங்கள் பிள்ளை கள் குளக்கரையில் பணத்தை எடுத்து விட்ட தாகக் கூறி அடிக்கிறர்கள்'' என்று சொன் ஞன். எரிந்து கொண்டிருந்த அடுப்பை அப் படியே போட்டு விட்டு ஓடினேன். ஒரே கூட்டம் மூவரும் அழுது கொண்டு இருந்தனர். அவர் கள் குற்றம் செய்திருந்தாலும் பெற்ற பிள்ளை கள் அல்லவா? அடிக்க விடாமல் தடுத்தேன். எழ்மை என்பதற்காக எதை வேண்டுமானலும் சொல்லலாம் என்று சமுதாயச் சட்டம் இருக்கும் பொழுது என்னைப் போன்றவர்கள் சொல்லை எந்த நியாயமான மனிதர்களும் எப்படி ஏற்றுக் கொள்வார்கள்? நான் அதைக் கூடப் பெரிதாக நினைக்கவில்லை. பிள்ளைகள் செய்த குற்றத் திற்காகத் தகப்பனையும் சேர்த்துப் பேசும் பேச்சை என்னல் பொறுத்துக் கொள்ள முடிய வில்லை. ஆத்திரம் பொங்கியது. அந்த ஆத் திரம் என் பிள்ளைகள் மேல் சாடியது. நையப் புடைத்தேன். வீட்டை விட்டேவிரட்டி விட் டேன். அதே நேரத்தில் தீ அடுப்பில் மூண்ட நெருப்பால் என் குடிசை கருகிச் சாம்பலானது.

அப்பொழுதுதான் பணத்தைப் பறி கொடுத்த அந்த நல்ல மனிதர் என்னிடம் வந்து '' அம்மா! என்னை மன்னித்து விடுங்கள். தங் கள் பிள்ளைகளைத் தவிர வேறு யாரும் இல்லாத தால் இந்த விபரீதம் ஏற்பட்டு விட்டது. நான் குளித்துக் கொண்டிருக்கும்பொழுது என் மகன் தான் எடுத்துக் கொண்டு கடைக்குப் போய் விட்டான். என்னை மன்னித்தேன் என்று சொல்லி, இந்த ஐந்நூறை வாங்கிக் கொள் ளுங்கள்,'' என்று பணத்தை நீட்டினுர், அவரை ஏறிட்டுப் பார்த்தேன். எனது பார்வை அவருக்கு எப்படித் தெரிந்ததோ, அவர் முக மெல்லாம் வியர்த்துக் கொட்டியது. '' உங்கள் பணம் எனது குடிசையைக் கட்டும். ஆனுல் என் மகன் திருடியதாக ஊர் சிரிக்கக்கூறி னீர்களே, அந்த ஒவ்வொரு சொல்லும் உடைந்து போன என் மனதைச் சேர்த்துவைக் காது! பாவத்தை பணத்தால் மூடி மறைக்கும் கூட்டத்திலே நீங்களும் ஒருவர். உங்கள் நிழல் பட்டாலே பாவம்!'' என்று கூறியபடி திரும்பினேன். தர்ம ராஜா நின்று கொண்டிருந்தார். 'தம்பி! அவருக்கு எல்லோரும் இருந்தும் அனுதை. நான் இல்லாமலே அநாதை! எங்க வாழ்க்கை இப்படியா இருக்கவேண்டும்? கணவனை இழந்து பெற்ற பிள்ளைகளை இழந்து தவியாய் தவிக் கிறேன். இந்த பூமாயிக்குக்கூட கண் இல்லையா தம்பி? நான் என்ன செய்யப்போகிறேன்.'

'அங்கம்மா! அக்கிரமக்காரர்கள் அன்றே கொல்வார்கள். அவர்களைத் தெய்வம் நின்று கொல்லும். நீங்க எங்கேயும் போகவேண்டாம். உங்ககூட பிறந்தவன் நான். என் விடு இருக் கிறது. அதுவே உங்கள் விடு' என்ருர். ஆனுல் அவர் வீடு சென்று இருப்பது எனக்குப் பிடிக்க வில்லை. என் கணவர் அடிக்கடி 'இப்படித்தான் வாழவேண்டும். எப்படியும் வாழலாம் என்று நினைப்பது பலஹீனம், அவமானத்திற்கு அஸ்தி வாரம்' என்பார். அதனை மனதிற்கொண்டு மறுத்தேன். எவ்வளவோ கூறியும் நான் ஏற்க

வில்லே. அதன்பிறகு தர்மராஜா எனக்கோர் குடிசை கட்டிக்கொடுத்தார். அம்பாள் உண்ட பிறகு கொடுக்கப்படும் நைவேத்தியம்தான் என் வயிற்றைக் காப்பாற்றுகிறது. தீ பா வ ளி, பொங்கலுக்குத் தவருது த ர் ம ரா சா சேலே கொடுப்பார்.

பூச்சொரிதல் விழா நடந்த மறு தினம் காலே எப்பொழுதும் போல் அம்மன் சன்னதியைப் பெருக்கிக் கொண்டிருந்தேன். அதிலே பத்து ரூபாய் நோட்டு மடிப்பாக கிடந்தது. பிரித்துப் பார்த்தேன். அதிலே ஒகு லாட்டரி சீட்டு இருந்தது. சீட்டை மட்டும் எடுத்துக் கொண்டு பணத்தை உண்டியலில் போட்டு விட்டேன். அந்த அம்மன் போட்ட பிச்சை தான் ஐந்து லட்சம். எனக்கு வேண்டியது பணம் அல்ல! என் கணவர்—எனது பிள்ளேகள்—அவர்களே வேண்டித்தான் பூமாயிஅம்மனிடம் தினம் மடிப் பிச்சை ஏந்துகிறேன்.'' என்று அம்பாளேப் பார்த்தாள்.

''துன்பப்பட்டதற்குப் பலனே தாயே உங் களுக்குக் கொடுத்து விட்டாள். நிச்சயம் உங் கள் கணவரும் பிள்ளேகளும் வந்து விடுவார் கள். அது சரி, இந்தப் பணத்தை நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்ருர் நிருபர். அங்குத் தாயம்மாள் நிமிர்ந்து அதரங் களுக்கிடையே கோடிட்டாள்.

''என்ன செய்வது ? நாங்கள் ரொம்ப ரொம்ப துயரம் அடைந்தாய் விட்டது. என் பிள்ளேகளாவது நல்லாவாழட்டும். அவர்கள் மூவருக்கும் மூன்று லட்சம் போக இரண்டு லட் சம் மீதம் இருக்கிறது, இந்த ஊரிலே படிக்கிற வயசிலே கூலிவேலே பார்க்கிற பிள்ளேகளே நினேக்கும் பொழுது வேதனேயாக இருக்கிறது. அதனுல் பூமாயி அம்மன் பேரிலே ஓர் அனுதை இல்லம் திறக்கும்படி சொல்லி, தர்மராஜாவை வைத்து எழுதிப்பதிவு செய்தாகி விட்டது. அவர் வாழ்க! அவர் குடும்பம் பல்லாண்டு வாழ்க!. இதுதான் என் கதை.''

'' அம்மா! உங்க கதை நிச்சயம் பத்திரிகை யிலே வரும். அதைப் பார்த்த உங்கள் கணவ ரும், பிள்ளேகளும் வந்து சந்தோஷமா இருப் பீர்கள். நான் வருகிறேன் '' என்று புறப்பட் டார் நிருபர்.

''எங்கே அவசரம்? இதோ ஆராதனே நடக் கப் போகிறது. அம்மனேக் கண் குளிர தரிசனம் செய்து விட்டுப் போகலாம்.'' அவரும் நின்ருர் ஆராதனே நடந்தது. மணியும் ஒலித்தது.



# நினைப்பது நடக்கும்

ம. தியாகராஜன், தென்மாப்பட்டு.

உலகில் தெய்வங்கள் உண்டு என்றும், இல்லை என்றும் வாதாடும் இக்கலியுகத்தில் பேசக்கூடிய தெய்வங்களை இன்று நாம் பார்க்கின்றோம், பார்க்கப்போகின்றோம்

உலகத்தில் சக்தி இல்லாமல் எதுவுமே நடைபெறுவதில்லை. கோழையானையும், வீரனையும், சக்திதான் ஆட்டிப்படைக்கின்றது. அந்த சக்தி நம்பியவர்களுக்குப் பேசியே தீருகிறது.

பண்டைக் காலத்தில் தெய்வநீதி, தர்மநீதி படைத்த மன்னர்களிடத்து, தெய்வங்கள் பேசின. பேசியதின் நிமித்தம், எத்தனையோ நூற்றாண்டு களுக்கு முன் கட்டப்பட்ட தேவாலயங்கள், நம்மை எல்லாம் பரவசப்படுத்திக் கொண்டிருக் கின்றன.

ஒவ்வொரு மனிதனுக்கும், முக்கிய தேவை தெய்வபக்தியும், தேசபக்தியும். நாம் தெய்வங் களைக் கொண்டாடுவதிலும், நேசிப்பதின் மூலமே நம் வாழ்க்கை முறை வெற்றியடைந்து நினைப்பது நடக்கின்றது.

காஞ்சி முனிவர் கூறுவதுபோல் "உள்ளூரில் குடிகொண்டிருக்கும் தெய்வங்களைத்தான் நாம் முதலில போற்றிப் புகழ்ந்து வழிபாடு செய்ய வேண்டும். அப்படிச் செய்வதனால் ஊரும், மக்களும் சுபிட்சநிலை அடைகின்றனர்" அது போல, நாம் தென்திசைக் காவல் தெய்வம் ஸ்ரீ பூமாயி அம்பாளை வழிபாடு செய்தால் நினைப்பது நடக்கும்.

இன்றைய நேரத்தில் நம் தென்திசைக் காவல் தெய்வம் ஸ்ரீ பூமாயி அம்பாள் அருள் கண்ணும், ஞானக்கண்ணும் திறந்துவிட்டாள். இனி ஊருக்கும், ஊரில் உள்ள மக்களுக்கும் வழி பிறந்துவிட்டது. இனி நினைப்பது எல்லாம் நடக்கும். அது பேசும் தெய்வம் ஆகிவிட்டது. தர்மசிந்தனை கொண்ட வள்ளல் குடும்பத்துக்கு ஆத்மாவாகச் செயல்பட்டுவிட்டது.

உமையவள் சிரிக்கத் தொடங்கிவிட்டாள். துன்பமான சூழ்நிலை எல்லோருக்கும் ஏற்படும். இது இயற்கை வெளி நோயை மருத்துவர் குணம் செய்வார். உள்ள நோயை அம்பாள் சிரித்த முகத்தோடு சீர்செய்யத் தொடங்கி விட்டாள். இக்கருத்தை ஏற்றுக்கொண்டவர் களும், ஏற்றுக் கொள்ளாதவர்களும் ஒன்றை நம்பித்தான் ஆகவேண்டும். அதுதான் நமக்கு தெரியாத உருவம் இல்லாத ஆத்மசக்தி. இந்த சக்தியைத்தான், பரமேஸ்வரனும், உமாமகேஸ் வரியும், ஒருவர் உடலில் பாதிபாதி நின்று நர்த்தனம் ஆடி உலகத்தைக் காப்பாற்றி வருகிறார்கள். தெளிவான சிந்தனையோடு வழி பட்டால், நினைப்பது நடக்கும்.

உமாமகேஸ்வரியின் பல பெயர் கொண்ட சக்தியின் வடிவமான, ஸ்ரீ பூமாயி அம்பாளுக்கு, ஒளி கொடுத்து வழிகாட்டும் இதய தெய்வம் ஸ்ரீ பூமாயி அம்பாளுக்கு, புனித நீராட்டு விழா நடக்கின்றது. ஒளி தெரிகிறது; வழி கிடைத்து விட்டது. இனி நினைப்பது நடக்கும்.

உமா மகேஸ்வரியின் உடல் கொண்ட ஸ்ரீ பூமாயி அம்பாளின் திருக்கோவில் திருப்பணி செய்து முடிக்க அரும்பாடுபட்ட வள்ளல் திரு. ஆறுமுகம்பிள்ளை குடும்பத்தாருக்கு தஞ்சையிலே பிரகதீஸ்வரர் ஆலயம் கட்டிய ராஜராஜ சோழனின் பெருமை கிடைத்துவிட்டது.

இரவு பகல் கண் துஞ்சாமல், அம்பாளின் ஆலயத்தின் மேல் ஒளிக்கண் வீச, வள்ளல் திரு. ஆறுமுகம்பிள்ளையின் திருக்குமாரர்கள் திரு. நாகராஜனும் திரு. தங்கவேல் அவர்களும், எடுத்து முடித்த முயற்சி ஏழேழு தலைமுறைக்கும், அழியாது அசையாது. இத்திருப்பணி செய்ததன் மூலம் எல்லோரும் எல்லாமும் பெற அம்பாள் வழிகாட்டி விட்டாள்.

தண்ணீரே இல்லாமல் தடுமாறும் திருப்பத்தூர் நகரத்தில், அம்பாளுக்குத் திருநீராட்ட கிணற்றில் ஊறிய தண்ணீரை எடுத்துஊருணி நிறையச்செய்து, அம்பாளின் சன்னதிக்கு நேரே பொற்றாமரைக் குளமாகக் காட்சி அளிக்கப்பெறும் பணம் செலவு செய்து, அம்பாளின் இதயம் குளிரச்செய்த வள்ளல் திரு. ஆறுமுகம்பிள்ளை குடும்பத்தாருக்கு திருப்பத்தூர், அதனை சார்ந்த அத்தனை பகுதி ஆத்மாக்களும் நன்றிசொல்ல,அவர்களுக்குநினைப்பதுநடக்கும். பயன்பெறும் அனைவருக்கும் நினைப்பது நடக்கும்.

இத்திருப்பணி செய்ததினால், உமா மகேஸ்வரியின் திருவருள் வள்ளல் குடும்பத்தாருக்கும், ஒத்துழைத்த மக்களுக்கும் வாழ வழிகாட்டி ஒளி காட்டிவிட்டாள். இனி அம்பாள் எல்லா தருணத்திலும் வழித்துணை புரிவாள்; வழித்துணை வருவாள். இனி நினைப்பது நடக்கும்.

ஆதிசங்கரர் அம்பாளுக்கு அளித்த ஸ்தோத்திரமும், அம்பாளின் கருணைபெற கவியரசர் கண்ணதாசன் எழுதிய கவிதையும் தந்திருக்கின்றேன். படித்து அம்பாளின் அருளை பெற்று நினைப்பது நடக்கும்.

அங்கம்ஹரே: புளக பூஷனம்
ஆச்ரயந்தி
ப்ருங்காங்கனேவே முகுளாபரணம்
தமாலம்
அங்கீக்ருதாகில விபூதி :
அபாங்கலீலா
மாங்கள்யதாஸ்து மம மங்கள
தேவதாயா :

இத்தோத்திரத்தை கன்னித் தமிழில் காவியமாக்கிய கவியரசின் கவிதை :

மாலவன் மார்பின் நிற்கும்
மங்கலக் கமலச் செல்வி !
மரகத மலரில் மொய்க்கும்
மாணிக்கச் சுரும்பு போன்றாய்
நீலமா மேகம் போல
நிற்கின்ற திருமா லுந்தன்
நேயத்தால் மெய்சி லிர்த்து
நிகரிலாச் செல்வம் கொண்டான்
மாலவன் மீது வைத்த
மாயப் பொன் விழிஇ ரண்டை
மாதுநீ என்னிடத்தில்
வைத்தனை என்றால் நானும்
காலமா கடலில் உந்தன்
கருணையால் செல்வம் பெற்று
கண்ணிறை வாழ்வு கொள்வேன்
கண் வைப்பாய் கமலத்தாயே !

திருக்குடமுழுக்கு நீராட்டில் எல்லோரும் அம்பாளின் அருள்பெற்று, சீரும் சிறப்பாய் வாழ, நினைப்பது நடக்க, நமக்கு அருள்புரியத் தொடங்கி விட்டாள் ஸ்ரீ பூமாயி அம்பாள். எல்லாம் நலமாகும்.



# "குடியும்" "கோயிலும்"

தங்கம்

''கொதித்துப் பொங்கும் ஸுராபானத்தை குடிகாரனின் தொண்டையிலே ஊற்றி. அவனைக் கொல்லவேண்டும்'' ''அந்தணன் கள் குடித்தானாகில் அவனுடைய நெற்றியில் கள்ளு மொந்தைபோல் நெருப்பினால் சுட்டு, வடு உண்டாக்கி அவனைச் சமூக பிரஷ்டம் செய்ய வேண்டும்.'' ''கொலை, கொள்ளை ஆகியவற்றை விட கட்குடி மிகவும் பயங்கர பாவமாகக் கருதப்படுவதால், குடிகாரனுக்கு ஞாலம் நடுங்கும் வகையில் தண்டனை வழங்கப்பட வேண்டும்.'' -மதுவின் பயங்கரத்தை. அதன் அபாயத்தை கருத்திற் கொண்டு அன்றே மனு நீதி போன்ற தரும சாஸ்திரங்களால் பரிந்துரை செய்யப்பட்ட ஆலோசனைகள் ஒருவனுடைய ஆன்ம நலனைப் பாதிக்கும் வகையில் கட்குடி திகழ்கின்றது. பலதீச்செயல்களுக்கு வழிகாட்டியாக மதுவிளங்குகிறது. இருப்பவனையும் இல்லாதவனையும், கற்றவனையும் கல்லாதவனையும் சரிசமமாக்கும் பெருமை ஏழ்மைக்கு மட்டுமின்றி மதுவுக்கும் உண்டு. ஏழ்மை, அவனுக்கு அநுபவம் தந்து அவனைப் பண்படுத்தவும் செய்யலாம். ஆனால் மதுப்பழக்கம் மனிதனை என்றென்றும் சமுதாயத்தில் தலை தூக்காதபடி செய்துவிடும்.

கள்ளுண்ணாமைக்கு ஒரு தனி அதிகாரமே எழுதிப் போன வள்ளுவன் ''உண்ணற்க கள்ளை உணில் உண்க சான்றோரால் எண்ணப்பட வேண்டாதார்'' என்று குடியின் இழிவை நயம்படக் குறிப்பிடுகின்றார். மதுவினால் அறிவு மயங்க அதனால் பல தீச்செயல்கள், பெண்மோகம் முதலியன உண்டாக கற்புநிலை கெடுகிறது; பொருள் கரைகிறது; கற்ற கல்வியின் பெருமை அழிகின்றது; அம்புப்படுக்கையில் பீஷ்மர் தருமனுக்குக் கூறும் அறிவுரை நினைத்தற்குரியது. ''மக்களிடையே நன்னடத்தையும், கற்பும் நிலவ வேண்டுமாயின் மதுவை விலக்கியே ஆக வேண்டும். இல்லாவிடில் உலகில் சத்தியமும் தருமமும் அழியும்; பொறுப்புணர்ச்சி மறையும்.''

''நாலு வேதங்களை ஒரு தட்டிலும். பிரம்மசரியத்தைமறுதட்டிலும்வைத்தால் துலாக்கோல் சமனடைகாட்டும். அது போன்று ஸகல பாவங்களை ஒரு தட்டிலும் கட்குடியை மறு தட்டிலும் வைத்தால் எடை சமமாக விளங்கும்'' இவ்வாறு ஒரு வடமொழி ஸ்லோகம் எடுத்துரைக்கிறது.

மனத்தடுமாற்றங்களுக்கு மூல காரணமாக மதுப்பழக்கம் விளங்குகிறது. ஆகையால்தான் மேலை நாடுகளில் கொலைகள், கற்பழிப்புகள், விவாகரத்துக்கள் போன்ற உணர்ச்சி வசப்பட்டு திகழும் குற்றங்கள் மலிந்து காணப்படுகின்றன. இப்போது நம் நாட்டிலும் இவை அன்றாட நிகழ்ச்சிகளாக இருக்கின்றன.

இந்திய மண்ணின் சிறப்பு அதன் சமய வாழ்வில்தான் அடங்கியுள்ளது. சமயக் கோட்பாடுகளையேதன் சமூக கோட்பாடுகளாகக் கொண்டு விளங்கும் புண்ணிய பாரதத்தின் கலாசார நிலையங்களாக அங்குத் திகழும் யாத்திரைத் தலங்கள் விளங்குகின்றன. உலக ஆன்மிக வாழ்வுக்கு வழிகாட்டியாக இலக்கியச் சிறப்பும், சரித்திரப் பெருமையும் கொண்ட பல சமயஞ்சார்ந்த கோயில்கள் தமிழ்நாட்டில் அமைந்துள்ளன. இக்கோயில்களுக்கு, அவை அமைந்துள்ள ஸ்தலங்களுக்கு ஆண்டு தோறும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து பக்தர்கள் வருகை புரிகின்றனர். அவ்வாறு வரும் யாத்திரிகர்களில் இளைஞரும், நடுவயதினரும் பெரும் பங்கு உள்ளனர். அவர்களைக் கவரும் விதத்தில், அவர்களை மயக்கும் விதத்தில் யாத்திரைத் தலங்களிலும் மதுபானக் கடைகள்! ஆகவே மதுவுக்கு ஆட்படுதற்குரிய வாய்ப்பு அங்கு உண்டாகிவிடுகின்றது, எனவே மனதைச் சஞ்சலப்படுத்தும் மதுவினை மாநில அளவில் விலக்க முடியாமல் போய்விட்டதென முடிவு செய்து தமிழ்நாடு முழுவதும் புதுப்புது கடைகள் தோன்றியிருக்கும் இந்நேரத்தில், ஆன்மநிலை உயர வழிவகுக்கும் யாத்திரை ஸ்தலங்களிலாவதுமது விலக்கினை தீவிரப்படுத்த முன்வரவேண்டும். கட்குடியர்களைத் திருத்த முடியா விட்டாலும், புதிய பத்து கட்குடியர்களை உற்பத்தி பண்ணாதிருந்தால் அதுவே வெற்றி.

# ஆனந்த தாண்டவம்

ஜகன்மோகன் சரஸ்வதி

பரம்பொருள் சிவ பெருமான் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து செயல்களையும் எப்போதும் செய்து கொண்டேயிருக்கிறுர். இந்த ஐந்து செயல் களையும் ஒருங்கே காட்டுகின்ற தாண்டவமே ஆனந்த தாண்டவம், நாதாந்த நடனம். இந்த ஆனந்த தாண்டவத்தை சிவபெருமான் தில்லைப் பொன்னம்பலத்திலே பதஞ்சலி, வியாக்கிர பாதர் ஆகிய முனிவர்கள் வேண்டியபடி அவர் கள் காண்பதற்காக ஆடி அருளினர்.

மார்கழி மாதம் திருவாதிரை நன்னளில் இந்தத் தாண்டவத்தைக் காண்பவர்க்குப் பெரும் பேறு கிட்டும் என்பது உறுதியென சான்ருேர் கூறுவர். தமிழ்நாட்டிலே ஒவ்வொரு சிவன் கோயிலி லும் நடராஜர் திருவுருவத்தை காணலாம் மார்கழி மாதம் திருவாதிரை நாளில் தில்லைப் பொன்னம்பலத்தில் மட்டுமல்ல ஏனைய சிவாலயங்கள் யாவற்றிலும் அபிஷேக ஆராதனைகள் நடைபெறுவதைத் தொன்று தொட்டுச் செய்து வருகின்றனர். தில்லையிலே பொன்னம்பலம். மதுரையிலே வெள்ளி அம் பலம். திருநெல்வேலியிலே; குற்ருலத்திலே என்று ஒவ்வொரு புனித ஊரிலும் ஒரு அம்பலக் காட்சியருளும் நடனசபாபதி திரு உத்தரகோச மங்கையிலும் மரகதத்தில் கடைந்தெடுத்த மாணிக்க நடராஜராகக் காட்சியருளுகிறுர். இங்கே மரகத வடிவாய் அமைந்திருக்கும் ஸ்ரீ நடராஜரே பதஞ்சலி வியாக்கிரபாதருக்கு ஆதியில் இத்தலத்தில் நடனக்காட்சி நல்கியபடி யால் ''அறையிலாடி அம்பலத்திலாடினன்'' என்பது வழக்கு. அதனலேயே இத்தலம் ஆதி சிதம்பரமாயிற்று,

1971 டிசம்பர் மாதம் 31ம் நாள் இரவுதான் நான் முதன் முதலாக இப்புனித அபிஷேகத்தை யும் மறுநாள் விஷ்வ வேளையில் ஆராதனையை யும் கண்டு பேறு பெற்றவனனேன். சுமார் மூன்று மணி நேரம் சாஸ்திரோக்தமாக செய்யப் பட வேண்டிய அபிஷேகங்கள் பலவும் நடக்க, பால்அபிஷேகம் பாற்கடலேஅங்குதோன்றினற் போல் பெருகி ஓடக்கண்டேன். அந்த மூன்று மணி நேரமும், அதன்பின் அம்பலவாணனுக்கு சந்தனக்காப்பும் அலங்காரமும் நடந்து விஷ்வ வேளையில் ஆராதனையும் நடந்த பிற்பகுதி 3 மணி நேரமும் என் பக்கத்தே ஒரு பெரியவர் தன்னை மறந்து அசைவு சிறிதுமின்றி அபிஷேக காட்சியைப் பருகியும், திரை போடப்பட்டபின் ஈசன் தியானத்திலும் ஆராதனையின்போது வீடு பெற்றேன் என்ற களிப்புடனும் ஐயனுக்கு அஞ்சலி செலுத்திக் கொண்டு சந்நிதியிலிருந்து வெளிப்போந்தார். அவரே திருப்புத்தூர் திருத்தளியான் தந்த செல்வம் அருள்மாமணி ஸ்ரீ. நா. ஆறுமுகம் பிள்ளையென்றும் நான் அன்று கண்டு பேறு பெற்ற அபிஷேகக் காட்சி அன்னவர் ஒவ்வோர் ஆண்டு மார்கழித் திரு வாதிரை நாளிலும் ஆதி சிதம்பரமான திரு உத்திரகோசமங்கை மரகத நடராஜருக்குச் செய்து வரும் அறக்கட்டளை யென்றும் தெரிந்து கொண்டேன். ஆண்டுகள் பத்து அதன் பின் ஓடி மறைந்து விட்டன. இத்தப் பத்து ஆண்டு களிலே ஒரு ஆண்டு நீங்கலாக மற்ற 9 மார்கழி திருவாதிரையிலும் இந்தப் புனித அபிஷேக ஆராதனைகளை திரு உத்திரகோச மங்கையில் கண்டு பேறு பெறும் வாய்ப்பினை, அன்று அவர் பக்கத்திலே நான் இடம் பெற்று உட்கார்ந் திருந்த காரணத்தால் ஆடவல்ல நாயகர் அருள் புரிந்தார்போலும். திருப்புத்தூரிலும்.

ஸ்ரீ ,திருத்தளிநாதர் ஆலயத்தில் மார்கழி திருவாதிரை நடராஜர் அபிஷேக ஆராதனைகள் அவருடைய கட்டளையாகவே நடைபெற்று வருவதாகவும் காலப் போக்கில் தெரிந்து கொண்டேன்.

அது மட்டுமல்ல ஆல வாயில் அங்கயற் கண்ணி ஆலயத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் அன்னபிஷேகம் பிரதி ஆண்டும் மாசி மகத்தில் அன்னை ஸ்ரீ மீனாக்ஷி அம்மனுக்கு அபிஷேக ஆராதனைகளும் மலேசியாவில் சுங்குரும்பை ஸ்ரீ மாரியம்மன் திருக்கோவில், கிரியான் என்ற ஊர்ப்பக்கம் ஸ்ரீ விநாயகருக்கு ஒரு ஆலயம், கொடி மலையில் என் ஐயன் முருகனுக்கு ஒரு கோயில் என்று கடல் கடந்த நாட்டிலே ஆலயங்கள் எழுப்பியும், தைப்பூச நன்னாளிலே அன்னதானக்கட்டளையும் செய்து வரும் தெய்வத் திருமகன் இன்று இங்கே அன்னை ஸ்ரீ பூமாயி அம்மனுக்கு இராஜ கோபுரம் கொண்ட அழகு மிக்க திருக்கோயிலை உருவாக்கித்தர வித்திட்டு பொருள் என்றநீரும் ஊற்றி வளர்த்திட்டு, நடுக்காட்டில் பூத்து வாடி வாழும் மணமிக்க மலர்களைப் போன்று இன்றைய சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்டு வறுமையால் உழன்றுவரும் வேதம், மற்றும் சாஸ்திரங்கள் பலகற்ற அறிஞர் பெருமக்கள் கூட்டத்தில் ஒரு சிலரையாவது கௌரவிக்கும் முறையில்யாகசாலையில்அவர்களை ஒன்றுசேர்த்து மந்திரங்கள் ஓதச்செய்து அன்னையின் மகா கும்பாபிஷேகக் காட்சியைக் கண்டு அன்னையின் அருளைப்பெற நமக்குவாய்ப்பும் அளித்துள்ளார்.

இத்தகைய தெய்வச் சிந்தனையாளர் மார்கழித் திருவாதிரை நாளில் கண்டு மெய் மறந்து நிற்கும் நிலைதான் என்ன? கூத்தப் பெருமானிடம் அவர் யாது கண்டார் ?'

''ஆதிபரன் ஆட, அங்கைக்கனல் ஆட
ஓதும் சடை ஆட உன்மத்தமுற்றுட
பாதிமதி ஆடப், பாரண்டமீதாட
நாதமோ டாடினன், ,நாதாந்த
நட்டமே''

என்று கண்டார்.

சடை முடியில் கங்கை, நிலாப்பிறை, கொக்கிறகு, பாம்பு ஆகியவற்றை அணிந்துள்ள நடராஜர் தாண்டவம் செய்யும் வேகத்தில் சடைமுடி அவிழ்ந்து புரிசடைகள் இருபுறமும் அலைவதைக் கண்டார். அதுமட்டுமின்றி ஏனைய எல்லாப் பொருள்களும் ஆட, நெற்றிக் கண்ணும், புன்முறுவல் பூத்த இதழும் மனதைக் கவரும் மலர்ந்த முகமும் கொண்டு ஆனந்த தாண்டவம் ஆடுவதைக் கண்டு நாமும் அதையே காண வைத்தார்.

அது மட்டுமா; இன்னும் கொஞ்சம் உண்டு' இந்த ஆனந்த தாண்டவத் தத்துவத்தை நாம் அறிந்து கொள்ளவும் செய்துள்ளார். அது தான் சிவபெருமான் செய்து வரும் ஐந்துசெயல் களை விளக்கும் தன்மையது என்பதை குமரகுருபர சுவாமிகள் அழகு நடையில் தெளியவைத்த கருத்தை நாம் அறிந்து கொள்ளச் செய்த தாகும்.

'பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பில் நானிலவளாகமும்
ஏனைப் புவனமும் எண்ணிங்குயிரும்
தானே வகுத்ததுன் தமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பதுன் அமைத்த
பொற்கரமே
தோன்றுபு நின்றவத் தொல்லுல
கடங்கலும்
மாற்றுவதுஆரழல் வைத்ததோர்கரமே
ஈட்டிய வினைப்பயன் எவற்றையும்
மறைத்து நின்று
ஊட்டுவதாகும் நின் ஊன்றிய பதமே
அடுத்த இன்னுயிர்கட்கு அளவில்
பேரின்பம்
கொடுப்பது முதல்வ நின் குஞ்சித
பதமே'

கூத்தப்பெருமானுடைய துடி ஏந்திய கை ஆக்கல் செயலையும் அபயக்கை காத்தல் செயலையும், நீர்சுடர் ஏந்திய கை அழித்தல் செயலையும் தூக்கிய திருவடி அருளல்செயலையும் காலடியில் மிதிக்கப்பட்டிருக்கும் முயலகன் உருவம் மலத்துதுடன் கட்டுப்பட்டிருக்கும் ஆன்மாவையும் குறிப்பதாகவும் குமரகுருபர சுவாமிகள் தெளிய வைத்துள்ளதை நாமும் தெரிந்துகொள்ள வைத்தார்.

இத்தகு தெய்வத் தொண்டு புரிந்து வரும் அவரும் அவர் வழிச் செல்வங்களும் செல்வச் சிறப்புடன் தெய்வ நெறியில் வாழ்ந்திட அன்னை ஸ்ரீ பூமாயி அம்மன் அருள் புரிய, வேண்டி வணங்குவோம்.

# அந்தப் பார்வை

ஆரார்

நேபாளத்து
நகைப்பெட்டி

வெள்ளைக்காரர்கள் இந்தியாவை வளைத்துக் கொண்டிருந்த காலம். நேபாளத்து அரச குடும்பம் கல்கத்தாவுக்குச் சென்றுகொண்டிருந்தது. அரண்மனையில் ஏதோ ஒரு சிறப்பு நிகழ்ச்சி ; அதற்கு ஆபரணங்கள் வாங்குதற்காகப் பெண் மணிகள் பலரும் அந்தக் குழாத்தில் இருந் தார்கள்.

இப்பொழுதெல்லாம் நேபாளத்து அரசரும் அரசியும் நம் நாட்டிற்கு வருவதென்றால் விமானத்தில் வந்துபோகிறார்கள். சில ஆண்டுகட்கு முன் கூட மதுரையில் காஞ்சி சுவாமிகளின் அழைப்பை ஏற்று அரசரும் அரசியும் மதுரைக்கு வந்து விழாவில் பங்குகொண்டு சுவாமிகளின் வாழ்த்தினைப் பெற்றுச் சென்றார்கள்.

முன்னெல்லாம் அவ்வாறில்லை. அரச குடும்பத்துப் பெண்மணிகள் அனைவரையும் சுற்றிப் பெரிய திரைகளைப் பணியாட்கள் பிடித்துக் கொண்டிருக்க, அவர்கள் வருவதும் போவதும் யாரும் தெரிய முடியாதபடி பாதுகாப்போடு செல்வார்கள்.

கல்கத்தாவுக்கு வந்தவர்கள் விலைமதிக்க முடியாத நவமணிகள் இழைத்த பொன் ஆபரணங்களை விலை கொடுத்து வாங்கி அழகிய பேழை ஒன்றில் வைத்து எடுத்துக்கொண்டு தமது நாட்டுக்குப் புறப்பட்டார்கள்.

இந்திய எல்லையில் புகை வண்டி நிலையம். அதுவரை புகை வண்டிப் பயணம், அதற்குப் பிறகு 'காத்மண்டு'க்கு யானை குதிரை பல்லக்கு முதலிய வாகனங்களில் ஏறிச் செல்வார்கள்.

புகை வண்டி நிலையத்தில் வந்திறங்கியதும் அன்று அங்கு இராத் தங்கல், தங்கிவிட்டு மறு நாட் காலையில் எல்லாரும் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றார்கள்.

கோலாகலத்தோடும் குதூகலத்தோடும், அரச குடும்பமும் பரிவாரமும் தலைநகரம் வந்து சேர்ந்தன. தாம் வாங்கி வந்த ஆபரணாதிகளைப் பார்க்கவும், உற்றார் உறவினர்க்குக் காட்டவும் ஆசை கொண்டு அரசியார், அதன் பொறுப்பாளராகிய தலைமை அமைச்சரிடம் கொண்டு வருமாறு ஆணையிட்டார்கள்.

அமைச்சர் போட்ட முடிச்சுகளை வரிசைப் படி பார்த்து அறிந்து அடுத்து நகைப்பெட்டியை நோக்கினார். நோக்கிய அளவில் அவருக்குத் திடீரென்று திகில் ஏற்பட்டது. மூச்சுத் திணறியது; அச்சம் சிம்ம சொப்பனமாக அவரது கழுத்தை இறுக்கியது; நகைப்பெட்டியைக்காண வில்லை !

பொருளைப் போக்கடித்து விட்டதால் திறமையில்லாதவன் என்ற அவப்பெயர் ஒரு பக்கம்; அமைச்சர் களவு செய்திருப்பார் என்ற ஐயத்தால் வரக்கூடிய சிரச்சேதம் இன்னொரு பக்கம். பயங்கர உணர்ச்சிகளிடையே சற்று நேரம் திக்குமுக்காடினார் தலைமை அமைச்சர்.

இதற்குள் அரண்மனை முழுதும் செய்தி பரவிப் பீதியை மேலும் பெருக்கி விட்டது. அமைச்சர் உள்ளம் ஒடுங்கிச் சிந்தனை செய்தார்.

காரிருளில் ஒரு மின்னல்போல அவரது மூளையில் ஒரு யோசனை பளிச்சிட்டது. உடனே அங்கிருந்து கிளம்பினர்.

காட்டுக்கு முன்பு அரசருடன் வேட்டைக்குச் செல்லும் சமயங்களில் அங்கு ஒரிடத்துக் கண் மூடித் தவத்திலிருக்கும் துறவி ஒருவரை அவர் கண்டிருக்கிறர். இப்பொழுது அவருடைய உதவியை நாடினல் என்ன? இதுதான் அமைச்சரின் திட்டம். அவ்வாறே அமைச்சர் ஓடினர், ஓடினர். கறைபடியாத தனது கரங்களால் அவரது கால்களை இறுகப் பற்றிக் கொண்டு இதயத்தின் ஆழத்திலிருந்து வரும் கண்ணீரால் பாத பூசை செய்தார்.

கண்களைத் திறந்து பார்த்தார் முனிவர். அவருக்கு விஷயம் விளங்கியது 'அஞ்சற்க' என்று விழிகளால் உணர்த்தி, அரச குடும்பம் தங்கியிருந்த புகை வண்டி நிலையத்தில் பொருள்களை வைத்திருந்த அறையின் வடக்கு மூலையில் சென்று காணுமாறு அருள்பாலித்தார் முனிவர்.

விழிகளில் நன்றி ததும்ப, முனிவரின் கால்களைப் பற்றித் தொழுதெழுந்த அமைச்சர் விரைந்து கிளம்பினர். பறந்து விரைந்து புகை வண்டி நிலையத்திற்குப் போய்ச் சேர்ந்தார். பொருள்கள் வைத்திருந்த அறை முனிவர் குறிப்பிட்ட வடக்கு மூலை. ஆகா, அப்படியே கிடந்தது நகைப்பெட்டி!

அமைச்சருக்கு அதைக் கண்டதும் உயிர் வந்தது. அரச குடும்பத்திற்கு நிம்மதி வந்தது. காட்டிலிருந்த முனிவரின் ஞானப் பார்வை அவற்றுக்குத் துணையாக ஆனது. 'வியத் தொறும் வியத்தொறும் வியப்பிறந்தன்றே' என்று அது விளங்கியது.

— இதனைத் தெரிவித்தவர் அதனை நேரிற் கண்டு, முனிவரின் 'செக்கண்ட் சைட்'டை வியந்து எழுதிய ஆங்கில ஆசிரியர் 'ருட்யார்ட் கிப்ளிங்' என்பவர்.

● ● ●

**கொட்டகை போட்டவன் கால் தவறியது**

தட்சிண மூர்த்தி சுவாமிகள், அன்பர்களோடு உரையாடிக் கொண்டிருந்தார். உரையாடிக்கொண்டிருந்தவர், நடுவில் திடீரென்று தம் வலக்கையை மேலே உயர்த்தி விரித்தார். பிறகு அதனை இயல்பாகக்கீழேகொண்டுவராமல் கொஞ்சங் கொஞ்சமாக மெல்ல இறக்கிக் கொண்டே வந்தார். அவரது செய்கை அங்கிருந்தோர்க்கு விளங்க வில்லை. 'என்ன சுவாமி; அப்படிச் செய்கிறீர்கள்?' என்று வினவினர் அன்பர் ஒருவர். 'நம்முடைய அன்பன் ஒருவன் கொட்டகை போடும் தொழில் செய்பவன், அவன் இன்று வழக்கம்போல் அந்தத் தொழிலைச் செய்துகொண்டிருக்கும் பொழுது அவனது கால் வழுக்கி விட்டது, என்னைக் கூப்பிட்டான். அதற்காக அவ்வாறு செய்தேன்' என்ருர் சுவாமிகள்.

சற்று நேரத்திற்கெல்லாம் தொழிலாளி ஒருவர் இறைக்க இறைக்க அங்கு ஓடி வந்தார். ஓடி வந்தவர், 'சுவாமி! எங்கள் குடும்பத்தைக் காப்பாற்றினீர்கள்' என்று கீழே விழுந்து கும்பிட்டார். 'எல்லாம் 'இறைவன் அருள்' என்று அடக்கமாகச் சொன்னர் சுவாமிகள்' 'உயரமான கொம்பிலிருந்து கால் தவறிக் கீழே விழப்போகும் சமயம் சுவாமிகளை நினைத்து என்னை அவரிடம் ஒப்படைத்தேன். அப்பொழுது என்னை ஏதோ ஒன்று தாங்கிக்கொண்டு வந்து எந்தவிதமுமான சிரமுமின்றி கீழேஇறக்கி விட்டது. அது சுவாமிகளின் அருள்தான்.'' என்று பரவசத்தோடு கூறிய கொட்டகைத் தொழிலாளியின் அனுபவம் அங்கிருந்தோர் அனைவரையும் மெய்சிலிர்க்க வைத்தது.

சிறுவராக இருக்கும் பொழுதே சுவாமிகளுக்கு இந்தப் பார்வை வாய்ந்திருந்தது. அவருடைய தமையனர், கோயிலில் கணக்கராக இருந்தார். நாள்தோறும் அபிஷேகம், அமுது படிகளுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பதும் கணக்கு வைப்பதும் அவருடைய கடமை. அவசரமாக அவர் அயலூருக்குச் சொந்த வேலையாகப் போக வேண்டியிருந்தது. ஆகவே தம்பியை அழைத்து விவரங்களைச் சொல்லிக் கணக்கு எழுதி வைக்குமாறு கட்டளையிட்டு விட்டுப் போய்விட்டார். கோவில் ஊழியர்களுக்கும் சுதந்திரம் வந்தது போல உக்கிரான அறைப் பொருள்கள் கண்டுங்காணமலும் மறைந்து குறைந்தன. சிறுவன் அதைப் பற்றி

அக்கறையற்றவனகக் காணப்பட்டான். கணக்கும் வைக்கவில்லை. காகிதமும் எடுக்கவில்லை.

தமையன் திரும்பி வந்தவர், பொருள்கள் மிகவும் குறைந்திருப்பதையும் கணக்கு எழுதப் படாமையையும் கண்டு தம்பியிடம் விசாரித்தார். அங்கிருந்தோர் உள்ளூற மகிழ்ச்சியும் வெளியே அனுதாபமும் கொண்டிருந்தனர். சிறுவனுக்கு நல்ல உதை கிடைக்கும் என்று அதை இரசிக்க ஆயத்தமாக இருந்தார்கள் சிலர்.

சிறுவன் தட்சிணுமூர்த்தி, தமையனிடம் கணக்குகள் சொல்லத் தொடங்கினர். தங்களைத் தவிர யாருக்கும் தெரியாது என்று கோயில் அதிகாரிகள், தருமகர்த்தாக்கள், அதிபதி என்ற எல்லாரும் செய்தவற்றைத் துலாம்பரமாகத் தெரிவிக்கலானர். பத்துப்படி பால்; அபிஷேகத்துக்கு அரைப்படி; பட்டர் வீட்டுக்கு இரண்டு படி; அவருடைய சின்ன வீட்டுக்கு இரண்டுபடி. தருமகர்த்தர் வீட்டுக்கு இரண்டுபடி.........

கணக்கை நிறுத்தாமல் சொல்லலானர் சிறுவன் தட்சிணுமூர்த்தி. பெரியோர்களுக்கு சிரிப்பு நீங்கித் திகைப்பு ஏற்பட்டது. போதும் போதும் என்று கணக்கை நிறுத்தச் சொல்லிக் கெஞ்சினர்கள்.

— தட்சிணுமூர்த்தி சுவாமிகள் திருவாரூரில் அடங்கியுள்ளார் இச்செய்திகள் அவரது வரலாற்று நூலில் அடங்கியுள்ளன. ● ●

சப்பாத்தி

இராமன்

அறுபது, அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னல் வட நாட்டிலிருந்து மூன்று துறவிகள் தென்னட்டில் யாத்திரை செய்ய வந்திருந்தார்கள். நல்ல கட்டுமஸ்தான தேகம். கம்பீரமான தோற்றம் உடையவர்கள். நைட்டிக பிரம்மச்சாரிகள். துளையிட்டு இரும்பு வளையம் அணிந்திருந்தார்கள். எனவே அவர்களது பிரம்மச்சரியத்தை எவரும் ஐயுற முடியாது. ஆடை அணியாத நிலையினர்.

அவர்களைச் சுற்றி வேடிக்கைப் பார்க்கும் கூட்டம் வந்துகொண்டேயிருந்தது. போகும் வழியில் ஓர் அரசமரம். அதன் அடியில் சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். வயதானவர்கள் மர நிழலில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அதற்குச் சற்றுத்தொலைவில் வரும்பொழுதே துறவிகளில் ஒருவர் 'ஓடுங்கள்,ஓடுங்கள், அந்தமரம் விழப்போகிறது' என்று கூறினர். அங்கிருந்தோர் அடித்துப் புரண்டு ஓடினர்கள். அவர்களைப் பிடித்த நல்ல நேரம், அவர்கள் போனவுடனே அந்தப் பழங் காலத்துப் பெரிய மரம்,காற்றும் இல்லை,புயலும் இல்லை, சடசட என்று முறிந்து விழுந்தது.

துறவிகள் மூவரும் ஒரிடத்தில் உட்கார்ந்து சாப்பிடத் தொடங்கினர்கள். வடநாட்டுக்காரர்களின் சாப்பாடுதான் நமக்குத் தெரியுமே! எண்ணெய்ப் பசையில்லாத சப்பாத்திக் குன்று; அதில் பருப்புக்குளம். அவ்வாறே அந்தத் துறவோரும் சாப்பிட்டனர். ஆனல் மற்றவர்களை விடவும் மிகவும் அதிகமாகச் சாப்பிட்டனர்.

அதைப்பார்த்த பையன் ஒருவன் என்ன இவ்வளவு சாப்பிடுகிருர்களே!' என்று தன்னையும் அறியாமற் சொல்லிவிட்டான். அவர்கள் அவனைப் பரிவோடு அழைத்தார்கள், 'நீயும் எங்களோடு சாப்பிடவா' என்று கூப்பிட்டார்கள். 'என்னல் உங்களைப்போல் சாப்பிட முடியாது என்ருன் அவன். 'அதனல் என்ன, எங்களோடு சாப்பிட்டால் உனக்கும் சாப்பிட முடியும்' என்ருர்கள் அவர்கள். சிறுவன் உட்கார்ந்தான். துறவி ஒருவர் அவனைத் தன் உள்ளங்கையால் தலையை வருடினர். அவனுக்குப் பசிக்க ஆரம்பித்தது. சாப்பாட்டு இராமனக அவர்களையும் விட அதிகம் தின்னும் சப்பாத்தி இராமனக ஆனன். மறுபடியும் துறவி அவனது தலையில் கை வைக்கப் பசி அடங்கியது.

அவர்கள் மூவரும் புறப்பட்டு நடையைக் கட்டினர்கள். வேடிக்கை பார்க்கும் கூட்டமும் முடிந்தவரை கூடவே சென்றது. வழியில் ஒரு மேடு. அதன் அருகில் வந்ததும் துறவி ஒருவர் 'இங்கே இராமர், சீதை, இலட்சுமனர் இருக்கிருர்கள்' என்ருர். கூட்டத்தார் அந்த மேட்டை வெட்டித் தோண்டினர்கள், ஆகா! அழகே உருவான மூன்று அருமையான சிலைகள்! அவற்றை மக்கள் எடுத்துவந்து தக்கஇடத்தில் பிரதிஷ்டை செய்து வைத்தார்கள்.

துறவிகள் மீது அன்பார்வங்கொண்ட வேதியர் ஒருவர் அவர்களுக்கு விருந்தளிக்க விரும்பினர். அவர்களும் அதற்கு இசைந்து அவரது இல்லம் போந்து விருந்துண்டார்கள். அந்த வீட்டில் ஓர் இளம்பெண். அவர்களைப் பார்த்தாள், பார்த்ததும் மயக்கம் உண்டாயிற்று. அது காய்ச்சலாக அவளது மேனியைப் பற்றியது. காய்ச்சல் சற்று நேரத்திற்கெல்லாம் உச்சகட்டத்தை அடைந்தது. அனலிற் பட்ட புழுவாகத் துடிக்கத் தொடங்கினள். விருந்து கொடுத்தவர், பாவம், வேதனைக்குள்ளானர். துறவிகளுக்கு விஷயம் புரிந்தது. அவர்களில் ஒருவர் அந்தப் பெண்ணின் சிரசில் உள்ளங்கையை வைத்தார். காய்ச்சல் குறைந்து விரைந்து தன்னிலையடைந்தாள் அந்தப் பேதை.

இவற்றைத் தெரிவித்தவர் அவர்களைத் தம் சிறு வயதில் நேரிற் கண்டு சற்றுக் கூடவே சென்றவர்; எண்பது வயதுடைய அந்தணர். ஆசிரியப் பணி செய்து ஒய்வு பெற்றுச் சென்னையில் இருப்பவர். . . .

" உன்னைத்தான்

தம்பி ! "

தண்டாலும் பஸ்கியும் போட்டு முறுக்கேறிய உடம்பு; அதனுள் ஒளிரும் மாசுமறுவற்ற மணிபோன்ற உள்ளம், படித்த அம்பருத்தூணியில் பகுத்தறிவுக்கணைகள்— இவ்வாருன இளைஞர் ஒருவர், பெரியவர்களை எல்லாம் ஒரு கேள்வி கேட்டு மடக்கி வந்தார். 'நீங்கள் கடவுளை நேரில் பார்த்திருக்கிறீர்களா ?' இது தான் அவரது கேள்விக்கணை. மகரிஷி தேவேந்திரநாத் தாகுர் உட்படப் பலரும் இதற்கு நேரடி விடை சொல்ல முடியாமல் சுற்றி வளைத்து ஏதோ சொன்னர்கள், ஆற்றுப்படுத்தப்பட்டு அவர் காளி கட்டத்துப் பூசாரி ஒருவரிடம் வருகிருர். அதே கேள்வியைப் போடுகிருர். எதிர்பாராத விடை வந்தது, " பார்த்திருக்கிறேன். உன்னைத்தான் தம்பி எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். வந்து விட்டாயா ? " நரேந்திரநாத் தத், இராமகிருஷ்ணரைப் பார்த்து வியப்புடன் கேட்கிருன் : " உண்மையிலே பார்த்திருக்கிறீர்களா ? " 'ஆம், உன்னை என் கண் முன்னுல் காண்பது போலவே பார்த்திருக்கிறேன்' நரேந்திரனுக்கு அவர் மேல் ஐயம் அதிகமாயிற்று. ஒருவேளை, பைத்தியமோ இவர் ? என்று எண்ணினுன். 'எனக்குக் கடவுளைக் காட்டுகிறீர்களா ?' என்று அடுத்த கேள்வியை விடுத்தான் இளைஞன்.' 'காட்டுகிறேன்' என்ற பதில் அவனுக்கு அதற்கு அடுத்த கேள்விபோட முடியாமல் தடுத்தது,

நரேந்திரனின் சிரசில் தமது கையை வைத்து அருள்கிருர் இராமகிருஷ்ணர். இளைஞருக்கு மெய்ந் நடுக்கம் ஏற்படுகிறது. மேனி சிலிர்க்கிறது. யாவும் அடங்கி விடுகிறது.

நேரம் செல்கிறது. இளைஞன் விவேகானந்தன் ஆகிருன். பேசரிய பேரின்பத்தில் திளைக்கிருன். ஐயறிவுக்குப் பதில் மெய்யறிவு வாய்க்கிறது. பகுத்தறிவுக்குப் பதில் தொகுத்தறிவு மேவுகிறது. சமாதியில் இருக்கும் அவரைக் குருதேவர் மீண்டும் தொடுகிருர். விழித்தெழுகிருர் விவேகானந்தர். 'இப்படியே நான் இருந்து விடுகிறேன்' என்று வேண்டுகிருர். 'உன்னல் ஆக வேண்டிய வேலைகள் நிறைய இருக்கின்றன' என்று கடமை உணர்த்தினர் குரு.

அறிவுமைந்தனைத் தன் அந்தரங்கப் பார்வையால் அறிந்த இராமகிருஷ்ணர், மைந்தனுக்குரிய தனிக்கடமை என்ன என்பதைத் தெரிவிக்காமலே பரிபூரணம் அடைந்தார். கௌபனதாரியாக நாடு முழுதும் காலால் நடந்து அலைந்து குமரிக்கடலை நீந்திப் பாறை மேல் அமர்ந்து ஊனுறக்கம் இன்றித் தவத்தில் இருந்தார் சீடர். கடமை இதுவெனக் காட்சி கிடைத்தது. அமெரிக்காவுக்குப் புறப்பட்டார். ...

பேலூர் மடத்தில் ஒரு நாள். விவேகானந்தரை வழக்கமாகச் சந்திக்க வரும் வழக்கறிஞரான சீடரிடம் அவர் 'என்ஸைக்ளோப் பீடியா பிரிட்டானிக்கா' என்ற கலைக்களஞ்சியத்தைக் கொண்டு வருமாறு கூறுகிருர். சீடர் வாங்கிக் கொண்டு வந்தார். அடிகள் பார்த்து விட்டு அவரிடம் கொடுத்து விட்டார்.

சீடர் வழக்கறிஞர் ஆதலால் எதிலும் புதிருமாகக் கேள்வி கேட்பது வழக்கம். 'என்ன, அதற்குள் பார்த்து விட்டீர்களா?" என்ருர். 'ஆம்' என்று சுவாமிகள் சொல்ல, 'என்ன எல்லாவற்றையுமா பார்த்து விட்டீர்கள்?,

என்று வேடிக்கையாகக் கேட்டார். 'ஆம்' என்று அதற்கும் பதில் வந்தது. 'சரி. அப்படியானுல் உங்களைக் கேள்வி கேட்கிறேன். பதில் சொல்லுகிறீர்களா?' என்பது வக்கீலின் வாதம். 'சரி' என்பது அடிகளின் பதில்,

வக்கீல் மூலைக்கு மூலை கேள்விகளைப் போட்டார். அவ்வவற்றுக்கு அவ்வப் பக்கத்திலிருந்து 'அடிபிறழாது பதில் வருகிறது. கேள்விக்குப், பதில் தான் எப்பொழுதும் பயந்து பயந்துவரும். இப்பொழுது பதிலைக் கண்டு கேள்வி விழிக்கலாயிற்று, அசந்து போன வக்கீல், கேள்வியை நிறுத்தி விட்டுச் சொந்தக் கேள்வி கேட்கலானுர்.

உங்களால் இஃது எப்படி முடிந்தது?'

'புலன்களை வென்றவனுக்குப் பல சக்திகள் வருகின்றன, ஒஜஸ் என்பது ஒன்று. அதனுல் வருவது இந்தச் சக்தி!' என்பது அடிகளின் தெளிவுரை. — 'விவேகானந்தர் சம்பாஷணைகள்' என்பது இதற்கு ஆதாரம்.

## ஞானப்பார்வை

இத்தாலியிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் பிறவிடங்களிலிருந்தும் தம்மைப் பார்க்க வந்தவர்களிடம், இரமணரிஷி அவர்கள் புறப்பட்ட நேரம், இடையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைச் சொல்லி அன்போடு அளவளாவுவது வழக்கம். அவர்கள் வந்த பிறகு வாஷிங்டனிலோ நியூயார்க்கிலோ இப்பொழுது என்ன நடக்கிறது என்றும் அவர் எளிதாகத் தெரிவிப்பார்.

ஞானிகளுக்கும், யோகப் பயிற்சியில் சிறப்படைந்தார்க்கும், விட்ட குறையால் தொடர்ந்து வரப்பெற்ற மகான்களுக்கும் அந்தப் பார்வை' ஞானப் பார்வை கிடைக்கிறது. அது வாய்க்கப் பெற்றேரை ஆங்கிலத்தில் 'seers' என்றும் sage என்றும் சொல்வார்கள், தமிழில் பார்ப்பார், அந்தணர் என்ற சொற்கள் அவற்றை விளக்குகின்றன.

வேத காலமுதல் இன்று வரை ஞானப் பார்வை அருளப்பெற்றேர் இருந்து வருகிறுர்கள். ''கோவலன் கண்ணகி கவுந்திக்கு வரப் போகும் விதியைக் கண்ணுடியில் பார்ப்பது போல் பார்க்கிறுர் துறவி. ஒருவர், அவர் ''விரனுகலின் விழுமங் கொள்ளவில்லை. ஆகவே அவர்களிடம் சொல்லவும் இல்லை'' என்று சிலப்பதிகாரத் துறவாசிரியர் கூறுவது ஒப்புக் கொள்ளத்தக்கதே யாகும்,





# பூவும் பொன்னும் பூமாயியும்



அய்க்கண்

ஒரு வாரமாக, படுக்கையில் காய்ச்சலாகக் கிடந்த முனியாண்டிக்கு அன்று திடீரென்று காய்ச்சல் அதிகமாகி விட்டது. சுவாசம் திக்கு முக்காடி, நெஞ்சுக்கூடு ஏறியிறங்கியது. உதடுகள் நகடாக உலர்ந்து, கண்கள் அடிக்கடி உள்ளே போய்ச் செருகிச் செருகி மீண்டுவந்தன.

அவசரமாக வந்து பார்த்தார் டாக்டர். அவனுடைய நாடி, மூச்சு, ஜ்வரம் எல்லாவற்றையும் உன்னிப்பாகப் பார்த்து விட்டு, ஒரு மருந்துச் சீட்டு எழுதி, குப்பாயியிடம் கொடுத்தார்;

''இந்த ஊசி மருந்தை வெளியிலே கடையில் வாங்கிக்கிட்டு வா...இந்த மருந்து இங்கே ஸ்டாக் இல்லே...போ சீக்கிரம்'' என்று அவசரப்படுத்தி விட்டு, தன் அறைக்குப் போய்விட்டார் டாக்டர்.

அங்கே வந்த நர்ஸும், குப்பாயியைத் துரிதப்படுத்தினாள் :

''வேகமாய்ப் போய் ஊசி மருந்தை வாங்கிக்கிட்டு வா...இந்த ஊசி போட்டால்தான், உன் புருஷன் உயிர் பொழைக்கிறதைப் பத்தி உறுதியாய்ச் சொல்ல முடியும்...கோ...க்விக்...'' என்று ஆங்கிலத்திலும் சொல்லி விரட்டினாள்.

பதறிப்போன குப்பாயி, மருந்துச் சீட்டை வாங்கிக்கொண்டு கடைத்தெருவுக்கு ஓடினாள்.

கடைக்காரன் சீட்டை வாங்கிப் பார்த்து விட்டு, ஆளையும் பார்த்துக்கொண்டான் :

''பன்னிரண்டு ருபாய் நாற்பது காசு... பணம் வச்சிருக்கியா ?'' என்று மருந்தின் விலையைச் சொல்லிக் கேட்டான்.

குப்பாயி திடுக்கிட்டாள்.
பன்னிரண்டு ரூபாயா ? ...

அவள் கையில் மூன்று ருபாய்தான் இருந்தது. மீதி ரூபாய்க்கு அவள் என்ன செய்வாள்?

யாரிடம் கடன் கேட்பாள் ? ...

யாரையும் அவளுக்குத் தெரியாதே ! ... அவளுக்கு உற்றார் உறவினர்கள் நண்பர்கள் யாரும் அந்த ஊரில் இல்லே. அந்த ஊருக்கு அவள் புதிசு.

கோட்டையூரில் பஞ்சாயத்து போர்டு தொழிலாளி முனியாண்டியின் இளமை முறுக்கிலும் நல்ல குணத்திலும் குப்பாயி தன் மனத்தைப் பறிகொடுத்திருந்தாள்.

பல ஏழைத் தொழிலாள இளைஞர்களிடம் குடிகொண்டிருக்கும் குடிப்பழக்கமோ அல்லது பீடி சுருட்டுப் பழக்கமோ அல்லது சூதாடும் பழக்கமோ அல்லது முதல் நாள் முதல் ஷோவில் சூடாகப் படம் பார்த்து விசில் அடிக்கும் ரசிகத் தனமோ முனியாண்டிக்கு இல்லே.

இளமையிலேயே தாய்தந்தையைப் பறி கொடுத்து அனுதையாக வளர்ந்ததாலோ என்னவோ, வேலையில் பொறுப்புணர்ச்சியோடு, 'தான் உண்டு, தன் வேலை உண்டு' என்று சம்பளம் வாங்கி, ஒழுக்கமாகச் செலவழித்து ஒழுங்காகச் சேமித்து வைத்துககெண்டிருந்த முனியாண்டிக்கும், குப்பாயியின்மேல் ஆசை தான்.

குப்பாயியும் அப்படித்தான்: அக்கம் பக்கத்துக் குடிசைகளுக்குப் போய் அரட்டைக் கச்சேரி செய்யமாட்டாள்: கண்ட கண்ட சினிமாக்களைப் பார்த்து, சினிமா நடிகர்களைத் தெய்வமாகத் தரிசிக்கிற 'மயக்கம்' அவளுக்கு இல்லை. குரல் அதிராத பேச்சும், தலை நிமிராத நடையும், அடக்கம் மீருத உடையும் அவளுக்குத் தனிக் கவர்ச்சி அளித்திருந்தன.

இவர்களுடைய காதல் விவகாரம், அவள் தகப்பன் சுப்பனுக்குப் பிடிக்க வில்லை.

குப்பாயியை, சானிட்டரி மேஸ்திரி ஆண்டியப்பனுக்குக் கட்டிக் கொடுக்க முடிவு செய்திருந்தான் சுப்பன்.

ஆண்டியப்பன், கொஞ்சம் பசையுள்ள மைனர்: மேலும், மேஸ்திரி உத்தியோகத்தில் இருப்பவன்—என்பதற்காக மட்டுமல்ல—

ஆண்டி, அடிக்கடி சுப்பனுக்குக் குடிவகைகள்—மேனுட்டுச் சரக்கு முதல் உள்நாட்டுப் பட்டை வரை—சப்ளை செப்து குஷிப்படுத்தி, கைமாத்தும் கொடுத்து, அவனைத் தன் கைக்குள் போட்டுக் கொண்டிருந்தான்.

குப்பை மேட்டிலே காய்த்த தக்காளிப் பழம் போல், அழகிலும் கவர்ச்சியிலும் தளதளக்கும் குப்பாயியை எப்படியாவது மனைவியாக்கிக் கொள்ளவேண்டும் என்ற நீண்ட காலத் திட்டத்தின் படி, அப்பாவை வளைத்துப் போட்டிருந்தான் ஆண்டியப்பன்.

தன் திட்டத்தின் குறிக்கோளை, சுப்பனிடம் நெருக்கிச் சொன்னதும், வாயெல்லாம் பல்லாக மகிழ்ந்துபோய், மகளிடம் கல்யாணத்தைப் பற்றி வாயெடுத்தான் சுப்பன்.

சுப்பனுக்குப் பிடித்தமான அயிரை மீன் குழம்பைத் தட்டு நிறைய வார்த்தபடி, தன் காதல் விவகாரத்தை, தட்டுத்தடுமாறித்தயங்கிய வாறு வெளிப்படுத்தினுள்.

அதைக் கேட்டதும், விஸ்கியில் ஊற்றிய சோடாபோல் கொதித்துக் குதித்து எழுந்தான் சுப்பன்.

''ஏ புள்ளே! வீட்டுக்குள்ளே அடக்க ஒடுக்கமாயிருக்குது நம்ம கொழந்தைனு சந்தோசப்பட்டுக்கிட்டிருந்தேன் ... இப்போ இப்படிச் சொல்றியே புள்ளே ?...தெனசரி சினிமா பார்க்கிற பொண்ணுக கூட, அப்பன் காட்டுற புருசனைக் கட்டிக்கிட்டு குடும்பப் பொண்ணுயிருக்குதுக......நீ என்னடான்னு, பெத்த அப்பன் கிட்டேயே, நான் என் புருசனைத் தேடிக் கிட்டேன்னு சொல்றே ? ஒனக்கு எம்மாந்தைரியம் ? ... என்னை ஒசந்த எடத்திலே வச்சுப் பாக்கனும்னு நான் ஆசைப்படறேன்: நீ இன்னும் குப்பை மேட்டையே கட்டிக்கிட்டு அழறேங்கிறே ? ...இந்தா புள்ளே!...நான் இப்போ குடிக்கலே: நிதானத்தோடேதான் சொல்றேன்...ஒழுங்கா மாறையா நான் சொல்ற பையனைக் கட்டிக்கிட்டாத்தான், நீ என் மக: இல்லே . என்னைத் தலைகுனிய வைக்க நினைச்சே, உன் தலையைச் சீவுறதுக்கு நான் யோசிக்க மாட்டேன்...இதா பாரு, அரிவா தயாராய் வச்சிருக்கேன்...எனக்கு குடும்ப மானம்தான் பெரிசு: மானத்தைக் காப்பாத்துறதுக்காக மகளைக்கூட பலி கொடுத்திடுவேன்...'' என்று வீராவேசமாகக் கொட்டிக் குமுறிய தகப்பனைப் பார்த்து அவள் திடுக்கிட்டுப் போனுள்.

நிதான நிலையில் மட்டுமல்ல — குடிவெறியிலும் சுப்பன் ரோஷக்காரன் என்பது மகளுக்குத் தெரியும்.

அப்பாவையும் மேஸ்திரியையும் பகைத்துக் கொண்டு, உள்ளூரில் நிம்மதியாக வாழ முடியாது என்று புரிந்துகொண்ட குப்பியும் முனியாண்டியும், ஒரு நாள் இரவில் திருப்புத்தூருக்கு ஓடிவந்துவிட்டார்கள்.

பூமாயி அம்மன் சன்னிதியில் அவன் குப்பிக்குத் தாலிகட்டினுன். தன் சேமிப்புப் பணத்திலே மனைவிக்குத் தங்கத்தாலியும் (தங்கத்திலே தாலி

போடுவது, குப்பத்துக் குடும்பங்களிலே பெரிய விஷயமில்லையா ?) கைக்கு இரண்டிரண்டு வளையல்களும் அணிவித்தான்.

குப்பிக்குப் பெருமை பிடிபட வில்லை. பூமாயி அம்மனின் சாட்சியாக நடந்த கல்யாணத்துக்குப் பிறகு அவர்கள் 'இல்லறம்' தொடங்கியது.

அந்த ஊரில் ஒரு சிறு குடிசையை வாடகைக்குப் பிடித்துக்கொண்டு, வேலை தேட ஆரம்பித்தான் முனியாண்டி.

இந்தக் காலத்தில் வேலை கிடைப்பது என்பது, மனைவி கிடைப்பதுபோல் சுலபமா என்ன?

அவனுக்கு வேலை கிடைப்பதற்குள், குடும்பச் செலவுக்காக, குப்பியின் தங்க வளையல்கள் ஒன்றன்பின் ஒன்றாக வட்டிக் கடைக்கு உருண்டோடிப்போய், கடைசியில் அசலிலும் வட்டியிலும் முழுகிக் கரைந்துபோய்விட்டன, ஓரிரண்டு தடவை செலவுக்காக, உள்ளூர் மிஷன் ஆஸ்பத்திரியில் ரத்ததானம் செய்தும் பணம் சம்பாதித்தான்.

கடைசியில், அந்த ஊர் சேர்மனைச் சந்தித்து காலிலே விழுந்து கெஞ்சினான்.

அவர் அதிகாரத்திலும் அன்பு மாறாமல், ஆட்சியிலும் கறைபடியாமல், அரசியலிலும் சத்தியம் தவறாமல் இருப்பவர்.

முனியாண்டியின் அவல நிலையைக் கேட்டு இரக்கப்பட்டு உடனே பஞ்சாயத்து போர்டில் அவனுக்கு ஒரு வேலை கொடுத்தார்.

" அப்பாடா ! சேர்மன் ஐயா புண்ணியத்திலே நம்ம கஷ்டமெல்லாம் போயிடுச்சி, குப்பி !...இனிமே நமக்கு நல்ல காலம்தான்...'' என்று துள்ளிக் குதித்து மகிழ்ச்சியடைந்தான் முனியாண்டி,

ஆனால் அடுத்த மாதமே திடீரென்று. உடம்பு சௌகரியமில்லை என்று படுத்தவன். படுத்தபடுக்கையாகிவிட்டான்...

ஊசி மருந்து வாங்க, பன்னிரண்டு ரூபாய் வேண்டுமே? —

நர்ஸின் அபாய அறிவிப்பு, அடிக்கடி நினைவுவந்து எலெக்ட்ரிக் ஷாக்காய் அவள் உடலெங்கும் பரவி, நடுக்கமெடுத்தது.

யாரிடம் போய் பணம் கடன் கேட்பது?

சட்டென்று வட்டிக்கடை நினைவு வந்தது அவளுக்கு. அங்கே ஓடினாள் குப்பி.

அந்த வட்டிக்கடைக்காரர் ரெங்கனை அவளுக்குத் தெரியும் ; அவனுடைய கடையில்தான் முன்பு அவளது வளையல்கள் அடமானம் இருந்தன.

''ஐயா சாமி ! நீங்கதான் கருணை செய்யணும்...என் புருசன் ஆஸ்பத்திரியிலே சாகக் கிடக்கிறாரு...மருந்து வாங்கப் பணம் வேணும்... பத்து ரூபாய் கடன் கொடுங்க, சாமி...'' என்று கெஞ்சினாள்.

ரெங்கன் அவளை ஏற இறங்கப் பார்த்தான்.

" என்னம்மா, வெறுங்கையோட வந்து கடன் கேட்கிறே ? அடமானம் வைக்க ஏதாவது கொண்டுவந்திருக்கியா ? ''

அவனுடைய கேள்வி, அவள் நெஞ்சில் சுருக்கென்று தைத்தது. 'அடமானம் வைக்க அவளிடம் என்ன இருக்கிறது ?

" இல்லிங்க, சாமி ! என் கையிலே, கழுத்திலே கிடந்ததை யெல்லாம் உங்க கடையிலே அடகு வச்சு எல்லாத்தையும் வித்திட்டதுதான் உங்களுக்குத்தெரியுமே?...இப்போ என்கையிலே அடகு வைக்க ஒண்ணுமில்லைங்க...என் புருசன் ஆஸ்பத்திரியிலே சாகக்கிடக்கிறாருங்க. நான் இப்போ மருந்து வாங்கிக்கிட்டுப் போகலேன்னா, அவர் உசிருக்கே ஆபத்து ஏற்பட்டுடுங்க .. தயவு பண்ணுங்க, 'சாமி...'' என்று விழி மலர்களில் கண்ணீர் கொப்பளிக்கக் கெஞ்சி அழுதாள் குப்பி.

மழையில் கரையாத பாறையாக ரெங்கன் சலனமில்லாமல் இருந்தான்.

அவனைப் பொறுத்தவரையில், அவளுடைய கண்ணீர், வெறும் தண்ணீர் மாதிரித்தான்...

" இங்கே வர்றவங்க எல்லாருமே, இது மாதிரி—இதை விட அவசரமான காரணத்தைச் சொல்லித்தான் கடன் கேட்க வர்றாங்க...நான் செய்கிறது தொழில், வியாபாரம்—வியாபாரப் பொருளைத்தான் பார்ப்பேனே தவிர, வியாபாரி

முகத்தைப் பார்த்து இரக்கப்படறதில்லே ..'' என்று நிர்த்தாட்சண்யமாகக் கையை விரித்தான் வியாபாரி.

அந்தச் சமயத்தில், உள்ளேயிருந்து, ரெங்கனுடைய மனைவி வள்ளி வந்தாள்.

உடனே அவளைப் பார்த்து முறையிட்டாள் குப்பி.

வள்ளிக்குக் குப்பியைத் தெரியும். அவள் பங்களாவுக்கு அடிக்கடி வந்து மிளகாய்ப்பொடி, தேன் குழல் மாவு, இடியாப்ப மாவு எல்லாம் இடித்துக் கொடுத்திருக்கிருள் குப்பி.

'' அம்மா தாயி ! நீயாவது கருணை செய்யம்மா...என் புருசன் ஆஸ்பத்திரியிலே சாகக் கிடக்கிருரு. மருந்து வாங்க அவசரமாய் பணம் வேணும்...அடமானம் வைக்க என் கிட்டே எந்த நகையும் இல்லேம்மா... தயவு செஞ்சு எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடம்மா...'' என்று குனிந்து வள்ளியின் கால்களில் கும்பிட்டு விழுந்தாள்.

அப்பொழுது சட்டென்று அவள் கழுத்தைப் பார்த்தான் ரெங்கன்.

அவள் கழுத்திலே மஞ்சள் கயிற்றிலே தங்கத்தாலி ஊசலாடிக் கெண்டிருந்தது.

'' ஏம்மா, உன் கழுத்திலேதான் தாலி தங்கத்திலே போட்டிருக்கியே, அந்தத் தங்கத்தை அடமானம் வைக்கலாமே...?'' என்ருன் பக்கா வட்டிக் கடைக்காரன் !

அவன் வியாபாரி.

அந்த வியாபாரியின் கண்களுக்கு, தங்கம் தாலியாகத் தெரிய வில்லே : தாலி, தங்கமாகத் தெரிந்தது !

'' ஆமாமா...அந்தத் தங்கத்தை அடமானம் வைக்கலாமே ? தாலியின்னு, தங்கத்தாலே தான் இருக்கணும்னு கட்டாயமில்லே : மஞ்சளைக் கூட தாலியாகக் கட்டிக்கலாம்...'' என்று யோசனை சொன்னுள் வள்ளி.

அவள் வியாபாரியின் மனைவியல்லவா ?

குப்பாயி திடுக்கிட்டாள் :

தாலியை அடகு வைப்பதா ?

அவள் உள்ளத்திற்குள் சிந்தனை வட்டங்கள் உருண்டு புரண்டன...

தாலி, தங்கமா, மஞ்சளா ? — என்பது இப்போதைய பிரச்னை அல்ல :

அவள் சுமங்கலியா, விதவையா ? — என்பதல்லவா பிரச்னையாகி இருக்கிறது ?

குப்பாயி சட்டென்று தங்கத் தாலியை அவிழ்த்தாள்,

தாலியைத் தொட்டதும், அது கட்டும் போது சாட்சியாக இருந்து மௌன ஆசியருளிய பூமாயி அம்மன், குப்பியின் மனக்கண்ணுக்குள் பிரத்தியட்சமானுள் :

'அம்மா ! உன் சன்னதியிலே கட்டிய மாங்கல்யத்தைக் கழற்றி அடகுவைக்கிறேன்... என்னை மன்னிச்சிடு, தாயே! ..' என்று மனதிற்குள் கசிந்துருகி வேண்டிக்கொண்டாள்.

பூமாயி அம்மன் பொருள் பொதிந்த புன்முறுவலுடன் காட்சியளித்தது, குப்பாயிக்கு ஆறுதலாக இருந்தது...

தங்கத்தை ரெங்கனிடம் நீட்டினுள் ;

'' சாமி! எனக்கு தாலி தங்கினுப்போதும்... தங்கம் வேண்டாம் ... இதை வச்சுக்கிட்டுப் பணம் கொடுங்க...''

பணத்தை வாங்கிக் கொண்டு, மருந்துக் கடைக்கு ஓடினுள்.

★ ★ ★ ★

நான்கு மாதங்கள் கழித்து, ஒரு நாள்—

மாடிப்படியில் கால் இடறி உருண்டு கீழே விழுந்து மண்டை பிளந்து, இரத்த வெள்ளத்தில் மயங்கிக் கிடந்த ரெங்கனை உள்ளூர்ப் பெரிய ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் சென்ருர்கள்.

நிறைய இரத்தம் வெளியேறி விட்டதால், அவனுக்கு இரத்தம் செலுத்தினுல்தான் உயிர் பிழைக்க வைக்க முடியும் என்று சொல்லி விட்டார்கள் டாக்டர்கள்.

அங்கிருந்த யாருடைய இரத்தமும் ரெங்கனுக்குப் பொருந்தவில்லை. அவனுக்குத் தேவையான க்ருப் இரத்தம். அங்கே ஸ்டாக் இல்லே.

வள்ளி பதறிப்போய்த் தவித்தாள்.

அவளுடைய இரத்தமோ, உறவினர் இரத்தமோ எதுவும் அவனது க்ருப்புக்கு ஒத்து வரவில்லை. கையைப் பிசைந்து கொண்டு, கண்ணீர் வடித்து அழுது கொண்டிருந்தாள் வள்ளி.

இந்த மாதிரி 'எமெர்ஜென்ஸி' சமயங்களுக்காக, முன்பு இரத்த தானம் செய்தவர்களில் எந்தெந்த ஆட்களிடம் எந்தெந்த 'க்ருப்' இரத்தம் இருக்கிறது என்பதை அந்த மருத்துவ மனையில் குறித்து, லிஸ்ட் வைத்திருப்பார்கள்.

ரெங்கனின் குருப் இரத்தம், சேரியில் முனியாண்டி என்பவனிடம் இருக்கிறது என்பதைப் பார்த்ததும், சீப் மெடிகல் ஆபீஸர் 'ஆஸ்பிடல் வானை' அனுப்பி அவனைக் கூட்டி வரச் சொன்னார்.

முனியாண்டி என்ற பெயரைக் கேட்டதும், வள்ளிக்கு சுரீர் என்று நினைவுப் பொறி சுட்டது.

''எந்த முனியாண்டி? பஞ்சாயத்து போர்டிலே வேலே பார்க்கிற தொழிலாளியா?'' என்று கேட்டாள் அவள்.

''ஆமாம்,'' என்று தலையசைத்தான் ''வான் டிரைவர்''

வள்ளிக்குத் தூக்கிவாரிப்போட்டது ...

'நான்கு மாதங்களுக்கு முன்பு, அந்த முனியாண்டி சாகக் கிடந்தபோது — அவன் மனைவி குப்பாயி மாங்கல்யப் பிச்சை கேட்டபோது, எவ்வளவு நிர்த்தாட்சண்யமாக நடந்து கொண்டோம்?... இன்று என் கணவருக்காக அவன் ரத்த தானம் செய்ய மறுத்து விட்டால் —'

வள்ளி விதிர்விதிர்த்துப் போனாள்.

''டிரைவர்! நானும் வர்றேன். அவன் காலிலே விழுந்தாவது கூட்டிக்கொண்டு வர்றேன்'' என்று அவளும் ''வானில்'' ஏறிக் கொண்டாள்.

மருத்துவமனை வண்டி, சேரிக்குள் நுழைந்து முனியாண்டி குடிசையின் முன்னால் நின்ற போது —

அவனும் குப்பாயியும் சீவிச்சிங்காரித்துக் கொண்டு திரைப்படத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

டிரைவர், அவனிடம் விஷயத்தைச் சொன்னான்.

''முனியாண்டி! தயவுசெஞ்சு, என் புருஷன் உயிரைக் காப்பாத்துப்பா! ...'' என்று கண்ணீர் மல்கக் கெஞ்சினாள் வள்ளி.

அவனுடைய முகம் கொடூரமாய்த்
திரிந்தது;

''ஏம்மா, கொஞ்ச நாளைக்கு முன்னாலே என் பெண்டாட்டி இதே மாதிரி நிலைமையிலே வந்தப்போ, நீங்க சொன்னதை நான் மறந்திட்டேன்னு நெனைச்சீங்களா? நான் படிக்காதவன் தான். ஆனா ஞாபகமறதிக்காரன் இல்லே'' என்று உறுமினான் அவன்.

''முனியாண்டி! பழையதை நெனைச்சு, என்னைப்பழி வாங்கிடாதேப்பா ... எவ்வளவு பணம் வேணும்னாலும் வாங்கிக்க...''

''பணத்தினாலே வாங்க முடியாத சில விஷயங்களையும் கடவுள் இந்த ஒலகத்திலே படைச்சிருக்காரம்மா! ... கடல் நடுவிலே இருக்கிறவனே, குடிக்கத் தண்ணீர் இல்லாம செத்துப் போயிடறதுண்டு,தெரியுமா?''

வள்ளி அவனைக் கையெடுத்துக் கும்பிட்டாள்;

''முனியாண்டி! என் புருஷன் உயிரை நீதான் காப்பாத்தணும் ... எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடு. . . நான் சுமங்கலியா, விதவையா என்கிறது இப்போ உன்கையிலே தான் இருக்கு. . .'' என்று கழுத்தில் தொங்கிய தாலியை உள்ளங்கையில் ஏந்தியபடி நின்றாள் வள்ளி.

''உங்க கழுத்திலே தங்குறதா இல்லையாங்கிறது அந்த மாங்கல்யம் முடிவு செய்ய வேண்டிய விஷயம்: என் மாதிரி ஏழை கையிலே

ஒன்னும் இல்லே ...'' என்று சொல்லிவிட்டு முனியாண்டி திரும்பி, ''வா குப்பி! சினிமாவுக்கு நேரமாயிடுச்சு . . .'' என்று மனைவியின் கையைப் பிடித்துக் கொண்டு புறப்பட்டான்.

கணவனின் கையை வெடுக்கென்று உதறித் தள்ளினுள் குப்பாயி :

''மச்சான்! இந்தச்சமயத்திலே இவங்களுக்கு நாம் உதவி செய்யலேன்னு, அந்தச் சமயத்திலே நமக்கு இவங்க உதவி செய்யலியேனு குத்தம் சொல்றதுக்கு அர்த்தம் இல்லாமப்போயிடும். . . இவங்களைப் பழிவாங்குற நேரம் இது இல்லே: இப்போ மன்னிச்சு உதவ வேண்டிய நேரம், மச்சான்! மன்னிக்கிறதுதான் மனுஷத்தனம் ... இந்த மாதிரிச் சமயத்திலே ஒரு சுமங்கலிமனசு என்ன பாடுபடும்னு எனக்குத் தெரியும். அந்தக் கஷ்டம், இந்தச் சுமங்கலிக்கு வரவேண்டாம்.''

''என்ன சொல்றே, குப்பி?'' என்று படபடத்தான் கணவன்,

''ஒரு பொண்ணைப் பழி வாங்கிறதிலே நீ ஒரு ஆம்பிளை மாதிரி நடந்துக்கலாம். ஆனல் நான் அப்படி நடத்துக்க முடியாது. ஏன்னு, என் கழுத்திலேயும் ஒரு மாங்கல்யம் இருக்குது . . . போ மச்சான்! ஆஸ்பத்திரிக்குப் போய் ரத்தம் கொடுத்து. இந்தப் பொண்ணோட புருசனைக் காப்பாத்து . . . தப்புச் செஞ்சதுக்காக, மனிதனுக்கு மனிதன் தண்டனை கொடுக்கக் கூடாதுங்க: தப்புக்குத் தண்டனை தர்றதுக்குக் கடவுள் இருக்காரு ....'' என்று மடமட என்று பொரிந்த குப்பி, கணவனைப் பிடித்துத் தள்ளி 'வானு'க்குள் ஏற்றினுள்.

உள்ளமெல்லாம் சிலிர்த்துப்போன வள்ளி, குப்பாயியின் கைகளை இறுகப் பிடித்துக் கொண்டாள்:

''குப்பாயி! என்னை மன்னிச்சு, பெரிய மனசோடே எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடுத்திட்டேம்மா!...''

''இல்லிங்க.. உங்களுக்கு மாங்கல்யப்பிச்சை கொடுக்க வேண்டியவ பூமாயி அம்மன்தான் ... அன்னிக்கு. அவ சன்னிதியிலே கட்டின தாலியை அவிழ்க்க வச்சிங்க இல்லியா, அதுக்குத் தண்டனையாய்த்தான் அம்மன் உங்களுக்கு இந்தச் சோதனையை உண்டாக்கியிருக்கா ... போய் அம்மன்கிட்டே மன்னிப்புக் கேட்டுக்குங்க ...'' என்றுள் குப்பாயி.

அவளுடைய வார்த்தைகள் வியாபாரியின் மனைவி உள்ளத்தில் ஆழமாகத்தைத்துக் குலுக்கின ....

''பூமாயி! உன் மகளின் பூவையும் பொட்டையும் பறிச்சிடாதேம்மா... நாங்க செஞ்ச தப்பை மன்னிச்சுக் காப்பாத்தும்மா ...'' என்று நெஞ்சு நெகிழ பூமாயி அம்மன் கோயிலிருந்த திசையை நோக்கிக் கும்பிட்டாள் வள்ளி.

பூமாயி அவளை மன்னிப்பாளா?

மன்னிப்பாள்!

அவள் உலகத்தின் தாய் அல்லவா? மகள் தப்புச் செய்துவிட்டாள் என்பதற்காகத் தண்டிப்பாளே ஒழிய, பூவைப் பறித்துவிட மாட்டாள்!



# ஸ்ரீ பூமாயி அம்மன் கோயில் திருப்பணியில்

## தனி நபர்களின் திருப்பணிகள்

| | |
|---|---|
| இராஜகோபுரம், விமானம்.<br>ஜாலசகாரம்<br>அம்மன் வெள்ளிப் பாவாடை | ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் டிரஸ்ட்<br>திருப்புத்தூர் |
| நவக்கிரக பிரதிஷ்டை | ஸ்ரீ பழ. சொ. துரைசாமிப் பிள்ளை குமாரர்<br>மாணிக்கவாசகம், தென்மாநகர் |
| ஸ்ரீ பைரவ ஸ்வாமி கோயில் | ஸ்ரீ.பழ.சொ. நடராஜபிள்ளை, ஸ்ரீமதி சரஸ்வதி<br>அம்மாள். தென்மாநகர். |
| பிரகார விநாயகர் கோயில் ... | ஸ்ரீ சுப. சண்முகம் பிள்ளை, திருப்புத்தூர் |
| ஸ்ரீ வள்ளி தெய்வானை ஸ்ரீ சுப்பிரமணிய கோயில்... | தென்மாநகர் பூச்சொரிதல் விழாக் குழுவினர் |
| கர்ப்பக்கிரக தேக்குக் கதவு ... | ஸ்ரீ மா.சி. பெ. பழனிச்சாமி நாடார், திருப்புத்தூர் |
| துவஜஸ்தம்பம் ... | ஸ்ரீமதி சரோஜா ரெங்கநாதன், தம்பி பட்டி |
| மின்விளக்கு அலங்காரம் ... | ஜோதி தீப்பெட்டி கம்பெனியார் |
| அர்த்த மண்டப ஸ்டீல் கதவு | ஸ்ரீ S. A. சாமி ஸ்டோர்ஸ்<br>செக்காலை ரோடு, காரைக்குடி |
| கர்ப்ப கிரகம், அர்த்த மண்டபம்<br>மகா மண்டபம் புதிய கட்டுமானம் | பொதுமக்கள் நன்கொடையும்<br>அரசு மான்யமும் |
| (i) மகாமண்டபத்தில் இருபுறமும் அலுவலக அறைகள்<br>(ii) கோயில் நுழைவாயிலுக்கும், திருக்குளத்திற்கும் இடையில் சிமெண்ட் தளவரிசை போட்டுக் கைப்பிடிச் சுவர் கட்டியது | ஸ்ரீ T. M. ராஜகுரு, திருப்புத்தூர் |

## இதர திருப்பணிகள்

| | |
|---|---|
| மதிற்சுவர் உயர்த்தி. பூதகி சிங்க சுதைகள் அமைத்தது தண்ணீர்க் குழாய், தொட்டி, தளவரிசை வசதிகள் செய்துள்ளது. | ஸ்ரீ நா. ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள்<br>டிரஸ்ட், திருப்புத்தூர் |
| மடப்பள்ளி சீர்திருத்தம் | ஸ்ரீ நா. சுப்பிரமணியம், குமார் ஏஜன்ஸீஸ்<br>திருப்புத்தூர் |

| | |
|---|---|
| கிழக்கு வாயில் இரும்புக்கதவு பழுதுபார்த்தது | டாக்டர் ஸ்ரீ சித. ராஜமாணிக்கம் எம். பி. பி. எஸ். |
| பிரதான நுழை வாயில் கதவு பழுதுபார்த்தது | டாக்டர் ஸ்ரீ மாரிசாமி, எம். பி. பி. எஸ். டாக்டர் ஸ்ரீமதி காந்தாமணி செல்லையா, எம். பி. பி. எஸ். |
| சந்நிதானத்திற்கு எதிரில் மகாமண்டபத்தில் இரும்புக் குழாய்த் தடுப்பு அமைத்தது | ஸ்ரீ நா. ஆறு மாரிமுத்துப்பிள்ளை, காரைக்குடி |
| அர்த்தமண்டப முகப்புச் சிலைகள் அமைப்பு ... | ''ஆறும்'' அலுவலர்கள், திருப்புத்தூர் |
| மகாமண்டபத்தில் கண்ணாடி வென்டிலேட்டர்கள் அமைப்பு | ஸ்ரீ எஸ். செல்லப்பன், திருப்புத்தூர் |
| சுவர்க் கடிகாரம் ... | ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா அலுவலர்கள் திருப்புத்தூர் கிளை |
| சரவிளக்கு ... | ஸ்ரீ ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் டிரஸ்ட், திருப்புத்தூர் |
| ஒலி பெருக்கி அமைப்பு ... | ஸ்ரீ பூமாயி அம்மன் கோயில் கும்பாபிஷேக மலர்க்குழு |
| நிலைக் கண்ணாடிகள் ... | ஸ்ரீ வயி. அருணாசலம் பிள்ளை பூமாயி அம்மன் கோவில் தெரு திருப்புத்தூர் |

## திருப்புத்தூர் ஸ்ரீ பூமாயி அம்மன் கோயில் கர்ப்பக்கிரகம் அர்த்தமண்டபம் மகாமண்டபம் திருப்பணிக்கு ரொக்க நன்கொடை அளித்தவர்கள்

| | | | |
|---|---|---|---|
| தமிழக அரசு | ரூ. ... | 43000 | 00 |
| திருப்பணி உண்டியல் வரவு | ... | 15174 | 16 |
| ஸ்ரீ நா. ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் டிரஸ்ட், திருப்புத்தூர் | ... | 11736 | 77 |
| ,, அர்ச்சுணன் செட்டியார், கிள்ளான் | ... | 5000 | 00 |
| ,, வேலு சேர்வை, சுண்டக்காடு | ... | 5000 | 00 |
| ,, இராம. விஸ்வநாதன், மதகுப்பட்டி அய்யர் ஹோட்டல் திருப்புத்தூர் | ... | 5000 | 00 |
| ,, வயி. முத்தையா பிள்ளை, திருப்புத்தூர் | ... | 5001 | 00 |
| ,, மாணிக்கம் பிள்ளை, மலேசியா | ... | 3714 | 71 |
| ,, முத்துராம் கம்பெனி, மலாக்கா | ... | 3693 | 70 |
| ,, K. ராமச்சந்திரம் பிள்ளை, பினாங்கு | ... | 3598 | 00 |
| ,, வெங்கடாசலம் பாங்கர்ஸ், திருப்புத்தூர் | ... | 3001 | 00 |
| ஸ்ரீமதி ந. சரஸ்வதி அம்மாள், தென்மாநகர் | ... | 3000 | 00 |
| ஸ்ரீ பாபா சாகிப், பினாங்கு | ... | 2000 | 00 |
| ,, PR. நாகரெத்தினம் பிள்ளை, கோலாலம்பூர் | ... | 2000 | 00 |
| ,, கரு. சுப்பையா பிள்ளை, ,, (ஸ்ரீ சேதுமூலம்) | ... | 2000 | 00 |
| ஐம்பது ரூபாய் அச்சுரசீதுகள் 40 ஸ்ரீ P. ஜெகந்நாதன் மூலம் வரவு | ... | 2000 | 00 |
| ஸ்ரீ N. சண்முகம் பிள்ளை, பினாங்கு | ... | 1800 | 00 |
| ,, நா. பெரியசாமி பிள்ளை, பினாங்கு | ... | 1650 | 00 |
| ,, நா. சண்முகம் பிள்ளை பினாங்கு | ... | 1650 | 00 |
| ,, M. பெரியசாமி பிள்ளை ,, | ... | 1250 | 00 |

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ PR. தவசியாப் பிள்ளை பினங்கு | ... | 1051 | 00 |
| ஆறுமுகம் பிள்ளை டெக்ஸ்டைல்ஸ், சிங்கப்பூர் | ... | 1001 | 00 |
| திருப்புத்தூர் நகர் பஞ்சாயத்து | ... | 1000 | 00 |
| ஸ்ரீ குழ. ராமசாமி பிள்ளை, தென்மாநகர் | ... | 1000 | 00 |
| செல்வி R. சுதா, காரைக்குடி | ... | 1000 | 00 |
| வர்த்தகர் (பேட்டையார்) சங்கம், திருப்புத்தூர் | ... | 1000 | 00 |
| M/s குண்டுப்பிள்ளை அண்ட் சன்ஸ், திருச்சி | ... | 1000 | 00 |
| ஸ்ரீ N. S. S. சொக்கலிங்கம் செட்டியார், கண்டவராயன்பட்டி | ... | 1000 | 00 |
| ,, K. ராமன், காரையூர் | ... | 901 | 00 |
| ,, கருப்பையா, பினங்கு | ... | 746 | 66 |
| ,, N. A. தேவராஜன் ,, | ... | 720 | 00 |
| ,, A. அண்ணமலை ,, | ... | 550 | 00 |
| ,, N. PR. ராமச்சந்திரன் ,, | ... | 550 | 00 |
| ,, V. குருசாமி ,, | ... | 550 | 00 |
| ஸ்ரீ C. வடமலை பினங்கு | ... | 550 | 00 |
| ,, K. சுப்பிரமணியன் ,, | ... | 550 | 00 |
| ,, N. KR. சுப்ரமணியம் சேர்வை, திருப்பத்தூர் | ... | 501 | 00 |
| S. PM. மெடிக்கல் மார்ட், ,, | ... | 501 | 00 |
| நெடுமரம் ஊராட்சி | ... | 500 | 00 |
| ஸ்ரீ K. ராமதாஸ் வகையரு | ... | 500 | 00 |
| காரையூர் ஊராட்சி | ... | 500 | 00 |
| ஸ்ரீ அர்ஜுன்லால், சென்னை | ... | 500 | 00 |
| ,, ஆறுமுகம் பிள்ளை, சங்குரும்பை | ... | 375 | 18 |
| ,, மணிவேல், பினங்கு | ... | 360 | 00 |
| ,, S. செல்லசாமி ,, | ... | 360 | 00 |
| ,, பா. நமச்சிவாயம், பேராசிரியர், திருப்புத்தூர் | ... | 301 | 00 |
| ,, S. முகமது, பழக்கடை ,, | ... | 301 | 00 |
| தச்சுத் தொழிலாளர் சங்கம் ,, | ... | 301 | 00 |
| வஞ்சினிப்பட்டி ஊராட்சி | ... | 300 | 00 |
| ப. கருங்குளம் ,, | ... | 300 | 00 |
| கண்டவராயன்பட்டி ,, | ... | 300 | 00 |
| ஸ்ரீ தக்கூர்பாய், காரைக்குடி | ... | 250 | 00 |
| ,, V. K. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை, திருப்பத்தூர் | ... | 250 | 00 |
| ,, S. P. பாலசண்முகம், காரைக்குடி | ... | 250 | 00 |
| ,, S. சுப்ரமணியன், M. Sc., திருப்பத்தூர் | ... | 206 | 00 |
| வேல் முருகன் ஸ்டோர்ஸ் திருப்புத்தூர் | ... | 201 | 00 |
| ஸ்ரீ சே. இ. மு. முகமது காசிம் ராவுத்தர் ,, | ... | 201 | 00 |
| ,, நா. பீர் முகமது ராவுத்தர் ,, | ... | 201 | 00 |
| குமாரப்பேட்டை ஊராட்சி | ... | 201 | 00 |
| பிராமணப்பட்டி ,, | ... | 200 | 00 |
| மகிபாலன்பட்டி ,, | ... | 200 | 00 |
| மணமேல்பட்டி ,, | ... | 200 | 00 |
| ஸ்ரீ காதர்கான் சாகிப் திருப்புத்தூர் | ... | 200 | 00 |
| ,, மு. ப. அ. சொ. முத்து பழனியப்ப செட்டியார், குருவிக்கொண்டான்பட்டி | ... | 200 | 00 |

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ அழகிரிசாமி. சித்ரா. கெடா | ... | 180 | 00 |
| ,, AL மணிப் பிள்ளை பினங்கு | ... | 180 | 00 |
| பாம்பே டெக்ஸ்டைல்ஸ் ,, | ... | 180 | 00 |
| ஸ்ரீ K. P. முத்துராமலிங்கம் ,, | ... | 180 | 00 |
| ,, V. ராமையா ,, | ... | 111 | 00 |
| ,, N. சொக்கலிங்கம், தென்மாநகர் | ... | 101 | 00 |
| ., S. செல்லப்பன் ,, | ... | 101 | 00 |
| ,, S. M. கிருஷ்ணமூர்த்தி பேராசிரியர், திருப்புத்தூர் | ... | 101 | 00 |
| ஸ்ரீ K. பாஸ்கரன், பேராசிரியர், திருப்பத்தூர் | ... | 101 | 00 |
| ., M. SP. ராமச்சந்திரன் திருப்புத்தூர் | ... | 101 | 00 |
| ,, M. ஆண்டியப்பன் சேர்வை ,, | ... | 101 | 00 |
| இளைஞர் எழுச்சிமன்றம் திருப்புத்தூர் | ... | 101 | 00 |
| ஸ்ரீ T. கோவிந்தராஜன், பேராசிரியர் ,, | ... | 101 | 00 |
| ,. M. பாலசுந்தரவதனம் பேராசிரியர் ,, | ... | 101 | 00 |
| .. G. நாகராஜன், ,, | ... | 101 | 00 |
| ,, AL. பழனியப்பன் , இந்தியன் பாங்க். தஞ்சாவூர் | ... | 101 | 00 |
| செவ்வூர் ஊராட்சி | ... | 100 | 00 |
| தெற்கு இளையாத்தங்குடி ஊராட்சி | ... | 100 | 00 |
| விராமதி ,, | ... | 100 | 00 |
| கொன்னத்தான்பட்டி ,, | ... | 100 | 00 |
| தானிப்பட்டி ,, | ... | 100 | 00 |
| கருப்பூர் ,, | ... | 100 | 00 |
| A. வேலங்குடி ,, | ... | 100 | 00 |
| ஸ்ரீ K. மாணிக்கம் திருப்புத்தூர் | ... | 100 | 00 |
| ,, R. M. கல்யாணசுந்தரம் ,, | ... | 100 | 00 |
| ,, D. R. கிருஷ்ணன், முதல்வர், ஆ. பி. சீ. அ. கல்லூரி, திருப்புத்தூர் | ... | 100 | 00 |
| ,, கா. கண்முகசுந்தரம் பிள்ளை, திருப்புத்தூர் | ... | 100 | 00 |
| ,, K. ரெங்கசாமி நாயுடு, அன்னூர் | ... | 100 | 00 |
| ., N. சுந்தரேசன் மதுரை | ... | 100 | 00 |
| ரணசிங்கபுரம் ஊராட்சி | ... | 100 | 00 |
| ராஜேஷ் எண்டர்பிரைசெஸ், சென்னை | ... | 100 | 00 |
| ஸ்ரீ சியாம் பிலிம்ஸ், சென்னை | ... | 100 | 00 |
| ஸ்ரீ சந்த் லக்ஷிமிசந்த், சென்னை | ... | 100 | 00 |
| ,. மா. சவகர்லால் ஆச்சாரி. திருப்பத்தூர் | ... | 100 | 00 |
| ஸ்ரீ C. C. இளங்கோ பினங்கு | ... | 90 | 00 |
| ,, ம. இராமநாதன் அலோர் ஸ்டோர் | ... | 85 | 45 |
| ,, உலகநாதன் பினங்கு | ... | 78 | 00 |
| ,, S. மாணிக்கம் ,, | ... | 75 | 00 |
| ,, T. சந்திரபோஸ் ,, | ... | 75 | 00 |
| ,, S. நாகராஜன் பஸ் ஸ்டாண்ட் திருப்புத்தூர் | ... | 54 | 00 |
| ,, மு. அண்ணுசாமி பிள்ளை ,, | ... | 51 | 00 |
| ,, R. ராஜாமணி ,, | ... | 51 | 00 |
| ,, M. சமஸ்கான் ,, | ... | 51 | 00 |
| ,, S. ராஜேந்திரன் ,, | ... | 51 | 00 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஆறுமுகம் எலக்ட்ரிகல்ஸ் | ,, | ... | 50 | 00 |
| ஸ்ரீ சௌக்கத்அலி | ,, | ... | 50 | 00 |
| ,, R- M- ராமசாமி | ,, | ... | 50 | 00 |
| ,, R. சந்திரன் | ,, | ... | 50 | 00 |
| ,, K. நாஆது | ,, | ... | 50 | 00 |
| ,, A. பொன்னழகு | ,, | ... | 50 | 00 |
| ,, சோமஸ்வரன் மதுரை | | ... | 50 | 00 |
| ,, AR. வேதமூர்த்தி பினங்கு | | ... | 40 | 00 |
| ,, S. பிச்சுமணி | திருப்புத்தூர் | ... | 25 | 00 |
| ,, RM. கனகாம்பரம் | ,, | ... | 25 | 00 |
| ,, A. முகமது அலி ஜின்னா | ,, | ... | 25 | 00 |
| ,, கா. ராமநாதன் | ,, | ... | 25 | 00 |
| ,, சந்திரன் | ,, | ... | 25 | 00 |
| ,, S. நாகராஜன் No. 1 ஸ்டால் | ,, | ... | 25 | 00 |
| ,, ஆறு. சண்முகம் | ,, | ... | 25 | 00 |
| ,, SP- ஆறுமுகம் திருப்பத்தூர் | | ... | 25 | 00 |
| ,, N. அண்ணாமலை காரைக்குடி. | | ... | 21 | 00 |
| ,, M, பாலசுப்பிரமணியம் கோவை | | ... | 20 | 00 |
| ,, R. சிவசுப்ரமணியன் திருப்பத்தூர் | | ... | 15 | 00 |
| ,, H. V. கிருஷ்ணமூர்த்தி கோவை | | ... | 15 | 00 |
| ,, முகமது யூசுப் அனந்தர் திருப்பத்தூர் | | ... | 10 | 00 |
| ,, A. ஆரோக்கியசாமி | | ... | 5 | 00 |
| ,, முகமது இப்ராஹிம் | | ... | 5 | 00 |
| ,, P. பூமிநாதன் | | ... | 5 | 00 |
| ,, சபேசன் | | ... | 5 | 00 |
| ,, சேதுராமசாமி | | ... | 5 | 00 |
| ,, காசிவடுகன் | | ... | 5 | 00 |
| ,, சீனிவிநாயகர் புதுப்பட்டி | | ... | 5 | 00 |
| ,, J. ராமசாமி கண்ணப்பா A. தெக்கூர் | | ... | 5 | 00 |
| ,, V. வீரப்பன் | ,, | ... | 5 | 00 |
| ,, கல்யாணி முருகப்பன் | ,, | ... | 5 | 00 |
| ,, கணேஷ் கிருஷ்ணன் வேந்தன்பட்டி | | ... | 5 | 00 |
| ,, M. S. சீனிவாசன் திருப்பத்தூர் | | ... | 5 | 00 |
| ,, N. சுந்தரேசன் மதுரை | | ... | 5 | 00 |
| ,, P. நாராயணன் புதுக்கோட்டை | | ... | 5 | 00 |
| ,, P. குமரேசபாண்டியன் | ,, | ... | 5 | 00 |
| ,, TM. சேது திருப்பத்தூர் | | ... | 5 | 00 |
| ஒரு ரூபாய் அச்சு ரசீதுகள்மூலம் | | ... | 3227 | 00 |
| இதர வகை வரவுகள் | | ... | 7245 | 60 |
| உண்டியல் வருமானம் | | ... | 347 | 98 |
| | ஆக மொத்தம் | ... | 159074 | 21 |